

# மின்தமிழ்மேடை

30

தமிழ் மரபின் வரலாற்று ஆய்வை மேம்படுத்துவோம்!



தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு

வெளியிடும் காலாண்டிதழ் காட்சி: 30 ஜூலை - 2022

https://www.tamilheritage.org/

***பொறுப்பாசிரியர்: முனைவர் தேமொழி***







*Attribution-NonCommercial-ShareAlike*

*4.0 International (CC BY-NC-SA 4.0)*

~*~*~*~*~*~*

குறிப்பு:

தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் பதிப்பகப் பிரிவின் வெளியீடு இது. இந்த நூல் தமிழ் ஆய்வுப்புலத்தின் தேவை கருதி அனைவருக்கும் இலவசமாக வழங்கப்படுகிறது. இந்நூலை மறுபதிப்பு செய்ய விரும்புவோர் அல்லது ஏதாவது ஒரு வகையில் தங்கள் படைப்புகளில் பயன்படுத்த விரும்புவோர் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பினைத் தொடர்பு கொண்டு அனுமதி பெற்று உசாத்துணைகளை வழங்கி மீள்பதிப்பு செய்யலாம்.

- தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் பதிப்பகப் பிரிவு

~*~*~*~*~*~*

# தலையங்கம்: தமிழ் மரபின் வரலாற்று ஆய்வை மேம்படுத்துவோம்

— *முனைவர் க.சுபாஷிணி*



*வணக்கம்.*

*அனைவரையும் தமிழ் மரபு அறக்கட்டளையின் ஆய்வுக் காலாண்டிதழின் ஊடாகச் சந்திப்பதில் மகிழ்ச்சி அடைகிறேன்.*

*2014 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் தொடங்கிய பயணம்... இந்தக் காலாண்டிதழோடு தமிழ் மரபு அறக்கட்டளையின் 30 ஆய்வுக் காலாண்டிதழ்களாக வெளிவந்துள்ளன. இந்த 30 காலாண்டிதழ்களும் தன்னுள்ளே சேகரித்து வைத்து வரலாற்று ஆய்வாளர்களுக்கு வழங்கி இருக்கும் வரலாற்றுச் செய்திகள் ஏராளம்... ஏராளம். தொடர்ச்சியாக உலகின் பல்வேறு பகுதிகளிலிருந்து வரலாற்றுச் செய்திகளை ஆவணப்படுத்த வேண்டும் என்ற முனைப்போடு இயங்கிக் கொண்டிருக்கும் பல ஆர்வலர்களின் ஆய்வு நாட்டமும் முயற்சியுமே இதனை சாத்தியப்படுத்தியுள்ளன.*

வரலாறு, தமிழ்மொழி சார்ந்த ஆய்வுகள், சமூகவியல் பார்வை, மானுடவியல் பார்வை, தொல்லியல் அகழாய்வுச் செய்திகள் எனப் பன்முகத்தன்மையோடு இந்த 30 காலாண்டிதழ்களும் இதுவரை வெளிவந்திருக்கின்றன. இவை மட்டுமின்றி கவிதைகளும் இந்தக் காலாண்டிதழ்களை அலங்கரித்திருக்கின்றன.

தொடர்ச்சியாக எந்தத் தொய்வும் இல்லாமல் இயங்கிக் கொண்டிருக்கும் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் பல்வேறு செயல்பாடுகளும், நாம் வெளியிட்ட அறிக்கைகளும், நமது பரிந்துரைகளும் கூட இந்த காலாண்டிதழ்களில் இடம் பெற்றிருக்கின்றன. அந்த வகையில் நாம் நடத்திய கல்வெட்டுப் பயிற்சிகள், மரபுப் பயணம் தொடர்பான செய்திகள், சமூக அக்கறையுடன் அவசர காலங்களில் தேவையுள்ளோருக்கு நாம் வழங்கிய இடர் கால உதவிகள் பற்றிய அறிக்கைகள், கருத்தரங்குகளில் நமது பங்களிப்பு, தமிழக அரசுக்கு நமது பரிந்துரைகள், நமது ஆய்வுக் காணொளிகள் மற்றும் ஆய்வாளர்களுடன் பேட்டிகள் எனத் தகவல் களஞ்சியமாக நமது மின்தமிழ் மேடை காலாண்டிதழின் 30 தொகுப்புகளும் திகழ்கின்றன.

இந்த 30 தொகுப்புகளையும் அதன் முதல் இதழ் தொடங்கி இன்று வரை தொகுத்து, முறையாக அவற்றை நூல் வடிவில் வடித்து, தரமான முறையில் ஒவ்வொரு காலாண்டிதழையும்

உருவாக்கி அளித்திருப்பவர் இதன் பொறுப்பாசிரியர் முனைவர் தேமொழி. எடுத்துக்கொண்ட பணியை ஆய்வு திறத்துடனும், கடமை உணர்ச்சி சிறிதும் குறையாமலும் மேன்மேலும் காலாண்டிதழ்களின் தரத்தை உயர்த்தி சிறப்புற வடிவமைத்து வெளியிடும் பணியை மிகச் சிறப்பாகச் செய்துள்ளார். அவருக்கு எனது நெஞ்சார்ந்த பாராட்டுதல்களையும் வாழ்த்துகளையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ் மரபு அறக்கட்டளையின் இந்த 30 காலாண்டிதழ் தொகுதியும் கொண்டிருக்கும் செய்திகள் ஆய்வு மாணாக்கர்களுக்கும் பொதுமக்களுக்கும் மிகப் பல செய்திகளை வழங்குகின்றன. மின்னிதழ்களாக உள்ள இவற்றை அச்சு வடிவத்தில் அச்சுப்பதிப்பாக்கம் செய்து உங்கள் வீட்டு நூலகங்களில் இணைத்து வைத்துக் கொள்ளுங்கள். அவை நிச்சயம் உங்கள் வாசிப்பிற்கும், ஆய்விற்கும், சிந்தனைக்கும் உதவும் என நான் உறுதியாக நம்புகிறேன்.

இன்றைய நமது கல்விச்சூழல் என்பது ஆய்வுத் தரம் குறைந்தும், அவசரகதியிலும், சான்றிதழ் பெறுவதையே நோக்கமாகக் கொண்டும் என்பன போன்ற வகையில் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன. இத்தகைய போக்கு

தரமான ஆய்வுகள் வெளிவர உதவாது. இத்தகைய போக்கு மாற வேண்டும்.

வரலாற்றுச் செய்திகளையும் தொல்லியல் அகழாய்வுச் செய்திகளையும் ஆர்வத்துடன் வாசிக்கும் தமிழ் மக்கள் இந்த வாசிப்புக்கான எல்லையை தமிழ்நாடு என்ற நில அளவில் குறுக்கிக்கொள்ளாமல், உலகளாவிய வகையில் தங்கள் ஆய்வுப் பார்வையைச் செலுத்த வேண்டும். அத்தகைய பார்வை மனித இனத்தின் வரலாற்றை அறிந்து கொள்வதில் புதிய தெளிவுகளை நிச்சயம் உருவாக்கும்.

மேற்கூறிய குறைபாடுகளை நிவர்த்தி செய்யும் வகையில் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் ஆய்வுக் காலாண்டு இதழ்களான மின்தமிழ்மேடை இதழ்கள் உயர்ந்த, தரம் மிக்க பல கட்டுரைகளைக் கொண்டிருக்கின்றன. இவற்றைத் தரவிறக்கி நீங்கள் வாசிப்பதோடு உங்கள் நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் இந்த அறிவு களஞ்சியங்களைப் பகிர்ந்து கொள்ளுங்கள்.

தமிழால் இணைவோம்!

அன்புடன்
முனைவர்.க.சுபாஷிணி

# இந்த இதழில் ...

## மின்தமிழ்மேடை: காட்சி – 30: ஜூலை – 2022 வெளியீடு

**"தமிழ் மரபின் வரலாற்று ஆய்வை மேம்படுத்துவோம்"**

(மின்தமிழில் ஏப்ரல் 16, 2021 – ஜூலை 15, 2022 வரை
பதிவான படைப்புகளின் தொகுப்பு)

## இந்த இதழில் ...

## இந்த இதழில்...

## இந்த இதழில்...

# 1. அணிநடை எருமை

— *ஆர். பாலகிருஷ்ணன் இ.ஆ.ப.*

*எத்தனை முறை தோண்டினாலும் சங்கச்சுரங்கத்தில் ஏதோ ஒன்று புதிதாகக் கிடைத்துக்கொண்டே இருக்கிறது. எப்படித் தவறவிட்டோம் என்ற ஆதங்கம்; இப்போதாவது கவனித்தோமே என்ற ஆறுதல். 'அண்ணல் ஏறு' என்றும் 'அணிநடை எருமை' என்றும் எருமைக்குப் பொன்னாடை போர்த்திய இலக்கியம் வேறெதுவும் இருக்கிறதா? அண்ணல் என்பது எவ்வளவு பெரிய வார்த்தை. தலைமை. அரசன். பெருமையில் சிறந்தோன். முல்லைநிலத் தலைவன். கடவுள் என்று பொருள்விளக்கம் அளிக்கிறது தமிழ்க்களஞ்சியம். 2020 செப்டம்பர் 5-ம் தேதி அணிநடை எருமை பற்றி இணைய வழியில் இரண்டு மணி நேரம் கொட்டித்தீர்த்தேன். மனசு ஆறியது.*

*பண்பாட்டிற்கும் மொழிக்குமான உறவு எத்தகையது? வார்த்தைகளைப் பண்பாடு செதுக்குகிறதா? அல்லது, பண்பாட்டு அசைவுகளை வார்த்தைகள் வழிநடத்துகின்றனவா? சங்க இலக்கிய அணி நடை எருமைக்கும், 'எருமை மாடு மாதிரி வளர்ந்திருக்கான்', 'எருமை மாட்ல மழை பேஞ்ச மாதிரி', 'சொரணை கெட்ட எருமை', 'மேய்க்குறது எரும, அதுல என்ன பெரும' என்ற*

*சமகாலச் சொல்லாடல்களுக்கும் எவ்வளவு தூரம்! அது நாம் இந்த இரண்டாயிரம் ஆண்டுகளில் சறுக்கிவிழுந்த தூரம்.*





*நீர் எருமை இந்தியாவின் பெருமை. 6300 ஆண்டுகளுக்கு முன்பே வீட்டு விலங்காகப் பழக்கப்பட்டது. சிந்துவெளி மக்கள் மெசபடோமியாவுக்கு எருமைகளை ஏற்றுமதி செய்தார்கள். சிந்துவெளி முத்திரைகளில் எருமையின் உருவம்: எருமைக்கொம்பைத் தலையில் சூடிய மனிதன்; செம்பில் செய்த எருமை உருவ பொம்மை: மண்பாண்டங்களில் எருமை ஓவியங்கள்; வழிபாட்டு முறையில் எருமைப் பலி.*

*சத்தீஸ்கர் மாநிலத்தின் பஸ்தர் பகுதியில் காட்டெருமைக் கொம்புகளைத் தலையில் அணிந்து ஆடும் முரியா என்ற திராவிடப் பழங்குடிகளைப் பார்த்தேன். சிந்துவெளிப்*

பொறிப்பு நினைவுக்கு வந்தது. நீலகிரித் தோடர்களின் உலகம் எருமைகளால் ஆனது. எருமைகளே தோடர்களின் செல்வக்குறியீடு. எருமைப் பால்தொழுவம்தான் புனிதக் கோயில். ஈமச் சடங்குகளில் எருமைப்பலி.








இதுவரை எனது புரிதல் இது தான். சிந்துவெளிப் பண்பாடு, சங்க இலக்கியம், பழங்குடிகளின் வாழ்வியல் ஆகிய மூன்று தளங்களில் ஒரு கருத்தியல் முன்னிலை பெறுகிறது என்றால்

அது இந்தியத் துணைக்கண்டப் பண்பாட்டின் தொப்புள்கொடிகளோடு தொடர்புடைய அடித்தளங்களில் ஒன்று என்று கண்ணை மூடிக்கொண்டு சொல்வேன். எருமை சார்ந்த பண்பாட்டு மரபும் அப்படிப்பட்ட ஓர் அடையாளம்.



எருமைக்கொம்புகள் சங்ககாலத் திருமணச் சடங்குகளில் வழிபாட்டுக்குரிய வளமைக்குறியீடு. இப்போது, எருமை எதிரே வந்தால் சகுனம் சரியில்லை என்று தெறித்து ஓடுகிறோம். எங்கள் வீட்டில் ஓர் எருமை வளர்த்தோம். பிறகு அந்த எருமையை விற்றுப் பசுமாடு வாங்கியது திடீரென்று நினைவுக்கு வந்தது. இவ்வளவு காலம் கழித்து, அண்மையில்

தான் அம்மாவிடம் தொலைபேசியில் காரணம் கேட்டேன். "எருமை மாடு குடும்பத்திற்கு ராசி இல்லை" என்று ஜோசியர் சொன்னாராம். ஆனால் எனக்கு எருமையைப் பிடிக்கிறது.



"கோடை விடுமுறையில் எருமைகளோடு குளித்த தாமரைக்குளம்.
'நல்லது' என்று மிதித்த
யானை லத்திகள்"
என்று கவிதை எழுதினேன் ('அன்புள்ள அம்மா', 1991).

1985-ல் ஒடிசாவில் கட்டாக் நூலகம் ஒன்றில் எதேச்சையாகக் கண்ணில்பட்டது நீலகிரி தோடர்கள் பற்றிய நூல். எருமைகள்

*பற்றிய எனது முதல் வாசிப்பு. 1988-ல் கோராபுட்டில் ஒரு பழங்குடி கிராமத்தில் பலி எருமையின் இறைச்சியைப் பங்கிடுவதைப் பார்த்தேன் 1989-ல் கதபா பழங்குடிகளின் நீத்தார் நினைவுச் சடங்கில் மொய்க்கொடையாகக் கைமாறும் உபரி எருமை சுழல் விநியோக முறையை ஆராய்ந்தேன். 1989-ல் ராஞ்சியில் இந்தியப் பழங்குடிகள் விழாவில் நீலகிரி பழங்குடிகளைச் சந்தித்துப்பேசினேன். 1990களில் நீலகிரி பழங்குடி கிராமங்களுக்குச் சிலமுறை சென்றேன். ஆனால் சிந்துவெளிக்கும் பழந்தமிழகத்திற்குமான தொடர்புகள் பற்றிய புரிதல் எனக்குள் துலங்கிய பிறகே தோடர்களின், எருமைகளின் புலப்பெயர்வு திசைகளை இடப்பெயர் சான்றுகளால் நிறுவ முடியுமா என்று தோண்டித் துருவினேன். தோடா எருமைகளின் மரபணு பற்றிய ஒப்பீட்டு ஆய்வுகள் இப்போது உதவுகின்றன.*



அணிநடை எருமைக்காகக் கணிப்பொறியில் எனது பழைய ஆவணங்களைத் துழாவினேன். குறிப்பேடுகளைப் புரட்டிப் பார்த்தேன். தோடர்கள், தோடா எருமைகள், துளு மொழிப்பகுதிகளின் கம்பலா என்ற எருமைப் பந்தயம், கேரளத்தின் எருமை ஓட்டம், ஒடிசாவின் சிலிகா எருமைகள் என்று எவ்வளவு தரவுகளைத் தேடித்தேடிக் குறிப்பெடுத்திருக்கிறேன், எத்தனை இரவுகள், விடுமுறைகள் இப்படிக் கழிந்தன. இவற்றையெல்லாம் எப்போது எழுதப்போகிறேன்? தமிழ் நெடுஞ்சாலை மலரும் நினைவுகள் மட்டுமல்ல; வளரும் கனவுகளும்கூட.

இந்தியாவில் 11 கோடி எருமைகள். எண்ணிக்கையில் உலகில் முதலிடம். இந்தியாவின் பால் உற்பத்தியில் கிட்டத்தட்ட 50 விழுக்காடு எருமைப்பால். பசுமாட்டுப்பால் உற்பத்தியில் சீமைப்பசு எனப்படும். கலப்பு மாட்டுப்பால்தான் அதிகம். ஆனால் எருமை வகைகளில் சீமை எருமை என்று ஏதுமில்லை. எருமை 100 விழுக்காடு இந்தியன்! பாக்கெட் பால் பெரும்பாலும் பசும்பால், எருமைப்பால் இரண்டும் சேர்ந்த கலவைதான் என்பது போன்ற தகவல்களை எனது ஆட்சிப்பணி நண்பர் தருண் ஸ்ரீதர் எழுதிய கட்டுரை மூலம் அறிகிறேன். ஒன்றிய அரசின் கால்நடை வளர்ப்புத்துறைச் செயலராக இருந்தவர். 'Don't allow it to be cowed down' என்ற இவரின் கட்டுரைத் தலைப்பே கவர்ந்திழுத்தது. 'மெரிட்' படி

*பார்த்தால் எருமைதான் அருமை என்று அடித்துச் சொல்கிறார் ஸ்ரீதர்.*

*2018-19-ம் ஆண்டு இந்தியாவி லிருந்து ஏற்றுமதியான எருமை இறைச்சியின் மதிப்பு 25,168.31 கோடி ரூபாய். "பசு மாடுகளை நேசிப்போர் எருமைகள் மீது காட்டும் பாராமுகத்தைக் கண்டு நான் அதிர்ச்சிஅடைகிறேன்" என்கிறார் மேனகா காந்தி. "எருமை இனப்படுகொலை உத்தரப்பிரதேசம், ஹரியானா, பஞ்சாப், குஜராத், ராஜஸ்தான், பீகார், ஆந்திரப்பிரதேசம் ஆகிய மாநிலங்களில் அதிகம்" என்பதையும் அவர் சுட்டிக்காட்டுகிறார். 'பசு புனிதமானது என்றால் எருமையும் புனிதமானது' என்பது மேனகா காந்தியின் நிலைப்பாடு. இதில் எனது அக்கறை மாட்டிறைச்சி பற்றியது அல்ல. எருமைகளுக்கு எதிரான ஓரவஞ்சனையைப் புலன்விசாரிப்பது.*

*சிந்துவெளியில் குதிரைகள் இல்லை. காளை பொறிப்பு இருப்பதால் கட்டாயம் பசு இருந்திருக்கும். ஆனால் பொறிப்புகளில் பசுக்கள் இல்லை.*

*எருமை, நல் ஆன், கருநாகு, இருள் நிறமை ஆன், நீல இரும்போத்து, கயவாய் எருமை என்று எருமைகளை விழுந்து விழுந்து வர்ணிக்கிறது சங்க இலக்கியம். நீரில் படகுபோல மிதக்கும் எருமை. எருமையின் முதுகில் சவாரி செய்யும்*

சிறுவன், பொதுத் தொழுவில் இருக்கும் மன்ற எருமைகள் என்று கூர்ந்த கவனிப்பு உள்ளது. சங்க இலக்கியங்களில் எருமை பற்றிய இழிவான குறிப்பு எதுவுமே இல்லை.



எருமை கூடிவாழும் குடும்ப விலங்கு. எருமையைச் சிறுவர்கள்கூட எளிதில் கையாளலாம். ஐங்குறுநூற்றில் ஓரம்போகியார் எழுதிய 'எருமைப்பத்து' எருமைகளின் உளவியல், செயல்பாடுகளின் ஊடான காதல் வாழ்வியல். அஞ்சாமல் போரிடும் வீரன் பற்றிய புறப்பாடல் துறையின் பெயர் 'எருமை மறம்'. அகமும் புறமும்தானே தமிழ்! பாண்டிய மன்னனை எதிர்த்துப் போரிட்ட குறுநிலத்தலைவர்களில் ஒருவன் பெயர் எருமையூரன். எருமையூரான மைசூரில் (மஹிஷாசுர்) சாமுண்டி மலையில் நிற்கையில் நினைவில் சங்க இலக்கியம்.

பசு மாடுகளின் சமயம் சார்ந்த புனிதத்தன்மையை முன்னிறுத்தும் மரபு சங்க இலக்கிய காலத்திலேயே காலூன்றத் தொடங்கிவிட்டது. மதுரையை எரித்த கண்ணகியின் விதிவிலக்குப் பட்டியலில் பசு இருந்தது; எருமை உள்ளிட்ட பிற விலங்குகள் இல்லை,

இந்தியாவில் சாலையில் திரியும் கால்நடைகளின் எண்ணிக்கை 50 லட்சத்திற்கும் மேல். ஆனால், அநாதையாகத் திரியும் எருமைகளைக் காண முடியாது. அதுவே எருமையின் பெருமைதான். தோடர்களில் அநாதை என்று எவருமில்லை என்று தோடர் பழங்குடிப்பெண் வாசமல்லி கூறும் காணொளி நினைவுக்கு வந்தது. பெருமைக்காக மேய்க்காவிட்டாலும் பொருளியல் அடிப்படையிலாவது எருமையின் அருமையைப் பேசலாம். 'எப்பிடி இருந்த எருமை இப்பிடி ஆகிருச்சு' என்று உச்சுக்கொட்டி நகர்வதற்கு இல்லை இந்த அணிநடை எருமை. 'பசுக்கப்பட்ட' எருமை என்பது வேறொன்றுமில்லை. நசுக்கப்பட்ட மக்கள் வரலாற்றின் இன்னொரு முகம்தான்.

அறியப்படாத தமிழகம்' நூலில் தொ.பரமசிவன் சொல்கிறார். "இன்றைய நிலையில் 'கறுப்பு-சிவப்பு' என்பது வெறும் அழகுணர்ச்சி சார்ந்த பிரச்சினையன்று. அது மரபுவழி அழகுணர்ச்சியிலிருந்து திசைமாற்றப்பட்டவர்களின்

அதிகார வேட்கைக்கும் மரபுவழிச் சங்கிலியால் பிணைக்கப்பட்ட எளிய மக்களுக்கும் இடையிலே நிலவிவரும் ஒரு முரண்பாடு ஆகும். மேட்டிமையின் சிவந்த நிறம் அழகு நிறைந்ததாகக் காட்டப்படுகிறது" என்கிறார் அவர். 'மணமகள் தேவை' விளம்பர வாசகங்கள் மனதில் தோன்றுகிறது. எனக்குள் சிரிக்கிறேன்.

அணிநடை எருமை எமனின் வாகனம் ஆனது எப்போது? எருமை அரசன் எப்போது மஹிஷாசுரன் ஆனான்? தாய்த்தெய்வமான கொற்றவை துர்க்கையாகி மஹிஷாசுரனை யாருக்காக வதைத்தாள்? சிந்துவெளியில் இல்லாத சிங்கத்தின் மீது ஏன் அமர்ந்து கொன்றாள் இந்திய எருமையை?" என்ற கேள்விகள் என்னைத் துரத்தின.

டெல்லியில் ஜவஹர்லால் நேரு பல்கலைக்கழகத்தின் சமஸ்கிருதப் பேராசிரியர் உபேந்தர் ராவை ஒருமுறை சந்தித்தபோது சில புதிய தகவல்கள் கிடைத்தன இப்போதெல்லாம் சமஸ்கிருத ஆவணங்கள் இணையத்தில் ஆங்கில மொழிபெயர்ப்புடன் கிடைப்பதும் வசதியாகப் போய்விட்டது. வட மொழியில் 'அஷ்வரிபு' என்ற சொல்லுக்கு 'குதிரையின் எதிரி' 'எருமை' என்று இரண்டு பொருள். எருமையைத் தொடக்கத்தில் ஒரு காட்டு விலங்காகவே (ஆரண்யபக) ஆரியர்கள் கருதினர். வேதங்களில் எருமையைக் குறித்த 'உஷ்ட்ரா' என்ற வார்த்தைப் பின்வந்த

இலக்கியங்களில் ஒட்டகத்தையும் ஓர் அசுரனையும் குறித்தது. 'கக்ஷஹ' என்றால் பாவமும் (sin) எருமையும். அழுக்கானது, துர்நாற்றம் என்ற பொருளில் வழங்கும் 'கலுஷா' எருமையையும் குறிக்கிறது. 'க்ரோடீ என்ற சொல் காண்டாமிருகத்தையும் எருமையையும் சுட்டுகிறது. 'கால வாகன' என்பதில் எருமை எமனின் வாகனம். மஹிஷத்வஜ, மஹிஷாக, மஹிஷவாஹன போன்ற பதங்கள் எமனைக் குறிக்கின்றன. பசு வதை செய்பவர்களைத் தண்டிப்பது, கொல்வது பற்றி ரிக், யஜூர், அதர்வண வேதங்கள் குறிப்பிடுகின்றன.

சமஸ்கிருத மொழி பேசியவர்கள் தொடக்கத்தில் எருமை, காண்டா மிருகம், ஒட்டகம் போன்ற விலங்குகளை நெருக்கமாக அறிந்திருக்கவில்லை. சமஸ்கிருத மொழியினரால் எருமை ஒரு காட்டு விலங்காகக் கருதப்பட்டது. சிந்துவெளி மக்கள் எப்படி குதிரையை அறியாதவர்களோ அதுபோல சமஸ்கிருத மொழி பேசியோர் எருமையை ஒரு வீட்டு விலங்காக அறியாதவர்கள். எனவே அவர்கள் எருமையை குதிரையின் எதிரியாகக் கருதியதில் வியப்பில்லை. எருமையோடு புழங்கி சிந்துவெளி முத்திரையில் எருமை உருவத்தை பொறித்து, வணிகப் பொருளாக ஏற்றுமதி செய்து, வழிபாட்டு முறைகளில் எருமைப்பலி நடத்திய சிந்துவெளிப் பண்பாட்டு மரபில் வந்த மக்களுக்கும், குதிரையை மிக முக்கியமாகக் கருதிய,

அஸ்வமேத யாகங்கள் நடத்திய மக்களுக்கும் மோதல்கள் முரண்பாடுகள் இயல்பானதே. மொத்தத்தில் வாழ்வியலுக்கும் மொழிக்குமான உறவு என்னை வியப்பில் ஆழ்த்துகிறது.

கவிஞர் வெய்யில் எழுதியுள்ள 'ஞான எருமை' என்ற எதிர் ஆன்மிகக் கவிதைகளை (இன்னும் வெளியாகவில்லை!) படித்து அசைபோடுகிறேன்.

"தெய்வங்கள்
வைக்கோல் படப்பைக் கொளுத்துகின்றன
பேய்கள்
மழையைப் பொழிவிக்கின்றன
எருமை நனைந்தபடி
எரியும் வைக்கோலைத் தின்கிறது".

கல்வெட்டு, கட் அவுட், முண்டாசு, முதல் மரியாதை என்ற எந்தக் கவலையும் இல்லாமல் 'அணிநடை எருமை' நடந்துபோகிறது ஆதியின் அசைவாய். நான் அதைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். எருமையின் மீது எதற்கு இந்த ஓரவஞ்சனை? யார் வைத்த எந்த நுழைவுத் தேர்வில் இந்த எருமை தேர்ச்சிபெறவில்லை?

(ஆனந்த விகடனில் வெளியான "தமிழ் நெடுஞ்சாலை" தொடரில் இடம்பெற்ற ஒரு கட்டுரை இது )

## 2. சோழர் காலக் கோயில் நிர்வாகமும் செப்பேடு ஆதாரங்களும்

— முனைவர் எஸ். சாந்தினிபீ

அறநிலையத் துறைக் கட்டுப்பாட்டில் இல்லாத கோயில்கள் சார்ந்த நிதி முறைகேட்டுப் புகார்கள் அவ்வப்போது எழுகின்றன. இப்படிப் புகார்கள் எழும்போது, அதில் அரசு தலையிட முயன்றால், கோயிலை நிர்வகிப்பவர்கள் எதிர்ப்பதையும் காண முடிகிறது. இதுபோன்ற நிர்வாகச் சிக்கல்கள், அந்தக் கால அரசர்களின் ஆட்சிக் காலத்தில் வந்ததில்லையா? அந்தக் காலத்தில் கோயில்களை அமைத்த அரசர்கள் அதற்கான நிதி நிர்வாகத்தைத் தெளிவாக முறைப்படுத்தி வைத்திருந்தனர். இதற்காக எழுதப்பட்ட செப்புப் பட்டயங்கள் இன்றும் அரசர் காலத்துச் சாட்சிகளாக உள்ளன.

கோயில் நிதியையும் நிர்வாகத்தையும் கட்டுப்பாட்டில் வைத்திருக்கும் பணியை அக்காலம் முதல் நம் ஆட்சியாளர்கள் தொடர்ந்து செய்துவருகின்றனர். கோயிலைக் கட்டிய அந்தக் கால மன்னர்கள், அவற்றின் நிர்வாகத்தில் இன்றைய அரசு மற்றும் நீதித் துறைகளைக் காட்டிலும் பன்மடங்கு அதிகக் கவனம் செலுத்தி வந்துள்ளனர். குறிப்பாக, சோழ மன்னர்கள் காட்டிய

*கவனத்தில் எந்தக் குறையையும் காண முடியாது. இவர்கள் ஆழ்ந்து ஆலோசித்து, முடிந்த வரையில் தவறான பயன்பாடுகளைத் தடுக்க முயன்றுள்ளனர்.*

*எனினும், அவர்களாலும் கோயில்களின் நிதி நிர்வாகத்தில் நூறு சதவீதம் புகார் எழாமல் பராமரிக்க முடியவில்லை. அதே நேரம், இது சார்ந்து சோழ மன்னர்களின் முயற்சிகள் பெரும் பாராட்டுக்குரியவை. இதற்கான ஓர் உதாரணம், அன்று கச்சிப்பேடு என்றழைக்கப்பட்ட காஞ்சிபுரத்து உலகளந்தப் பெருமாள் கோயிலின் செப்பேடு. 'மெட்ராஸ் மியூசியம் செப்பேடு' என்று பரவலாக அறியப்படும் ஐந்து ஏடுகளைக் கொண்ட இது. சென்னை அரசு அருங்காட்சியகத்தில் இன்றும் பாதுகாத்துவைக்கப்பட்டுள்ளது. இவற்றில் முக்கியச் செய்திகள் கிடைத்தாலும் முடிவில் மட்டும் ஒன்றிரண்டு ஏடுகள் காணாமல் போயுள்ளதால், சில விஷயங்கள் கிடைக்கவில்லை.*

***மன்னருக்கு நினைவூட்டல்:***

*உத்தம சோழனின் 16வது ஆட்சி ஆண்டில் (பொ.ஆ. 965) வெளியிடப்பட்டது இந்தச் செப்பேடு, அவருக்குப் பின் பேரரசர் முதலாம் ராஜராஜன் அரியணையில் அமர்ந்தார். சோழ மன்னர்களுக்குப் பொதுவாக நாட்டின் பல பகுதிகளுக்கும் நேரில் சென்று தங்கி, நிர்வாகத்தைக்*

கவனிக்கும் வழக்கம் உண்டு. ஒருநாள், தலைநகர் தஞ்சையிலிருந்து காஞ்சிபுரத்திற்கு அலுவல் நிமித்தமாக மன்னர் உத்தம சோழன் சென்றிருந்தார். அரண்மனையின் தென்புறத்தின் சித்திர மண்டபத்தில் அமர்ந்திருந்தவரிடம் ஒரு அலுவலர், காஞ்சியிலுள்ள பெருமாள் கோயில் நிர்வாகத்தைச் சீரமைக்கும் கடமை உள்ளதாக மன்னரிடம் நினைவூட்டினார்.

அன்று 'ஊரகப் பெருமாள் கோயில்' என அறியப்பட்டதுதான் இன்றைய காஞ்சிபுரத்தின் உலகளந்த பெருமாள் கோயில். இக்கோயிலின் வரவு செலவுக் கணக்கு, திருவிழா செலவு, திருவிழாக் காலப் பணிப் பங்கீட்டு முறை போன்ற பல செய்திகளை இச்செப்பேடு பதிவுசெய்துள்ளது. இதன்படி பல ஊர்சபைகள் இக்கோயில் இருப்பிலிருந்து பொன்னைக் கடனாகப் பெற்று அதற்கான வருடாந்திர வட்டித் தொகை, கோயில் நிலங்களிலிருந்துவரும் வருமானம் ஆகியவை வரவாகக் கணக்கிடப்பட்டுள்ளன. இதில் சங்கராந்தி, சித்திரை விஷு (இன்றும் கேரளத்தில் கொண்டாடப்படுகிறது) ஆகிய இரண்டு திருவிழாச் செலவுகளும் சொல்லப்பட்டுள்ளன.

இந்தத் திருவிழாக்களில் இறைவனுக்கான படையல் பொருட்கள், வாசனைப் பூச்சு, காய் பழம், வெற்றிலைப் பாக்கு, விளக்குக்கான எண்ணெய் சமையலுக்கான விறகு

உட்பட பலவற்றிற்குமான தொகை கூறப்பட்டுள்ளது. கலைஞர்கள், தேவரடியார், பல்வகை இசைக்கருவி வாசிக்கும் உவச்சர்கள் உட்பட வழக்கமான பல வகைச் செலவுகளும் சொல்லப்படுகின்றன. ஆனால், இச்செப்பேட்டில் 'கண்டழிவற்காக' என ஒரு தொகை ஒதுக்கப்பட்டதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. திருவிழாக் காலத்தில் எதிர்பாராது ஏற்படும் செலவிற்கான தொகை இது. அதாவது, இக்காலத்தில் நாம் 'இதர செலவுகள்' என்று குறிப்பிடுகிறோமே அதைத்தான் 'கண்டழிவு' என்று குறிப்பிட்டுள்ளனர். இதில், வரவு செலவுக் கணக்கு பார்க்கச் சொல்லப்பட்ட முறைதான் மிகச் சிறப்பானது.

**கணக்குப் பார்ப்பது யார்?**

"மாதந்தோறும் கணக்குப் பார்க்க வேண்டும். திருவிழாக் காலத்தில் விழா முடிந்த கையோடு கணக்குச் சரி பார்க்க வேண்டும். காஞ்சிபுர நகரத்தார் குழுவின் தலைவரும் ஆண்டு வாரியத்தாரும், ஏற்றுவழிச்சேரி, கஞ்சகப்பாடி குடியிருப்புகளைச் சேர்ந்தாரும் இக்கோயில் திருவிழாக்கள் முடிந்ததும் கோயில் கணக்குகளைப் பார்வையிட வேண்டும். கஞ்சகப்பாடியாரும் ஏற்றுவழிச்சேரியாருமே கோயிலுக்கு மெய்க்காப்பாளரை நியமிக்க வேண்டும்; கோயில் செயல்பாடுகளை மேற்பார்வையிடுவார், திருமெய்க்காப்பு (பாதுகாவலர்), கணக்கெழுதுவார் ஆகியோரை நகரத்தாரே தேர்ந்தெடுத்துப் பணியமர்த்த வேண்டும். கோயில்

செயல்பாடுகளில் இடையூறு ஏற்பட்டால், பதினெட்டு நாட்டு அடியார்கள் மட்டுமே ஒன்றுகூடி நேர்செய்தல் வேண்டும் எனச் செப்பேடு குறிப்பிடுகிறது.

அதாவது, கோயில் வழிபாடு செய்யும் பூசாரிகளுக்கும் கோயிலின் சொத்து வரவு செலவுகளுக்கும் தொடர்பில்லை. வரவு செலவான நிதி நிர்வாகம் பார்ப்பவர்கள் வேறு பல ஊர்களையும் குடியிருப்புகளையும் சேர்ந்தவர்களே. இவர்களுடன் கோயில் பணி செய்பவர்களுக்கு எந்தத் தொடர்பும் இருக்கவில்லை. இவர்கள் சேர்ந்தால் ஊழல் ஏற்படும் எனக் கருதி, கோயில் பணியாளர்களையும் கணக்கு மேற்பார்வை செய்பவர்களையும் சோழர்கள் தனித்தனியே வைத்துள்ளனர். மேலும், நிதி நிர்வாகம் செய்பவர்களுடன் வேறு பல அமைப்புகளைச் சேர்ந்தவர்களையும் அமர்த்தி, அதிலும் ஊழலைத் தடுக்க முயன்றுள்ளனர்.

காவிரிப்பாசன மாவட்டங்களில் உள்ள பெருங்கோயில்கள் அனைத்தும் சோழர் கால நிதி நிர்வாகப் பட்டியலைச் சேர்ந்தவைதான். இந்தப்பின்னணியில் ஒருசில கோயில்கள் மட்டும் வரவு செலவுக் கணக்கைக் காண்பிக்க மறுப்பது சரியா என்கிற கேள்வியை வரலாற்று ஆதாரங்கள் எழுப்புகின்றன.

*நன்றி: ஜூலை 3, 2022- இந்து இதழ்*

## 3. பாக்கிஸ்தான் ஸ்வாட் பள்ளத்தாக்குப் பகுதியில் கிமு 2ஆம் நூற்றாண்டு பௌத்தப் பள்ளி கண்டுபிடிப்பு

— முனைவர் க.சுபாஷிணி

*வட இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் பண்டைய பௌத்த மதச் சான்றுகள் கிடைப்பதைப் பற்றிய செய்திகள் வரலாற்று ஆய்வுகளின் வழியும் தொல்லியல் கள ஆய்வுகளின் வழியும் கிடைக்கின்றன. இதைப்போல இன்றைய பாகிஸ்தான், ஆப்கானிஸ்தான் ஆகிய நிலப்பகுதிகளிலும் இன்றும் தொடர்ந்து*

*நடைபெற்றுக் கொண்டிருக்கின்ற பல்வேறு வரலாற்றுத் தேடல்கள், அகழாய்வுப் பணிகளில் குறிப்பிடத்தக்க முக்கியத்துவம் பெற்ற கண்டுபிடிப்புகள் தொடர்ந்து நிகழ்ந்த வண்ணம் இருக்கின்றன.*

*பாகிஸ்தான் நாட்டின் ஸ்வாட் பள்ளத்தாக்கு பகுதியில் தொல்லியல் களப்பணியாளர்கள் ஏறக்குறைய ஈராயிரம் ஆண்டு பழமையான பௌத்தப்பள்ளிகளைக் கண்டு பிடித்திருக்கின்றார்கள். இந்த பௌத்தப் பள்ளி பாகிஸ்தான் நாட்டில் உள்ள பௌத்தப் பள்ளி வளாகங்களில் பழமையான ஒன்றாகக் கருதப்படுகின்றது.*




*பாரிக்கோட் என்ற நகரில் ஏறக்குறைய கிமு 2ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட பௌத்த சமய அமைப்பாக இதனைக் கருதலாம் என ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றார்கள். இந்தக் கட்டிட பகுதி இதன்*

அருகிலேயே கிமு 3ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட பௌத்த விகாரைக்கு அருகிலேயே அமைந்திருக்கின்றது.

பாகிஸ்தான் மட்டுமன்றி உலக அளவில் பழமையான பௌத்தப் பள்ளிகளில் ஒன்றாக இது அறியப்படுகின்றது. கிபி 2 ஆம் நூற்றாண்டு எனக் கருதப்பட்டாலும் கூட இதன் காலம் கி மு 3, அதாவது மௌரியப் பேரரசர் காலம் எனக் கருதக்கூடிய வகையில் கரிம சோதனை ஆய்வு முடிவுகள் வெளிவந்திருக்கின்றன. இந்தப் புதிய கண்டுபிடிப்பானது பண்டைய காந்தாரப் பகுதியில் பண்டைய பௌத்த சமய செயல்பாடுகள் பற்றிய சான்றுகளை வழங்குவதாகவும் அக்காலகட்டத்தில் இப்பகுதி முக்கியத்துவம் பெற்ற ஒரு நகரமாக விளங்கி இருக்கலாம் என்ற கருத்தையும் வெளிப்படுத்துகிறது.

ஆசிய அளவில் இத்தாலியைச் சேர்ந்த ஆய்வாளர்கள் தொல்லியல் கள ஆய்வில் ஈடுபடுவது 1955 வாக்கில் தொடங்கியது. அச்சமயத்தில் தொல்லியல் கள ஆய்வுக்கு தலைமை ஏற்றவர் ஆய்வாளர் கீசோப் தூச்சி (Giuseppe Tucci) ஆவார். தற்சமயம் இத்தாலிய தொல்லியல் பணிக் குழுவின் தலைவராக Ca'Foscari University of Venice பல்கலைக் கழகத்தைச் சார்ந்த பேராசிரியர் லூக்கா மரியா ஒலிவியர் (Luca Maria Oliviero) பணியாற்றுகின்றார்.



Ruins of a 2,000-year-old Buddhist temple, one of the oldest discovered in Pakistan's Gandhara region. Missione Archeologica italiana in Pakistan ISMEO/UNIVERSITA' CA' FOSCARI VENEZIA



The acropolis in Barikot, Pakistan, where archaeologists began digging last year. Missione Archeologica italiana in Pakistan ISMEO/UNIVERSITA' CA' FOSCARI VENEZIA

*இவர் தலைமையிலான குழு 2020 ஆம் ஆண்டு தொடக்கம் பாகிஸ்தான் ஸ்வாட் பகுதியில் தொடர்ந்து தொல்லியல் ஆய்வுகளை நிகழ்த்தி வருகின்றது.*

*இந்தக் கள ஆய்வு நடைபெறும் பாரிக்கோட் (Barikot) என்ற நகரம் கிரேக்க மற்றும் லத்தீன் மொழியில் Bazira or Vajrasthana என குறிப்பிடப்படுகின்றது. இது மாவீரன் அலெக்சாந்தர் காலத்தில் அவனது படைகளால் கைப்பற்றப்பட்ட நிலப்பகுதி என்பதும் குறிப்பிடத்தக்கது. இங்கு நிகழ்த்தப்பட்ட கள ஆய்வுகளும் அங்கு மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகளும் இந்த நகரம் மாவீரன் அலெக்சாண்டர் போரிட்டு வந்த காலமான ஏறக்குறைய கிமு 327 காலகட்டத்தில் மக்கள் வாழ்ந்த ஒரு நகரமாக இருந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.*

*அப்போதைய காலகட்டத்தில் இந்த பாரிக்கோட் நகர பள்ளத்தாக்கு பகுதியில் நிகழ்ந்த விவசாய செயல்பாடுகளை முன்னிறுத்தி தானியங்கள் விற்பனை மற்றும் தானியங்கள் சேகரித்து வைக்கும் பகுதியாகவும் இருந்தது என்று அறியப்படுகிறது. இப்பகுதியில் வேளாண்மை சிறப்புற்று இருந்தது. வருடத்திற்கு இரண்டு முறை அறுவடை நிகழ்ந்ததும் அதாவது வசந்த காலத்தில் ஒரு முறையும் கோடை காலத்தின் இறுதியில் ஒரு முறையும் அறுவடை நிகழ்வதையும் கள ஆய்வுகள் வெளிப்படுத்துகின்றன. மாவீரன் அலெக்சாண்டர் இந்தியாவிற்குத் தனது*

*படைகளைக் கொண்டு செல்வதற்கு முன் தங்கியிருந்த ஒரு பகுதியாகவும் இந்த நகரம் அமைகிறது.*

*ரோமானிய வரலாற்று அறிஞர் Quintus Curtius Rufus பாரிக்கோட் நகரம் வளமான பொருளாதார உயர்வு பெற்ற ஒரு நகராக இருந்தது என்று தனது நூலான Histories of Alexander the Great என்ற நூலில் குறிப்பிடுகின்றார்.*

*2020 ஒரு தொடக்கம் இங்கு நிகழ்த்தப்பட்டு கொண்டிருக்கும் தொல்லியல் கள ஆய்வுகளில் இங்கு பிரமிக்க வைக்கும் வகையிலான கிமு 3ஆம் நூற்றாண்டு அல்லது கிமு 2ஆம் நூற்றாண்டு காலத்து பௌத்த சமய சின்னங்கள் பல கிடைத்துள்ளன. பௌத்த விகாரை அதனை ஒட்டிய வகையில் அமைந்த பௌத்த பள்ளி, வட்ட வடிவில் அமைந்த சிறிய ஸ்தூபி, மண்ணால் செய்யப்பட்ட பொருட்கள் சின்னங்கள், ஆபரணங்கள் ஆகியவை அகழாய்வில் கண்டுபிடிக்கப்பட்டன.*

*கிபி முதலாம் நூற்றாண்டை சார்ந்த கரோஷ்டி எழுத்து பொறிப்பு கொண்ட கல்வெட்டுக்களும் இங்கே கிடைத்துள்ளன.*

*இப்பகுதிகளில் கள ஆய்வுகள் நடைபெறுவதற்கு முன்பே தொல்லியல் சான்றுகளைச் சட்டத்திற்கு விரோதமாக திருடி*

விற்கும் செயல்பாடுகள் நடந்துள்ளன. பாகிஸ்தான், ஆப்கானிஸ்தான் போன்ற நாடுகளில் நிகழ்கின்ற அரசியல், மற்றும் சமயப் போராட்டங்கள் காரணமாகவும் அங்கு நடைபெறுகின்ற வன்முறை செயல்பாடுகளின் காரணமாகவும் பல வரலாற்று சின்னங்கள் சேதம் அடைந்துள்ளன என்பதையும் கருத வேண்டியுள்ளது. அத்தகைய இடர்ப்பாடுகளுக்கு இடையே இப்போது தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருக்கின்ற அகழாய்வுப் பணிகள் புதிய கண்டுபிடிப்புகளை வெளிக்கொணர்ந்துள்ளன. காந்தார கலைப் பண்பாடு இப்பகுதியில் செழித்து வளர்ந்த ஒரு பண்பாடு என்பதும் இப்பகுதியின் சிறப்பாகும்.

**Reference:**

*2,000-Year-Old Buddhist Temple Unearthed in Pakistan — The structure is one of the oldest of its kind in the Gandhara region, David Kindy, Smithsonian — February 15, 2022*

## 4. மகிபாலன் பட்டி பூங்குன்றனார்

— *வெ.பாலமுரளி*

*மகிபாலன்பட்டி என்றால் நிறைய பேருக்குத் தெரியாது. "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்று பாடிய கணியன் பூங்குன்றனார் பிறந்த ஊர் என்று சொன்னால், உங்களில் நிறைய பேர் நிமிர்ந்து உட்காரக் கூடும். மகிபாலன் பட்டி – (காரைக்குடிக்கு அருகில் உள்ள) திருப்பத்தூரிலிருந்து பொன்னமராவதி செல்லும் வழியில் ஒரு 10 கி.மீ. தொலைவில் உள்ள சிறு கிராமம். ஊருக்குள் நுழையும்போது " யாதும் ஊரே யாவரும் கேளிர் - மகிபாலன்பட்டி" என்ற பெயர்ப் பதாகை நம்மை வரவேற்கிறது.*

*இங்கு கி.பி.ஒன்பதாம் நூற்றாண்டில் குடையப்பட்ட இரண்டு சிறிய குடைவரைக் கோயில்கள் உள்ளன. இரண்டிலுமே கருவறை மட்டும்தான். ஒன்றில் பிள்ளையாரும், இன்னொன்றில் சிவபெருமானும் இருக்கின்றனர்.*

*கி.பி. 13ம் நூற்றாண்டில் சுந்தரபாண்டியன் காலத்தில் இந்தக் கோயிலுக்குத் திருப்பணி செய்த சேதியைத் தாங்கி ஒரு நீண்ட கல்வெட்டு சிவன் சன்னிதியின் நுழைவாயிலிலும் வலது கைப்பக்க சுவர்களிலும் உள்ளன.*



இதில்தான், "பூங்குன்ற நாட்டு பூங்குன்றத்தூர் " என்ற சொல்லாடல் இரண்டு மூன்று முறை வருகின்றது. இதிலிருந்து கி.பி.13 ம் நூற்றாண்டு வரை கூட இந்த ஊர் பூங்குன்றத்தூர் என்றே அழைக்கப்பட்டிருக்கிறது.

அதன் பின்னர் (கால கட்டம் தெரியவில்லை) வந்த மகிபாலன் என்ற சிற்றரசரின் பெயரால் இந்த ஊர் மகிபாலன்பட்டி என்று மாற்றம் அடைந்துள்ளது. தமிழகத்தில் பூங்குன்றம் என்ற ஊர் வேறெங்கிலும் இருப்பது போல் தெரியவில்லை. எனவே, இதுதான், கணியன் பூங்குன்றனார் பிறந்த ஊராக இருக்க வேண்டும் என்பது பொதுவான கருத்து. கணியன் என்றால் வானவியல் ஆராய்ச்சியாளர் என்று அர்த்தம். பூங்குன்றம் என்ற ஊரைச் சேர்ந்தவர் என்பதால் பூங்குன்றனார். அப்படியென்றால் அவருடைய இயற்பெயர் என்னவாக இருக்கும்?

## 5. 800 ஆண்டுகள் தொன்மைவாய்ந்த கீழடி அர்ச்சுன லிங்கேஸ்வரர் கோயில்

— முனைவர் ப. தேவி அறிவு செல்வம்

*கிபி 1291ஆம் ஆண்டு வாக்கில் மதுரையை ஆட்சி செய்த முதலாம் குலசேகர பாண்டியன் காலத்தில் கட்டப்பட்ட கோயில் இது. கிபி1291,1298 ஆம் நூற்றாண்டு கல்வெட்டும் இக்கோவிலில் உள்ளது.*



800 ஆண்டுகள் தொன்மைவாய்ந்த கீழடி அர்ச்சுன லிங்கேஸ்வரர் கோயில்
-- முனைவர். ப. தேவி அறிவு செல்வம்

*இக்கோயிலின் தெற்கு, வடக்கு, மேற்கு பக்கச் சுவர்களில் எண்ணற்ற கல்வெட்டுகள் இருந்துள்ளன.*

இப்பொழுது இக்கோயிலானது புனரமைக்கப்பட்டு சமீபத்திய கோயிலாகக் காட்சி அளிக்கிறது. இக்கோயிலின் சிதைந்த பகுதிகள் கோயில் வளாகம் முழுவதும் நிறைந்து காணப்படுகின்றன. அதிட்டான பகுதியிலும் கல்வெட்டுக்கள் தமிழ் எழுத்துக்களுடன் இருக்கின்றன.

கல்வெட்டில் இக் கோயிலின் பெயர் அர்ச்சுனேஸ்வரர் கோவில் என்றும், இப்பொழுது அர்ச்சுன லிங்கேஸ்வரர் கோயில் என்றும் அழைக்கப்படுகிறது.

## 6. "அட்சய திருதியை" என்ற கரும்புச்சாறு திருவிழா!

— முனைவர் தேமொழி

*சித்திரை மாதத்து வளர்பிறையில் அமாவாசை நாளை அடுத்த மூன்றாம் நாளில் கொண்டாடப்படுவது அக்ஷய திருதியை (அல்லது அக்ஷய தீஜ்).*

*அட்சய / அக்ஷய என்றால் குறைவற்ற என்ற பொருள்; திருதியை என்றால் 3 ம் நாள் என்பதாகும்.*

*இது நாட்காட்டியில் பழைய முறையில் வானியல் அடிப்படையில் நாட்களைக் கணக்கிடும் முறையில் அமைகிறது.*
*வளர்பிறை (சுக்கில பட்சம்/நிலவொளி அதிகரிக்கும் நாட்கள்) மற்றும் தேய்பிறையில் (கிருஷ்ண பட்சம்/நிலவொளி குறையும் நாட்கள்) நாட்கள் அமாவாசை (அல்லது) பௌர்ணமி அடுத்த நாள் முதலாக துவங்கிக் கொண்டு கணக்கிடப்படுவது வழக்கம்.*

*இவ்வாறு தொடங்கும் வரிசையில் மூன்றாவது நாள் திரிதியை எனக் குறிப்பிடப்படும். 1. பிரதமை, 2. துவிதியை, 3. "திருதியை", 4. சதுர்த்தி, 5. பஞ்சமி, 6. சஷ்டி, 7. சப்தமி, 8.*

அஷ்டமி, 9. நவமி, 10. தசமி, 11. ஏகாதசி, 12. துவாதசி, 13. திரயோதசி, 14. சதுர்த்தசி, 15. பவுர்ணமி (அல்லது) அமாவாசை என்று மொத்தம் 15 திதிகள் உள்ளன.

தீபாவளியைப் போலவே சமணர்களிடம் இருந்து வைதீக சமயத்தார் உள்வாங்கிக் கொண்டதே அட்சய திருதியை பண்டிகை எனலாம். சமணத்தில், அட்சய திருதியை நாளில் சமணத்தின் முதற் தீர்த்தங்கரரான ரிஷபநாதர் தமது ஓராண்டு கடுந்துறவு வாழ்வை நிறைவுசெய்து ஊர் திரும்பிய பின்னர், ஹஸ்தினாபுரம் அரசரான ஷ்ரேயான்ஸ் அவர்களால் தமது குவிந்த கைகளில் ஊற்றப்பட்ட கரும்புச் சாற்றைப் பருகிய நாளாக இந்நாள் கருதப்படுகிறது.



A one anna commemorative coin issued by the British Indian government depicting Rishabhanatha, the first Jain tirthankara, accepting sugarcane juice from King Shreyans

*மேலுள்ளது 1818 இல் பிரித்தானிய இந்திய அரசினால் அட்சய திருதியை நாளையொட்டி வெளியிடப்பட்ட ஒரு அணாக் காசில் முதற் சமணத் தீர்த்தங்கரரான ரிஷபநாதர் ஹஸ்தினாபுர ஷ்ரேயான்சிடமிருந்து கரும்புச்சாற்றைப் பெறும் காட்சி (விக்கிப்பீடியா படம்)*







*ஹஸ்தினாபூர் சமணக் கோவில் சிற்பங்கள்*

'வர்ஷி தப' என்றும் சமணர்கள் இவ்விழாவைக் குறிப்பிடுவது வழக்கம். ஓராண்டு முழுவதும் ஒரு நாள் விட்டு ஒரு நாள் உண்ணா நோன்பு இருக்கும் வர்ஷி தப எனப்படும் நோன்பைக் கடைப்பிடிப்போர், இந்த நாளில் பாரணை செய்து (கரும்புச் சாற்றை அருந்தி) தமது தபசை நிறைவு செய்கின்றனர்.




இந்நாளில் சமணர்கள் உண்ணாநோன்பு இருப்பதும் வழக்கமே; ஆன்மீகம் வழிகாட்டும் புலனடக்கப் பயிற்சிதான் நோன்பு என்பதன் அடிப்படை நோக்கம் (எனக்கு அது வேண்டும், எனக்கு இந்த வரம் வேண்டும் என்பது போன்ற தவமிருப்பது அதன் தவத்தின் அடிப்படை நோக்கம் அல்ல). ஆகவே புலன்களைக் கட்டுப்படுத்தி நோன்பு மேற்கொண்டதை வெற்றிகரமாக முடித்த கொண்டாட்ட விழாவே சமண சமயத்தாரின் அக்ஷய திருதியை என்ற கரும்புச்சாறு பருகும் திருவிழா!

வழக்கம் போலவே வைதீக சமயம் இந்நாளுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட பல புராணக் கதைகள் கொடுத்துள்ளது.

## 7. உரோமை தமிழ்ச் சங்கத் தமிழ்க் கூடல் நிகழ்வு

— *முனைவர் க.சுபாஷிணி*

*இத்தாலி நாட்டின் தலைநகரான வரலாற்றுச் சிறப்புமிக்க உர்பானோ கல்லூரியில் பழமை வாய்ந்த, வரலாற்றுச் சிறப்புமிக்க உரோமை தமிழ்ச் சங்கத்தின் ஏற்பாட்டில் இரு ஆண்டுகளுக்குப் பிறகு ஜூன் 5, 2022 அன்று மாலையில் மேதகு கர்தினால் லூர்துசாமி நாளை முன்னிட்டு ஒரு தமிழ்க் கூடல் நிகழ்வு நடைபெற்றது.*

*இந்நிகழ்வில் ஐரோப்பியத் தமிழியல், ஐரோப்பியரின் தமிழ் இலக்கிய இலக்கண செயல்பாடுகள், அதனடிப்படையில் உருவான ஆவணங்கள் என்பன பற்றி உரையாற்றினேன். உரோமை தமிழ்ச்சங்கத்தின் தலைவர் அருட்தந்தை ஜான்*

போஸ்கோ அவர்களுடன் திரு கௌதம சன்னா, அருட்தந்தை லார்ட் வின்னர் ஆகியோர் உரைகளும் இடம் பெற்றன.

அருட்பணியில் கல்வி கற்கும் மாணவர்களின் ஆடல் பாடல் நிகழ்வுகளும் இணைந்தன. சீரிய முறையில் பணியாற்றும் உரோமை தமிழ்ச் சங்க உறுப்பினர்களுக்கும் நிர்வாகத்தினருக்கும் தமிழ் மரபு அறக்கட்டளையின் நல் வாழ்த்துக்களும் பாராட்டுக்களும்.

# 8. தலைமுறை தாண்டி அமெரிக்காவில் தமிழ்மொழிக்கல்வி

— *சௌந்தர் ஜெயபால்*

*அமெரிக்காவில் சமீபத்தில் நடந்த மக்கள் தொகை கணக்கெடுப்புப்படி கிட்டத்தட்ட 300,000 தமிழ் மக்கள் அமெரிக்கா முழுவதும் வசிக்கிறார்கள். நியூ ஜெர்ஸி, நியூ யார்க், கலிபோர்னியா, டெக்ஸாஸ், ஜார்ஜியா, இலியனாய்சு, ஃப்ளோரிடா, வாசிங்டன் ஆகிய பகுதிகளில் அதிக அளவில் வசிக்கிறார்கள்.*

*அமெரிக்காவில் தமிழ்க்கல்வி வளர்ச்சியை நாம் மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம்.*

*1995 ஆம் ஆண்டுக்கு முன்னர்.*

*1995ஆம் ஆண்டிலிருந்து 2010 வரை.*

*2010ஆம் ஆண்டிற்குப் பிறகு.*

*1995 ஆம் ஆண்டிற்கு முன்பு வந்தவர்கள் பெரும்பாலும் மருத்துவர்கள், பொறியாளர்கள், அறிவியல் ஆராய்ச்சியாளர்களாகச் சிறு எண்ணிக்கையிலிருந்தனர். அவர்கள் அனைவரும் ஆண்டிற்கு சில முறை பண்டிகை நாட்களில் சந்தித்துக் கொண்டனர். தமிழ்ச் சங்கங்களும் பெரிய அளவில் இப்போது நடப்பது போல் இயங்கவில்லை. அவர்களுடைய குழந்தைகளின் தமிழ்க்கல்வி பெரும்பாலும்*

*வீட்டில் பெற்றோர்கள் கற்றுக் கொடுத்த சில அரிச்சுவடி பாடங்களுடன் நின்றுவிட்டது. முறையான கல்வி நிறுவனங்களோ, கட்டமைப்புகளோ, தமிழ் கற்பதற்கான கற்பிப்பதற்கான வசதிகளோ, பாடத்திட்டங்களோ இல்லை.*

*1995 ஆம் ஆண்டிற்குப் பிறகு கணிப்பொறி தொழில்நுட்ப வல்லுநர்களின் வருகை அதிகரிக்கத் தொடங்கியது. பெரும் எண்ணிக்கையிலான அவர்களுடைய குழந்தைகளுக்குத் தமிழ் கற்பிக்க வேண்டிய அவசியமும் தேவையும் ஏற்பட்டது. 1999 ஆம் ஆண்டு கலிபோர்னியா தமிழ்க்கல்விக்கழகம் தொடங்கப்பட்டது. வேறு சில நகரங்களிலும் தமிழ் கற்றுக் கொடுக்க தமிழ்ப்பள்ளிகள் தொடங்கப்பட்டது. அப்பள்ளிகள் பெரும்பாலும் கோயில்களிலும் தேவாலயங்களிலும் நூலகங்களிலும் அல்லது ஒரு சிலரின் வீடுகளிலும் நடத்தப்பட்டது. சிறிய அளவில் தன்னார்வ ஆசிரியர்களுக்குத் தெரிந்த அளவிலான பாடத்திட்டங்களைக் கொண்டு அல்லது தமிழ்நாட்டிலிருந்து கொண்டுவரப்பட்ட பாடப் புத்தகங்களிலிருந்து வகுப்புகள் நடத்தப்பட்டன.*

*சிகாகோ நகரில் 1984ல் தொடங்கப்பட்ட தமிழ்ப் பள்ளிகள் முறையாக ஒருங்கிணைக்கப்பட்டு 2004ஆம் ஆண்டு “அமெரிக்கத் தமிழ்ப்பள்ளிகள்” என்ற அமைப்பாக முறைப்படி இலியனாய்சு மாநிலத்தில் பதிவு செய்யப்பட்டு இன்றளவும் தொடர்ந்து நடத்தப்பட்டு வருகிறது. 2006 ஆம்*

ஆண்டு தமிழ்ப் பள்ளிகளை இணையத்தில் இணைக்கும் tamilschools.net என்ற முயற்சி எடுக்கப்பட்டது. ஆனால் அந்த முயற்சி வெற்றி பெறவில்லை. இதற்கிடையே 2005ஆம் ஆண்டிலிருந்து பேரவை நடத்தும் தமிழ் விழாக்களில் தமிழ் ஆசிரியர்கள், தமிழ்க் கல்வி ஆர்வலர்கள் தொடர்ந்து சந்தித்து தங்களுக்குள் தகவல்களைப் பரிமாறிக் கொண்டு வந்தனர்.

இப்படி 2010ஆம் ஆண்டு வரை பல்வேறு வழிகளிலும் தமிழ் கற்றுக் கொடுக்க முயற்சி செய்யப்பட்டுத் தொடர்ந்து நடத்தப்பட்டு வந்தது. அப்போது புலம்பெயர்ந்த தமிழ் குழந்தைகளுக்குத் தமிழ் கற்பிப்பதில் உள்ள பிரச்சினைகளை உணர முடிந்தது. அதில் முதன்மையானது இங்குள்ள குழந்தைகளுக்கு முதன்மை மொழி ஆங்கிலம் என்பதும் தமிழ் ஒரு இரண்டாம் மொழியாக வெளிநாட்டு மொழியாக மட்டுமே இருக்கிறது என்ற உண்மையும், உணர்வும் ஆகும். ஆங்கில வழியாகத் தமிழ் கற்பதால் குழந்தைகளும் தமிழை ஆங்கிலத்துடன் மொழி ஒப்பீடுகள் செய்தனர். அப்படிச் செய்ததில் தமிழ் அதிக எழுத்துக்கள் கொண்ட கற்பதற்குக் கடினமான மொழியாகவும், சிக்கலான பயன்பாட்டில் இல்லாததாக இலக்கணம் இருப்பதையும் உணர்ந்தனர். அதோடு எழுத்து மொழிக்கும், பேச்சு மொழிக்கும் அதிக அளவிலான வேறுபாடுகள் இருப்பதை அறிந்தனர். தமிழ் கற்பிக்கும் / கற்கும் முறை வழக்கமாக அவர்கள் பள்ளிகளில் ஆங்கிலம் கற்றுக் கொள்ளும்

*முறையிலிருந்து முற்றிலும் மாறுபட்டு வேறு வகையாக இருந்ததையும் உணர்ந்தனர். இப்படி பல்வேறு சிக்கல்களுக்கு இடையே பல ஆண்டுகளாக மாணவர்கள் தமிழ் மொழியைக் கற்றுக் கொண்டு வந்தனர். அதோடு பழைய முறையிலான பாடத்திட்டங்கள், பாடப்புத்தகங்களைப் பயன்படுத்த வேண்டியிருந்தது. தமிழை முழுமையாக 8 ஆண்டுகள் கற்றுக் கொண்ட பின்னரும் அவர்களுக்கு எந்த நேரடிப் பயனும் இல்லாமல் இருந்தது. கல்லூரிகளிலோ வேலைவாய்ப்புகளிலோ சிறப்புக் கவனமோ அல்லது சலுகையோ இல்லாமல் இருந்தது.*

*இந்த பிரச்சனைகளை எல்லாம் சரி செய்ய பல்வேறு முயற்சிகள் எடுக்கப்பட்டது. அதன் ஒரு பகுதியாக 2010ஆம் ஆண்டில் அமெரிக்கத் தமிழ்க் கல்விக் கழகம் தொடங்கப்பட்டது. அமெரிக்கச் சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறு ஒருங்கிணைந்த பாடத் திட்டங்களும் பாடங்களும் முழுக்க முழுக்க தன்னார்வலர்களைக் கொண்டு உருவாக்கப்பட்டது. ஆசிரியர் பயிற்சிகளும், தேர்வு நடத்துவதற்கும் உதவிகள் செய்யப்பட்டது. அமெரிக்கா முழுவதும் பெரிய நகரங்களிலும் இரண்டாம் கட்ட நகரங்களிலும் முறைப்படி பல்வேறு தன்னார்வ தமிழ்ப்பள்ளிகள் தொடங்கப்பட்டன. கலிபோர்னியா தமிழ்க் கல்விக் கழகமும் உலகத் தமிழ்க்கல்வி கழகமாகப் பெயர் மாற்றப்பட்டு அதன் கீழும்*

பல்வேறு தமிழ்ப்பள்ளிகள் இணைந்தன. 2018 ஆம் ஆண்டில் அமெரிக்கத் தமிழ் ஆசிரியர்களை ஒருங்கிணைக்கும் "அமெரிக்கத் தமிழாசிரியர் கழகம்" தொடங்கப்பட்டது. 2021ஆம் ஆண்டு ஒரு புதிய வழியில் தமிழ் கற்றுக்கொடுக்கும் முயற்சியோடு "அமெரிக்கத் தமிழ்மொழிக் கல்வி நிறுவனம்" தொடங்கப்பட்டது.




Grade 2 class picture of Los Angeles Tamil School, an affiliate of California Tamil Academy. Courtesy of Los Angeles Tamil School

இப்படியான பல்வேறு தொடர் செயல்பாடுகளால் இப்போது கிட்டத்தட்ட 300க்கும் மேற்பட்ட தன்னார்வத் தமிழ்ப் பள்ளிகள் உள்ளன. 30,000க்கும் மேற்பட்ட மாணாக்கர்கள் ஒருங்கிணைந்த பாடத் திட்டத்தின் கீழ் தமிழ்க்கல்வி பயில்கின்றனர். இருந்தாலும் ஒரு சில தமிழ்ப்பள்ளிகளே உள்ளூர் மாவட்ட கல்வி நிலையங்களால் அங்கீகரிக்கப்பட்டு

தமிழ் படிக்கும் மாணாக்கர்களுக்கு அவர்கள் படிக்கும் உயர்நிலைப் பள்ளிகள் மூலம் இரண்டாம் மொழிக்கான மதிப்பீட்டுப் புள்ளிகள் (language credits) வழங்குகிறது. அப்படி உள்ளூர் கல்வி மாவட்ட நிலையங்களால் அங்கீகரிக்கப்படாத பள்ளிகளில் படிக்கும் மாணவர்கள் 'இருமொழி முத்திரை" சான்றிதழ், மொழித்திறன்களை சோதிக்கும் தனியார் அமைப்புகளான AAPPL, ALTA, Avant ஆகியவை நடத்தும் தேர்வுகள் மூலமும் மதிப்பீட்டுப் புள்ளிகள், சான்றிதழ்கள் பெறலாம். அப்படியான தேர்வுகள் அனைத்தும் ACTFL வகுத்துள்ள மொழி கற்பித்தலுக்கான தரப்பாடுகளின் (standards) படியே நடத்தப்படுகிறது. அத்தரப்பாடுகள் கேட்டல், பேசுதல், படித்தல், எழுதுதல் என்ற நான்கு திறன்களை அடிப்படையாகக் கொண்டது.

எனவே, இப்போதுள்ள எழுதுவதற்கும் படிப்பதற்கும் முக்கியத்துவம் கொடுக்கும் பாடத்திட்டங்களோடு, கேட்டல், பேசுதல் என்பதையும் சேர்த்துப் பாடத் திட்டங்களையும் பாடங்களையும் உருவாக்க வேண்டியது அவசியம். அதன் மூலம் மாணாக்கர்கள் உலக அளவிலான அங்கீகாரம் கொண்ட மொழித்திறனுக்கான சான்றிதழ்களையும் பெற முடியும். இப்படிப்பட்ட சான்றிதழ்கள் உயர்நிலைப் பள்ளி மாணவர்களுக்கான மதிப்பீட்டுப் புள்ளிகளைப் பெறுவதோடு அல்லாமல் கல்லூரிச் சேர்க்கைகளுக்கும் ஒரு சில வேலை வாய்ப்புகளுக்கும் உதவக்கூடும். ACTFL

நிறுவனத்தின் மொழிகளுக்கான தரப்பாடு அமெரிக்காவில் மட்டுமல்லாது உலகின் பல்வேறு நாடுகளில் அங்கீகரிக்கப்பட்டுப் பயன்படுத்தப்பட்டு வருகிறது. இதன்மூலம் உலக அளவிலான ஒருங்கிணைந்த தமிழ்ப் பாடத் திட்டமும் பாடங்களும் உருவாக்கும் காலத்தின் கட்டாயத்தில் நாம் இருக்கின்றோம்.

**கட்டுரையில் குறிப்பிடப்பட்டுள்ள தகவல்களுக்கான சுட்டிகள்:-**

*https://www.catamilacademy.org/*

*https://thamizhppalli.com/*

*https://www.americantamilacademy.org/*

*http://attaonline.org/*

*https://americantamil.org/*

*https://avvaitamil.org/*

*https://www.actfl.org/resources/world-readiness-standards-learning-languages*

*https://www.actfl.org/resources/ncssfl-actfl-can-do-statements*

*https://sealofbiliteracy.org*

*https://theglobalseal.com/tamil*

*https://www.languagetesting.com/aappl*

*https://www.altalang.com/*

*https://avantassessment.com/*




திரு. சௌந்தர் ஜெயபால்
இணை நிறுவனர், அவ்வை தமிழ் மையம் (ATC)
இணை நிறுவனர், அமெரிக்கத் தமிழ்க் கல்விக்கழகம் ( ATA)
இணை நிறுவனர், அமெரிக்கத் தமிழ் ஆசிரியர் கழகம் (ATTA)

## 9. சீனாவில் கண்டுபிடிக்கப்பட்ட ஹோமோ எரெக்டஸ்

— *முனைவர் க.சுபாஷிணி*

*அண்மையில் 16 ஜூன் 2022, ஸ்பெயினின் மனித பரிணாம வளர்ச்சிக்கான தேசிய ஆராய்ச்சி மையம் (CENIEH) வெளியிட்ட அறிக்கையின்படி, 1.6 மில்லியன் ஆண்டுகள் பழமையான ஹோமோ எரெக்டஸ் புதைபடிமங்கள் சீனாவின் கோங்வாங்லிங் (Gongwangling) பகுதியில் கண்டுபிடிக்கப்பட்டதாக இன்ஸ்டிடியூட் ஆஃப் வெர்டிபிரேட் பேலியோண்டாலஜி மற்றும் பேலியோ ஆந்த்ரோபாலஜி, CENIEH ஆய்வாளர்கள் மற்றும் சீனாவின் லியு வூ உள்ளிட்ட விஞ்ஞானிகள் குழு தெரிவித்துள்ளது.*

*இந்த எலும்புக் கூட்டுக்குச் சொந்தமான ஹோமோ எரெக்டஸ் சீனாவின் கோங்வாங்லிங் பகுதியை அடைந்த முதல் ஹோமினின்களில் ஒருவராக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. படிமத்தின் மண்டை ஓடு, தாடை எலும்பு மற்றும் ஐந்து பற்களில் மைக்ரோ-கம்ப்யூட்டட் டோமோகிராபி, ஜியோமெட்ரிக் மோர்போமெட்ரி மற்றும் கிளாசிக்கல் மோர்பாலஜி நுட்பங்களுடன் ஆய்வு நடத்தப் பட்டது. ஆய்வின் முடிவு சீனாவில் உள்ள ஏற்கனவே கண்டுபிடிக்கப்பட்ட மற்ற ஹோமோ எரெக்டஸ் தளங்களில்*

*400,000 மற்றும் 800,000 ஆண்டுகளுக்கு முன்பான புதைபடிமங்களில் காணப்பட்டதைப் போலவே உள்ளன என்றாலும் சில மாறுபாடுகளையும் இவை வெளிப்படுத்துகின்றன என்பதை இந்த ஆய்வாளர்கள் தெரிவிக்கின்றனர்.*




*ஹோமோ எரெக்டஸ் என்பது அழிந்து போன பண்டைய மனித இனங்களுள் ஒன்று. 2 மில்லியன் ஆண்டுகள் காலகட்டத்தில் இவை வாழ்ந்ததற்கான சான்றுகள் உலகின்*

பல்வேறு இடங்களில் ஆப்பிரிக்கா, இந்தோனேசியா ஆகிய இடங்களில் கிடைத்துள்ளன. தமிழகத்தின் அத்திரம் பாக்கம் பகுதியில் கிடைத்த தொல் மனித எச்சங்களும் இவ்வகை ஹோமோ எரெக்டஸ் இனமாக இருக்கலாம்.



ஆரம்பக்கால ஆப்பிரிக்க ஹோமோ எரெக்டஸ் புதைபடிமங்கள் (சில சமயங்களில் ஹோமோ எர்காஸ்டர் என்றும் அழைக்கப்படுகின்றன) மனிதனைப் போன்ற நவீன உடல் விகிதாச்சாரத்தில் ஒப்பீட்டளவில் நீளமான கால்கள் மற்றும் உடற்பகுதியின் அளவைக் காட்டிலும் குறுகிய

*கைகளைக் கொண்ட பழமையான மனிதர்கள் இவர்கள். இவர்களின் உடற்கூறுகள் தரையில் வாழும் வாழ்க்கைக்கு ஏற்ற வகையில் மனித உடல் உடல் பரிணாம வளர்ச்சி கண்டதை வெளிப்படுத்துகின்றன. மரம் ஏறுதலிலிருந்து நடக்கக்கூடிய மற்றும் நீண்ட தூரம் ஓடக்கூடிய திறனை வெளிப்படுத்தும் வகையில் இந்த பரிணாம வளர்ச்சி அமைகிறது.*

*டச்சு அறுவை சிகிச்சை நிபுணரான யூஜின் டுபோயிஸ் தான் 1891 ஆம் ஆண்டு இந்தோனேசியாவில் முதல் ஹோமோ எரெக்டஸ் மனித இனத்தின் புதைபடிமத்தைக் கண்டுபிடித்தார். 1894 ஆம் ஆண்டில், டுபோயிஸ் இந்த இனத்திற்கு பிதேகாந்த்ரோபஸ் எரெக்டஸ் என்று பெயரிட்டார்.*

*தமிழ்நாட்டின் மலையடிவாரங்களிலும் குறிப்பாக மேற்குத் தொடர்ச்சி மலைப் பகுதிகளிலும் அகழாய்வுகளை நிகழ்த்தினால் இவ்வகை தொல் மனிதர்களின் எச்சங்களைக் கண்டறிவதற்கு வாய்ப்பு அமையும்.*

*குறிப்பு: https://www.cenieh.es/en/press/news/homo-erectus-gongwangling-could-have-been-earliest-population-china*

## 10. எங்கே நிகழ்ந்தது மனிதனின் தொடக்கம்

— முனைவர் சிவ. இளங்கோ

பேரண்டம் (பிரபஞ்சம்) தொடங்கிய காலம் 1350 கோடி ஆண்டுகள்; சூரியக் குடும்பம், பூமி உட்பட உருவான காலம் 450 கோடி ஆண்டுகள்; உயிரினம் தோன்றியது 380 கோடி ஆண்டுகள்; பரிணாம வளர்ச்சியில் ஊர்வன, பறப்பன, விலங்கினங்கள் தோன்றிய பின்னர் மனிதக் குரங்கினம் உருவான காலம் 70 - 60 லட்சம் ஆண்டுகள்; அதனுடைய பரிணாம வளர்ச்சியில் மனித இனம் தோன்றியது 25 லட்சம் ஆண்டுகள்; இவையெல்லாம் அறிவியலாளர்கள் நமக்கு அளித்திருக்கும் தகவல்கள்.

ஆனால் மனித இனம் தோன்றியது குறித்துப் பல்வேறு கருத்துகள் உலவி வருகின்றன. பொதுவான கருத்தாக, கிழக்கு ஆப்பிரிக்காவில் மனித இனம் தோன்றி, உலகமெங்கும் பரவியது என்று கூறும் அதே நேரம், மத்திய தரைக்கடல் பகுதி, ஆசியா, ஐரோப்பா, சைனா ஆகிய பகுதிகளிலும் மனித இனம் தோன்றி இருந்திருக்கக்கூடும் என்றும் அறிவியல் கருத்துகள் முன்வைக்கப்பட்டுள்ளன. முதல் மாந்தன் தோன்றிய இடம் குமரிக் கண்டம் என்று முன் வைக்கப்பட்ட கருத்து இன்றுவரையிலும் கருத்தாகவே உள்ளது. உலகின் முதல் நாகரிகத் தொட்டில் சுமேரியா

என்பதிலும் இன்னும் சர்ச்சை தீர்ந்தபாடில்லை. காலம் பின்னோக்கிச் செல்லச் செல்லச் சான்றுகளுடன் நிறுவுதலில் ஏற்படும் நம்பகத்தன்மை முழுமையடையாமல் போவதே, 'இதுதான்' என்று அறுதியிட்டுக் கூறும் நிலையைத் தடுத்து வருகிறது.

மனிதன் முதலில் தோன்றிய இடம் இருக்கட்டும்; முதன் முதலில் தோன்றிய மனித இனம் எது என்பதே இன்னும் ஆய்வில் தான் உள்ளது(Indianexpress.com). அதாவது மனித இனம் என்பது ஒன்றல்ல என்றும், இதுவரை சுமார் இருபதுக்கும் மேற்பட்ட மனித இனங்கள் தோன்றி வாழ்ந்து வந்துள்ளன என்றும் கூறுகிறார்கள். இன்றைய உலகில் மனிதர்களாக வாழ்ந்து கொண்டிருக்கின்ற நாம் 'ஹோமோ சேப்பியன்ஸ்' (Homo sapiens) இனத்தைச் சேர்ந்தவர்கள். இதில் ஹோமோ என்பது மனித இனம் என்றும், சேப்பியன்ஸ் என்பது அவ்வினத்தின் பரிணாம வளர்ச்சிப் பிரிவான 'அறிவாளன்' என்றும் பொருள்படும். நமக்கு முன்னதாக 'ஹோமோ எரக்டஸ் (Homo erectus), 'ஹோமோ புளோரேசியன்சிஸ்' (Homo floresiensis), 'ஹோமோ நியாண்டர்தால்' (Homo neanderthalensis), 'ஹோமோ சோலயன்சிஸ்' (Homo soleansis), 'ஹோமோ டெனிசோவா' (Homo denisovans), 'ஹோமோ ரூடால்பென்சிஸ்' (Homo rudolfensis), 'ஹோமோ எர்கஸ்டர்' (Homo ergaster) உட்பட சில மனித இனங்கள் தோன்றி இதே பூமியில் வாழ்ந்து

இருக்கின்றனர். அவர்கள் நம் இனமான ஹோமோ சேப்பியன்ஸ் காலத்திலும் வாழ்ந்திருக்கின்றனர். அதேநேரம், இன்று, இந்த இருபத்தோராம் நூற்றாண்டில் (2021) வாழ்ந்து வரும் ஒரே மனித இனம் ஹோமோ சேப்பியன்ஸ் மட்டுமே என்று வலியுறுத்திக் கூறுகின்றனர் ஆய்வாளர்கள். பிற மனித இனங்கள் என்ன ஆனார்கள் என்பது ரகசியமாகவே இருந்து வந்தாலும், அண்மைக்காலங்களில் ஆய்வுகள் வழி வெளிப்பட்டு வருகின்றன (சேப்பியன்ஸ்:2018:16-22).

அறுபது இலட்சம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த ஒரு மனிதக் குரங்கு இரண்டு பெண்களை ஈன்றது. அதில் ஒன்று, இன்றும் வாழும் சிம்பன்சி என்னும் மனிதக் குரங்கின் மூதாதையர் ஆனது. மற்றொன்று, இன்றைய மனித (ஹோமோ) இனத்தின் மூதாதையர் ஆனது. சிம்பன்சி இனத்தில் பல பிரிவுகள் இருப்பதைப் போல் மனித இனத்திலும் பல பிரிவுகள் உண்டாயிற்று. இதுவரை இருபதுக்கும் மேற்பட்ட மனித இனங்கள் தோன்றி வாழ்ந்ததாகப் புதைபடிமங்கள் வழி நிரூபிக்கப்பட்டுள்ளது. ஆய்வுகள் தொடர்ந்தால் இன்னும் சில மனித இனங்கள் கண்டுபிடிக்கப்பட வாய்ப்புள்ளது. இக்கட்டுரை எழுதப்பட்ட இக்காலத்தில் (ஆண்டு- 2021) புதியதாக ஒரு மனித இனம் கண்டுபிடிக்கப் பட்டிருக்கிறது. சீனாவில் கண்டெடுக்கப்பட்ட ஒரு மண்டை ஓடு, 1,46,000 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த முற்றிலும் புதிய மனித இனத்தைச் சேர்ந்ததாகவும், இப்புதிய

இனத்திற்கு 'ஹோமோ லாங்கி' (*Homo longi*) எனப் பெயரிடப்பட்டுள்ளதாகவும் அறிவியலாளர்கள் தெரிவித்துள்ளனர்.[1] ஆனால் இவை எதுவும் இன்றைய வாழ்வில் இல்லை, ஒன்றைத் தவிர. அதுதான் நம் இனமான மனித (ஹோமோ) அறிவாளன் (சேப்பியன்ஸ்). இன்றைய மனித வர்க்கத்தை 'அறிவாளன்' என்று குறிப்பிடக் காரணம், ஹோமோ சேப்பியன்ஸ் மற்ற விலங்கினங்கள் அனைத்தையும் வெற்றி கொண்டதோடல்லாமல், பிற மனித வகைகளையும் வெற்றி கொண்டதால்தான்.

இரண்டு லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு கிழக்கு ஆப்பிரிக்காவில் தோன்றி, எழுபதாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாக ஆப்பிரிக்காவை விட்டு ஐரோப்பா, ஆசியா, ஆஸ்திரேலியா ஆகிய பகுதிகளுக்குப் புலம்பெயர்ந்து வந்த ஹோமோ சேப்பியன்ஸ்கள், தங்கள் அறிவால் ஆன ஆற்றல்களால் பிற அனைத்து இனங்களையும் தோற்கடித்தும், கொன்றழித்தும் இன்றைய உலகின் முதல் ஆற்றல் மிக்கவர்களாகத் திகழ்கின்றனர். அன்றோ கல் ஆயுதம். இன்றோ அணு ஆயுதங்கள். இது பரிணாம வளர்ச்சியையும் தாண்டிய அறிவியல் வளர்ச்சி. இயற்கைக்கு மாறான வளர்ச்சி. ஹோமோ சேப்பியன்ஸ்களின் இவ்வளர்ச்சியில், இத்தனை நாள் மறைந்திருந்த இரண்டு நிலைகள் உள்ளதாக ஆய்வுலகம் குறிப்பிடுகிறது.

ஒன்று 'இனக்கலப்புக் கோட்பாடு'. ஹோமோ நியாண்டர்தால், ஹோமோ எரக்டஸ் உட்படத் தங்கள் புலம் பெயர்வால், பிற மனிதர்களோடு கொண்ட உறவால், மனித இனங்கள் கலந்து இன்றுள்ள ஒரே மனிதக் கூட்டமாக மாறி உள்ளன என்பது ஒரு கோட்பாடு. மற்றொன்று, மாற்றீட்டுக் கோட்பாடு. அதாவது, பிற மனித இனங்கள் அனைத்தையும் தாங்கள் கொன்றொழித்துத் தங்களை மட்டும் வெற்றியாளர்களாக நிலைநிறுத்திக் கொண்டனர் என்னும் கோட்பாடு (சேப்பியன்ஸ்:2018:16,17).

இரண்டுமே கோட்பாடுகள் தான். இரண்டிலுமே உண்மை இருக்கக்கூடும். ஆனால் தற்போதைய ஹோமோ சேப்பியன்ஸ் (மனித அறிவாளன்) இனம், தாங்கள் வேறு எதனுடனும் தொடர்பில்லாத தனி மனித இனம் என்று கூறப்படுவதையே விரும்புவதால், இரண்டாவது கோட்பாடு, அதாவது பிற மனித இனங்கள் அழிக்கப்பட்டுவிட்டன என்ற கோட்பாடு வலுவாகப் பரந்திருக்கிறது. அதுவும் சில காலம் தான். டி.என்.ஏ. என்னும் மரபணுச் சோதனைகளில் நியாண்டர்தால் மனித இனத்தின் மரபணுக்கள் 2010 ஆம் ஆண்டில், தற்போதைய மனித இனத்தில், கண்டுபிடிக்கப்பட்டதைத் தொடர்ந்து பெரும் விவாதங்கள் நிகழ்ந்து வருகின்றன. ஒரு சில இடங்களில் எங்காவது இனக்கலப்பு (நான்கு விழுக்காடு வரை - சேப்பியன்ஸ்:2018:19) நிகழ்ந்து இருக்கலாம். ஆனால்

ஒட்டுமொத்தமாகப் பிற மனித இனங்கள் இன்று யாரும் இல்லை என்று நிறுவுவதில் பெரும்பாலோர் ஆர்வமாக உள்ளனர்.

உயரம் - குள்ளம், பருமன் - ஒல்லி, கருப்பு - வெள்ளை போன்ற வேற்றுமைகள் இன்றும் பிற மனித இனத்தின் எச்சங்கள் நம்முடன் வாழ்வதைக் குறிப்பதாக ஒரு சில எதிர்வாதம் இருந்தாலும், இன அழிப்பு வாதத்தை எல்லோரும் விரும்பி ஏற்கிறார்கள். இதற்காக இல்லாத கடவுள்களை இவர்களே உருவாக்கி, கடவுள் மனித இனத்தை உருவாக்கியதாகக் கற்பித்துத் தனித்தனிச் சமயம், மதம், கூட்டம் என்று கூறி, அவற்றிலும் தாங்கள் உயர்ந்தவர்கள் என்று பெருமை கொள்வதையே மனித அறிவாளனான சேப்பியன்ஸ் இனம் விரும்புகிறது. சிலர் ஆதாம் ஏவாளில் இருந்து வந்த இனம் என்றும், சிலர் உருவமற்ற இறைவனால் படைக்கப்பட்டோம் என்றும், சிலர் உருவமுள்ள இறைவனால் படைக்கப் பட்டோம் என்றும், சிலர் தங்களைச் சூரிய, சந்திர வம்சம் என்றும் கட்டுக் கதைகளைக் கூறித் தங்களைச் சேப்பியன்ஸ் (அறிவாளன்) என்பதிலிருந்து வேறுபடுத்திக் கொள்வதில் ஆவேசமும், வெறியும் கொள்கிறார்கள். இன்றும் காட்டப்படும் ஆவேசமும், வெறியும் ஒரு காலத்தில் இவர்கள் பிற இனங்களைக் கொன்றழித்து இருப்பார்கள் என்பதைப் பெரிதும் நம்ப வைக்கின்றன. வரலாற்றின் ஒவ்வொரு காலகட்டத்திலும்

*நிகழ்ந்த கொடூரமான மதச் சண்டைகளும், இன்றும் நிகழ்ந்து வரும் மதக் கலவரங்களும் அவற்றை நிரூபிக்கின்றன. நாம் வாழ்ந்து கொண்டிருக்கும் ஹோமோ சேப்பியன்ஸ் (மனித அறிவாளன்) இனத்தில் எல்லோருமே மதம் பிடித்தவர்களாகவும், இரக்கமற்றவர்களாகவும் இருந்திருக்கிறார்களா என்றால் இல்லை. மகாவீரர், புத்தர் போன்ற பொறுமையையும், அன்பையும் போதித்த உண்மையான அறிவாளர்களும் இருந்திருக்கின்றனர். அவர்களும் ஹோமோ சேப்பியன்ஸ் இனம்தான்.*

*வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட ஹோமோ சேப்பியன்ஸ் உள்ளிட்ட பிற மனித இனங்களின் வாழ்க்கை முறையையும், பண்பாட்டையும் பற்றி அறிந்து கொள்ள அதிகமான சான்றுகள் ஏதும் இல்லை. அவர்கள் பயன்படுத்தியதே கற்கருவிகள் தான். இந்தக் கற்கருவிகளை வைத்தே பூமியில் வாழ்ந்த மனித இனங்களின் காலத்தையும் கணிக்கும் நிலைதான் இன்றைய மனித இனத்தின் வரலாறாக ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. கற்கருவிகள் குறித்துப் பல கதைகள் உண்டு. பழங்கால மனிதர்கள் பற்றிய ஆய்வுத் தகவல்கள் இல்லாத அக்காலத்தில், கி.பி. 1800 ஆம் ஆண்டில், அவர்களுடைய ஆயுதங்கள் பற்றிக் கேள்விப்பட்ட ஜான் பிரெரே என்பவர் கற்கோடரியின் படம் ஒன்று வரைய, இங்கிலாந்து பத்திரிகை ஒன்று அதை வெளியிட்டது. அதைப் பார்த்து மக்கள் பயந்ததே அதிகம். இவை கடும் சீற்றத்துடன்*

கூடிய புயலின் போது வானத்தில் இருந்து விழுந்ததாக மக்கள் நம்பினார்கள். அதனை இடிக் கற்கள் என்றும் கூறினார்கள். மின்னல் தாக்கியதால் நிலத்திற்குள்ளிருந்து மேற்பரப்பில் வந்ததாகப் பேசிக்கொண்டார்கள். இதனால் பயந்து போய்க் கற்கோடரியின் வடிவத்தைத் தாயத்து போல் அணியும் பழக்கமும் ஏற்பட்டது. தமிழ்நாட்டில் கற்கோடரியின் தொடர் பயன்பாடு இருந்திருக்கும் என்றே தோன்றுகிறது. சேர்வராயன் மலைப் பகுதிகளில் உழவு செய்யும்போது கிடைத்த கற்காலக் கோடரிகளை இடியாக விழுந்தவை என்று எண்ணி மரத்தடிக் கோவில்களில் வைத்து தெய்வீகக் கல்லாக வணங்கி வருகின்றனர் (ஏற்காடு இளங்கோ:2017:67,111). கல்லாலான கோடரியை மட்டும் பார்க்க வேல் வடிவத்தில் காணப்படும். அதனுடன் ஒரு மரக்கிளை அல்லது மூங்கில் வைத்துக் கட்டினால் அது வேல் ஆயுதம் தான். வேலன் வெறியாட்டம் என்பது நாட்டையும், ஊரையும் காக்கும் வீரர்களுக்காக நடத்தப்படும் ஒரு சடங்காகச் சங்க காலத்தில் இருந்தது. அவர்கள் உயிர்த் தியாகம் செய்தால் நடுகற்களில் அவர்கள் உருவம் பொறித்து வணங்கப்படும். அவர்கள் கையில் இருந்த அந்த ஆயுதம் தான் வேலாயுதம். இது வேல் வடிவம் கொண்ட கற்கோடரியின் நீட்சியாக இருக்கக்கூடும். உருவ வழிபாட்டின் தொடக்கமாக இந்தக் கற்கோடரிகள் (வேல்) இருந்திருக்கலாம்.

*எது எப்படியோ, மனித இனம் தோன்றியது ஆப்பிரிக்காவில் தான் என்று பெரும்பாலான ஆய்வாளர்கள் ஏற்றுக்கொண்டு விட்டனர். மனித இனத்தின் பல வகைகளும் அங்கு தான் தோற்றம் பெற்றன. எழுபது முதல் அறுபது இலட்சம் ஆண்டுகளுக்கு முன்பாகத் தோன்றிய மனித இனத்தின் சில வகையினர், இருபது இலட்சம் ஆண்டுகளுக்கு முன்பு ஆப்பிரிக்காவை விட்டுப் புலம் பெயரத் தொடங்கினர். நில வழியாக அவர்கள் ஆசியா, ஐரோப்பா, சீனா, தென் அமெரிக்கா ஆகிய பகுதிகளிலும், கடற்கரை வழியாகத் தென் இந்தியாவுக்கும், ஆஸ்திரேலியாவுக்கும் பரவினர். எழுபத்தையாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாக அவர்கள் தெற்காசிய நாடுகளுக்குப் பரவியதாகக் கூறப்படுகிறது. இலங்கையில் 34,000 ஆண்டுகளுக்கு முன்பும், வட இந்தியப் பகுதிகளில் உத்தரப் பிரதேசம் பெலான் பள்ளத்தாக்குப் பகுதிகளில் 18,000 ஆண்டுகளுக்கு முன்பும் இவர்கள் பரவி இருந்தனர் என்பதாகப் பல்வேறு ஆய்வுத் தகவல்கள் தெரிவிக்கின்றன (Dr.V.Selvakumar: 2010:17-36).*

*இப்படியாக, இந்தியத் துணைக்கண்டத்தில் பரவியிருந்த இனம்தான், இக்கண்டத்தின் பூர்வகுடிகள் என்று கூறப்படுகிறது. ஆனால் இக்கண்டத்திற்கென்றுச் சொந்தப் பூர்வகுடி மக்கள் குறிப்பாகத் தென்னிந்தியா எனப்பட்ட அன்றைய தமிழகத்தில் பூர்வகுடி மக்கள் இருந்தனர் என்றும், அவர்கள் குமரிக்கண்டம் அல்லது இலெமூரியா என்ற*

கண்டத்தோடு இணைந்திருந்தனர் என்றும் விலங்கியல் ஆய்வாளர்களால் 19 ஆம் நூற்றாண்டில் சில கருத்துக்கள் முன்வைக்கப்பட்டன. குமரிக்கண்டத்தைக் கடல் கொண்டபோது எஞ்சியிருந்த தமிழ் இனத்தவர் தான் தற்போதைய தமிழ் நாட்டினர் என்று தமிழ் இலக்கியங்களை மேற்கோள் காட்டித் தமிழறிஞர்களான பாவாணர், அப்பாதுரையார் போன்றோர் கருத்துரைத்து வந்தனர். ஆனால் 1915 ஆம் ஆண்டில், ஆல்பர்ட் வெகனர் என்ற ஜெர்மானியர் 'பாஞ்சியா' (Pangaea) என்னும் கோட்பாட்டை முன்வைத்து, அது வரலாறு, தொல்லியல் ஆய்வாளர்களால் ஏற்றுக் கொள்ளப் பட்ட பிறகு, குமரிக்கண்டக் கோட்பாடு கிட்டத்தட்ட கைவிடப் பட்ட ஒன்றாக ஆகிவிட்டது. இன்று உலகில் உள்ள ஏழு பெரிய கண்டத் திட்டுகளும் ஒருகாலத்தில் ஒன்றாக இருந்து, 22.5 கோடி ஆண்டுகளுக்கு முன்பு பிரியத்தொடங்கி, இன்று தனித்தனியாக ஏழு கண்டத் திட்டுகளாக நிலை பெற்றுள்ளன என்பது தான் 'பாஞ்சியா' கோட்பாடு. இக்கோட்பாட்டில் குமரிக்கண்டம் இல்லை. கிட்டத்தட்ட இக்கோட்பாடு அனைத்து அறிவியலாளர்களும் ஏற்றுக் கொள்ளப் பட்டு விட்டது.[2] ஆனாலும் திராவிட மொழிக் குடும்பத்தினர் இந்தியத் துணைக்கண்டத்தின் பூர்வகுடி மக்களே என்ற ஆய்வுகள் தொடர்ந்து கொண்டே இருக்கின்றன. ஆனால், சிந்துவெளி முதற்கொண்டு தென்னிந்தியா வரையில் பரவியிருந்தவர்கள் ஆப்பிரிக்காவில் இருந்து புலம் பெயர்ந்த திராவிடர்களே

*என்று மரபியல், மொழியியல் கூறுகளை வைத்து நிறுவும் ஆய்வுகளும் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன (Dr.V.Selvakumar: 2010:33-35).*

*வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தை வலுவான சான்றுகளுடன் விளக்கவும், நிறுவவும் வாய்ப்பில்லை. பேரண்டம், சூரியக் குடும்பம், பூமி, உயிரினங்கள், மனித இனங்கள் இவை எல்லாமே வரலாற்று நிகழ்வுகள் தான். இவற்றிற்கெல்லாம் வரலாறு இருந்தாலும் அவை உருவாக்கப்பட்ட வரலாறாக இல்லாமல் இயற்கையோடு இயைந்த வரலாற்றைக் கொண்டவை. அதற்கு மாறான வரலாறு என்பது மனித இனத்திற்காக மனிதர்களால் உருவாக்கப் பட்ட வரலாறாக அதுவும் வென்றவர்களின் வரலாறாகக் கிடைக்கிறது. அந்த மனித இனத்திலும் எந்த இனம் அறிவு சார்ந்து செயல்பட்டதோ அப்போதிலிருந்து தான் அவ்வரலாறு தொடங்குகிறது. அவற்றிலிருந்து எப்போது, ஏதோ ஒன்று சொல்லப்பட்டதோ அல்லது எழுதப்பட்டதோ அந்தக் காலம் வரை வரலாற்றுக் காலமாகக் கொள்ளப்படுகிறது. அதற்கு முன்பு ஆதி வரையில் வரலாற்றுக்கு முற்பட்ட காலம் தான். அதாவது, இன்றிலிருந்து பின் கணக்கில் 5,000 அல்லது 6,000 ஆண்டுகள் வரையிலான காலமே வரலாற்றுக்காலம். இக்காலத்தில் தான் மனிதனின் எண்ணங்கள் எழுத்துகள் ஆயின. மனிதன் புதிய புதிய கண்டுபிடிப்புகளில் ஈடுபட்டான். கண்டுபிடித்தான். 6,000 ஆண்டுகளுக்கு*

முன்பிருந்து உலகம் தோன்றிய காலமான 450 கோடி ஆண்டுகள் வரை வரலாற்றுக்கு முற்பட்ட காலம் தான். இக்கால கட்டத்தில் ஒரு குறிப்பிட்ட காலம் வரை மனிதனும், பிற உயிரினங்களும் இயற்கையில் ஒன்றுதான். ஆனால் மனித இனத்தில் ஹோமோ சேப்பியன்ஸ் என்ற இனத்தவனே வரலாற்றை வசப்படுத்திய மனித இனமாக (அறிவாளன்), சிறுகச்சிறுக எல்லாவற்றையும் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்த உயிரினமாக மாறிப்போனான். இந்த அடிப்படையில் மனித இனம் தோன்றி, பரவி, அவர்கள் வாழ்ந்த இடத்தில் அவர்கள் பயன்படுத்திய கற்களை வைத்து வரலாற்றுக்கு முற்பட்ட காலங்களைக் கற் காலங்களாக ஆய்வாளர்கள் பிரித்து வைத்துள்ளனர். இக்காலங்கள் ஒவ்வொரு இடத்துக்கும் மாறுபடும்.

- மிகப் பழங்காலம் : 2 கோடி ஆண்டுகள்
- பழங்கற்காலம் (முன்) : 7 இலட்சம் - 50,000 ஆண்டுகள்
- பழங்கற்காலம் (இடை) : 1.5 இலட்சம் ஆண்டுகள் - 35,000 ஆண்டுகள்
- பழங்கற்காலம் (கடை) : 30,000 ஆண்டுகள் - 10,000 ஆண்டுகள்
- இடைக் கற்காலம் : 10,000 ஆண்டுகள் - 3,000 ஆண்டுகள்
- புதிய கற்காலம் : 8,000 ஆண்டுகள் - 2,000 ஆண்டுகள்

- செம்புக் காலம் : *5,000* ஆண்டுகள் - *3,000* ஆண்டுகள்
- இரும்புக் காலம் : *3,000* ஆண்டுகள் - *2300* ஆண்டுகள்

இன்றைய இந்தியத் துணைக்கண்டத்தில் கற்கால மனிதர்களின் வரலாற்றை அவர்கள் பயன்படுத்திய கல் ஆயுதங்களைக் கொண்டு கணிக்கப்பட்ட கால அட்டவணை தான் மேற் குறிப்பிடப்பட்டுள்ளது. இவை தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் வெளியிட்ட குறிப்பில் உள்ளவை (*Dr. V. Selvakumar: 2010:17*).

மிகப் பழங்காலத்தைச் சேர்ந்த தொல்பொருள்கள் மிக அரிதானவை. இவற்றில் சில தற்போதைய பாகிஸ்தானின் ரிவாட் பள்ளத்தாக்கில் கிடைத்துள்ளன. பழங்கற்காலத்தைச் சேர்ந்த கற்கருவிகள் குறிப்பாகக் கற்கோடரிகள் சோகான் பள்ளத்தாக்கு (பாகிஸ்தான்), பெலான் பள்ளத்தாக்கு (உத்தரப் பிரதேசம்), அன்ஸ்கி பள்ளத்தாக்கு (கர்நாடகம்), நர்மதா பள்ளத்தாக்கு மற்றும் பிம்பேட்கா பாறைக் குகைகள் (மத்தியப் பிரதேசம்), திட்வானா (ராஜஸ்தான்), அத்திரம்பாக்கம் மற்றும் குடியம் (தமிழ்நாடு) ஆகிய பகுதிகளில் கிடைத்துள்ளன. இங்குக் குறிப்பிடப்பட்ட பகுதிகளிலேயே மிகப் பழமையான கற்காலக் கருவிகள் கிடைத்த இடம் இன்றைய சென்னைக்கு அருகிலுள்ள

அத்திரம்பாக்கம் என்ற ஊரைச் சுற்றியுள்ள பகுதிகள் தான். இங்கு 15 இலட்சம் ஆண்டுகளுக்கு முன்பாக வாழ்ந்திருந்த மனித இனத்தினர் பயன்படுத்திய 'அச்சூலியன்' வகைக் கற் கருவிகள் (Acheulian) கண்டுபிடிக்கப்பட்டன. இவற்றுடன் அங்கு வாழ்ந்த மனிதர்களின் வாழ்விடங்கள், பிராணிகளின் கால்தடங்கள், எலும்புகள் ஆகியவையும் கிடைத்துள்ளன. வரலாற்றுக்கு முந்தைய பழங்கற்காலக் கருவிகள் பிரான்சின் சோமி (Somme river) ஆற்றங்கரையில் 'செயின்ட் அச்சூல்' என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்டதை வைத்து, அதன் காலத்தைக் குறிப்பதற்காக 'அச்சூலியன்' கருவிகள் என்று வழங்கப்படுகிறது (Dr. S. Vasanthi: 2012:2). அதேபோன்று அக்கருவியைப் (கற்கோடரி) பயன்படுத்திய ஹோமோ எரக்டஸ் என்ற மனித இனம் தமிழ் நாட்டில் வாழ்ந்ததாக நிலவியல், தொல்லியல் ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர். ஆப்பிரிக்காவில் தோன்றிய மனித இனமான ஹோமோ எரக்டஸ் இனம், தமிழ்நாட்டின் அத்திரப்பாக்கம் பகுதியில் வாழ்ந்தனர் என்பதற்கு அப்பகுதியில் அவர்கள் பயன்படுத்திய கற்கருவிகள் சான்றாக அமைந்துள்ளன.

இதற்கு முன்பே, 1863 ஆம் ஆண்டில், சென்னைக்கு அருகிலுள்ள பல்லாவரத்தில் தற்போதைய திரிசூலம் பகுதியில் பழங்கற்காலக் கருவி ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது. அது கற்கோடரி ஆகும். கடினமான படிகக்கல் அல்லது கூழாங்கல் அல்லது மணற்கல் (Quartzite) வகையைச்

சேர்ந்தது. இதற்கு அடுத்து இதே ஆண்டில் அத்திரம்பாக்கம்குடத்தலை/கொற்றலை/கொசத்தலை/கோர்த்தலை ஆற்றுப் படுகைகளில் பூண்டிக்கு அருகே கற்கோடரியும், வேறு சில ஆயுதங்களும் கிடைத்தன. இதேபோன்று பாலாறு, வடஆற்காடு, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, தர்மபுரி, திருநெல்வேலி போன்ற பகுதிகளிலும் கற்கருவிகள் கிடைத்தன. பழங்கற்கால மனிதர்கள் இந்தியத் துணைக்கண்டத்தில் வாழ்ந்ததை இவை உறுதிப்படுத்தின. இங்கு வாழ்ந்தவர்கள் பயன்படுத்திய கற்களை வைத்துப் படிகக்கல் மனிதர்கள் (Quartzite Men) என்று இங்கு வாழ்ந்தவர்கள் அழைக்கப்பட்டனர்.

இவ்வகைக் கற்கள் எங்கு தென்படுகின்றனவோ அவ்விடத்தைப் பழங் கற்காலக் குறியீடுகளாக ஆய்வாளர்கள் கொண்டனர். (Dr. K. V. Raman: 2015:51). இதனால் பழைய கற்காலம் குறித்த உலக வரைபடத்தில் இந்தியாவும் இடம் பிடித்தது. சென்னைக்கு அருகில் கிடைத்த தொல்பொருள் கற்கருவிகளை வைத்து சென்னையின் அப்போதைய பெயரான மதராஸ் என்ற பெயரால் மதராசியப் பண்பாடு (Madrasian culture) என்று இப்பண்பாடு குறிக்கப்படுகிறது. மேலும் இங்குக் கிடைத்த கருவிகளை வைத்து, இது இக்கருவிகள் உற்பத்தி செய்யப்பட்ட இடம் என்பதைக் குறிக்கும் வகையில் இவ்விடம் மதராசியன் கற் கருவித் தொழிற்சாலை (Madrasian Industry) என்றும் மெட்ராஸ் மரபு

என்றும், அச்சூலியன் தொழிற்சாலை (Acheulian Industry) என்றும் அழைக்கப்படுகின்றது. இதே போல் இந்தியாவில் மற்றொரு கற்கருவி உற்பத்தி இடமாக நர்மதைப் பள்ளத்தாக்கில் உள்ள சோன் என்னும் பகுதி குறிக்கப்படுகிறது. இது சோன் பண்பாடு (Soan culture) என்று அழைக்கப்படுகிறது (Dr. S. Vasanthi: 2012:5-11).

பழங்கற்கால உலக வரைபடத்தில் சென்னையும், இந்தியத் துணைக் கண்டமும் சேரக் காரணமாக அமைந்தவர் இராபர்ட் புரூஸ் பூட் (Robert Bruce Foote - 1834-1912)) என்பவர். இங்கிலாந்தில் பிறந்து நிலவியல், தொல்லியல் வல்லுநராக விளங்கியவர். இந்தியாவில் தொல்லியல் ஆய்வு நிறுவனம் 1861 ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. அதற்கு முன்பு 1851ஆம் ஆண்டில் இந்தியப் புவியியல் ஆய்வு மையம் தொடங்கப்பட்டது. உலகில் மனித இனத் தோற்றம் குறித்த ஆய்வுகள் 1860 ஆம் ஆண்டுகளில் தீவிரமடையத் தொடங்கிய காலத்தில், புவியியல் ஆய்வு மையப் பணிக்காகச் சென்னை வந்தார் இராபர்ட் புரூஸ். நிலவியலிலும், தொல்லியலும் ஆர்வம் கொண்டிருந்த அவர் அது தொடர்பான ஆய்வுகளில் ஈடுபட்டு வந்த போதுதான், 1863 ஆம் ஆண்டில், பல்லாவரம், அத்திரம்பாக்கம், குடியம் ஆகிய பகுதிகளில் கற்கருவிகளைக் கண்டுபிடித்தார். மூங்கிலில் செருகக்கூடிய சிறிய வகை கல் ஈட்டி முனைகள் பல்லாவரத்தில் கிடைத்தன. தொடர்ந்து பூண்டிக்கு அருகில் உள்ள பரிக்குளம் கிராமத்தில் ஐந்து

இலட்சம் ஆண்டுகள் பழமையான செம்மண் சரளைக் கல் படுகையில் கற்காலக் கருவிகளைக் கண்டுபிடித்தார். பூண்டிக்கு வடக்கில் குடியம் பகுதியில் மிகப் பழமைவாய்ந்த, நீளமான பதினாறு குகைகளைத் தேடியலைந்து அகழ்வாராய்ச்சி நடத்தி அங்கு ஏராளமான கற்கருவிகளைக் கண்டுபிடித்தார். இதன் மூலம் பழங்கற்கால மனித இனம் தமிழ்நாட்டில் வாழ்ந்ததை உலகிற்கு அறியப்படுத்தக் காரணமானார்.

நிலவியல், தொல்லியல், மானுடவியல், படிமவியல் அறிஞராக வளர்ச்சி நிலை பெற்ற புரூஸ், தொடர்ந்து தென்னிந்தியா முழுமைக்கும் சென்று ஆய்வு செய்தார். ஆந்திராவில் கர்னூல் மாவட்டத்தில் இயற்கையாக அமைந்த பெலும் குகைகளைக் கண்டுபிடித்தார். கற்கால மனிதர் தொட்டு, புத்தத் துறவிகள் காலம் வரையில் பெலும் குகையில் மனிதர்கள் தொடர்ந்து வாழ்ந்து வந்த மானுடவியல் வரலாறும் அவரால் வெளியானது. பெலும் குகைப் பகுதியில் நாற்பதடி உயரம் கொண்ட புத்தர் சிலை ஒன்று உள்ளது. மேலும், நெல்லூர், ஹைதராபாத், மைசூர், குஜராத் ஆகிய பகுதிகளிலும் ஆய்வுகளை மேற்கொண்ட புரூஸ், கர்நாடகாவைச் சேர்ந்த பெல்காம் மாவட்டத்தில் காண்டாமிருகத்தின் மண்டைஓடுப் படிமத்தைக் கண்டெடுத்தார். 1883 ஆம் ஆண்டில் திருநெல்வேலி, சைதாங்க நல்லூர் பகுதியில் தேரி எனப்படும் மணல் குன்றுப்

பகுதிகளிலும், சாயர்புரம் தேரிப் பகுதிகளிலும் நுண் கற்கருவிகளைக் கண்டெடுத்தார். அங்கு நுண் கற் கருவிகள் தயாரிக்கும் தொழில் கூடம் இருந்ததையும் புரூஸ் வெளிப்படுத்தினார். அது இடைக் கற்காலத்தைச் சேர்ந்த நுண் கற் கருவிப் பண்பாடு என்று அறியப்படுகிறது. அவருடைய தொடர் ஆய்வுகளுக்காக இராபர்ட் புரூஸ் பூட், "இந்தியத் தொல் பழங்கால வரலாற்றின் தந்தை" எனப் போற்றப்படுகிறார் (ஏற்காடு இளங்கோ: ராபர்ட் புரூஸ் பூட்: *2017*).



இராபர்ட் புரூசைத் தொடர்ந்து வேறு பல ஆய்வாளர்களும் இப்பகுதிகளில் ஆய்வுகளை மேற்கொண்டு வருகின்றனர். இந்திய அரசின் தொல்லியல் துறையினரும், சென்னைப் பல்கலைக்கழகத் தொல்லியல் துறையினரும் அங்கு அகழ்வாராய்ச்சிகளை மேற்கொண்டனர். அத்திரம்பாக்கம் கோர்த்தலை (கொற்றலை) ஆற்றுப்பகுதியில் சாந்திபாப்பு என்பவர், 1991 ஆம் ஆண்டு முதல் ஆய்வுகளை மேற்கொண்டார். 1999ஆம் ஆண்டு முதல் இப் பகுதியில் அகழ்வாராய்ச்சிகளையும் அவர் மேற்கொண்டார். இதில் 3500க்கும் மேற்பட்ட தொல் பழங்காலப் பொருட்கள் கண்டெடுக்கப்பட்டன. இதன் மூலம் 15 லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு இங்கு மனித இனம் வாழ்ந்ததை இவர் ஆய்வின் வழி உறுதிப்படுத்தினார். இரண்டு இலட்சம் ஆண்டுகளுக்கு முன்பு தோன்றிய ஹோமோ சேப்பியன்ஸ் இனத்தவர்களாக நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். ஆனால் 15 லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு தமிழ் நாட்டில் மனித இனம் வாழ்ந்திருக்கிறது. அவர்கள் ஹோமோ எரக்டஸ் என்னும் சேப்பியன்ஸ் இனத்திற்கு முந்திய இனம். 20 இலட்சம் தொடங்கி 16 இலட்சம் ஆண்டுகளுக்கு முன்பு ஆப்பிரிக்காவில் தோன்றிப் புலம் பெயர்ந்தவர்கள். அச்சூலியன் கருவிகளை உபயோகப் படுத்தியவர்கள். சாந்திபாப்பு மேற்கொண்ட ஆய்வுகளில் கிடைத்த தொல்பொருட்கள் நவீன ஆய்வுகளுக்கு உட்படுத்தப்பட்டன (cosmogenic nuclide burial dating). இவ்வாய்வின் முடிவுகள்,

தமிழ்நாட்டில் 15 லட்சம் ஆண்டுகளுக்கு முன்பே மனித இனம் வாழ்ந்ததை நிரூபித்துள்ளன. இப்பகுதியில் வெளிநாட்டுத் தொல்லியல் ஆய்வாளர்களும் தொடர் ஆய்வுகள் நடத்தி வருகின்றனர். 2001 ஆம் ஆண்டில் நடத்தப்பட்ட அகழ்வாராய்ச்சியில் இங்குக்கிடைத்த பொருட்கள் காஸ்மிக் கதிர் காலக் கணிப்பு முறையில் (cosmic ray exposure dating) ஆய்வு செய்யப்பட்டு, இக்கற்கருவிகள் 15 லட்சம் ஆண்டுகளுக்கு முற்பட்டவை என்று அறிவிக்கப்பட்டது.[3]

மனித இனம் குறித்த ஆய்வுகளில் தற்காலத்தில் மரபணுச் சோதனை ஆய்வுகளும் முக்கிய இடம் பிடித்துள்ளன. 2010 ஆம் ஆண்டில் நடத்தப்பட்ட மரபணுச் சோதனையில் தமிழ்நாட்டில், மதுரை அருகில், ஜோதிமாணிக்கம் என்னும் கிராமத்தில் வாழும் விருமாண்டி என்பவரின் மரபணு (DNA M130), ஆப்பிரிக்காவில் 70,000 ஆண்டுகளுக்கு முன்பு புலம் பெயர்ந்து வந்த ஹோமோ சேப்பியன்ஸ்/நியாண்டர்தால் இனத்தின் மரபணுவோடு பொருந்தியதை வைத்தும் மனித இனத்தின் வரலாறு விரிவுபடுத்தப்பட்டது. இம் மரபணுவின் சாயல் மேற்குத் தொடர்ச்சி மலைப்பகுதி ஆய்வுகளிலும் அவ்வப்போது தென்பட்டது. ஆஸ்திரேலியாவின் பூர்வகுடிகளில் பாதிப்பேருக்கு இம்மரபணு மாதிரிகள் உள்ளன. பிலிப்பைன்ஸ், மலேசியாவின் பழங்குடி இனத்தவருக்கும் இம்மரபணு மாதிரிகள் உள்ளன (Dr. V.

*Selvakumar: 2010:33*). இவை எல்லாம் ஹோமோ எரக்டஸ், ஹோமோ சேப்பியன்ஸ் ஆகிய மனித இனங்கள் தமிழகம் தொடங்கி ஆஸ்திரேலியா வரை பரந்து இருப்பதையே உறுதிப்படுத்துகின்றன.




Representative artefacts from layer 5, trench T7A a, b, Blade cores (see Extended Data Fig. 6a for details of blade removals in a). c–e, Levallois cores. f–i, Levallois points. j, Tanged point (see Extended Data Fig. 5a for details). k–n, Retouched points. o, p, Bifacially flaked points. q–u, Handaxes (r–u are diminutive). v, Diminutive cleaver.

**Middle Palaeolithic culture Acheulian tools - Prehistoric site of Attirampakkam, India**

**DOI:10.1038/nature25444**

புதிய கற்காலக் கருவிகளும் தமிழ்நாட்டில் கிடைத்துள்ளன. தமிழ்நாட்டில் புதிய கற்காலம் நான்காயிரம் ஆண்டுகளுக்கு முன்பு என கணிக்கப்பட்டுள்ளது. இக்காலத்தின் கருவிகள் தொழில்நுட்ப வகையில் முன்னேற்றம் அடைந்தவை. பளபளக்கும் தன்மை உள்ளவை. செம்பு கண்டுபிடிக்கப்படுவதற்கு முற்பட்ட காலமான புதிய கற்கால மக்கள், வேளாண்மை செய்வதில் ஈடுபட்டிருந்தனர். நிலையான குடியிருப்புகளை ஏற்படுத்திக்கொண்டனர். வீட்டு விலங்குகளை வளர்த்தனர். படிப்படியாக சமூக வாழ்க்கையில் பழகிய அவர்களின் மொழி, பேச்சு நிலையிலிருந்து எழுத்து நிலைக்கு மாறிய காலமாக இருந்தது. 1865 ஆம் ஆண்டில் சேலம் பகுதிகளில் இராபர்ட் புரூஸ் ஆய்வுகளை மேற்கொண்டு 65 வகையான புதிய கற்காலப் பொருள்களைக் கண்டுபிடித்துள்ளார். 2006 ஆம் ஆண்டில் நாகை மாவட்டம் மயிலாடுதுறை, செம்பியன் கண்டியூர் பகுதியில் கிடைத்த வழவழப்பான கற்கோடரி ஒன்று சிந்துவெளியில் உள்ளதைப் போன்ற குறியீடுகளுடன் கூடியதாகக் கிடைத்தது. இதைத் தொடர்ந்து அங்கு தமிழகத் தொல்லியல் துறையினரால் நடத்தப்பட்ட அகழ்வாராய்ச்சியில் மட்கலன்கள், பானை ஓடுகள், எலும்புச் சிதைவுகள் போன்றவையும் கிடைத்தன ((ta.m.wikipedia.org).

இறந்தவர்களை அப்படியே விட்டுச் செல்வதுதான் பழங்கால மனிதர்களின் வழக்கமாக இருந்தது. புதிய கற்காலத்தில்

இந்த நிலை மாறி வந்தது. இறந்தவர்களுக்கு மரியாதை செலுத்தும் பழக்கத்தால் இறந்தவர்களின் உடல்களை வைக்கும் இடத்தில் அடையாளமாகக் கற்களைச் சுற்றி வைத்தனர். பல இடங்களில் பெருங்கற்கள் அல்லது பாறையைச் சுற்றி அடுக்கும் பழக்கம் ஏற்பட்டது. இக்காலமே பெருங்கற்காலம் என்று அழைக்கப்படுகிறது. தமிழ்நாட்டில் பெருங்கற்காலம் என்பது 5000 ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கி கி.மு. 300 வரையிலும் என்று கணக்கிடப்பட்டுள்ளது. பெருங்கற் சின்னங்கள் ஏராளமான அளவில் இன்றும் காணப்படுகின்றன. கல்திட்டை, கல்வட்டம், நெடுங்கல், குத்துக்கல் (Menhirs) என்று பலவகைப் பெயர்களில் இவை உருவத்திற்கேற்ப அழைக்கப்படுகின்றன. இறந்தவர்களின் நினைவுச் சின்னங்கள் எல்லா ஊர்களிலும் ஆங்காங்கே காணப்படுகின்றன. முன்னோர் வழிபாடு, நடுகல் வழிபாடு ஆகியவற்றின் முதல் நிலையே பெருங்கற்காலச் சின்னங்கள் எனலாம். பெருங் கற்களைக் கொண்டு இறந்தவர் நினைவிடம், காலம் கணிக்கும் அமைவிடம், நினைவு உருவங்கள் என உலகம் முழுவதும் ஏராளமான பெருங்கற் சின்னங்கள் உள்ளன.

வரலாற்றுக் காலத்தைச் சேர்ந்த தொல்லியல் பொருள்களும், எழுத்துச் சான்றுகளும் நமக்கு ஏராளமாகக் கிடைத்துள்ளன. ஆனால் மிக நீண்ட பகுதியான வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தைச் சேர்ந்த சான்றுகளாக நமக்குக் கிடைத்து

இருப்பவை கல் ஆயுதங்கள் தான். அறிவு ஆட்சி செய்யாத போது, எல்லாமும் இயற்கையைச் சார்ந்தே இருந்தன. அறிவின் ஆட்சி எல்லாவற்றையும் அதன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்து விட்டது. இயற்கைக்கு மாறான நம்பிக்கைகளும் இன்றைக்கு இயற்கைக்கு எதிராகவே திரும்பி இருக்கின்றன. நடந்தே சென்று உலகைச் சுற்றி வந்த மனித இனம், இன்று விமானத்தில் பறந்து, இயற்கையை எப்படிக் காப்பாற்றுவது என்று மாநாடு கூட்டி விவாதித்துக் கொண்டு இருக்கிறது. அதையும் தாண்டிப் பிற கிரகங்களுக்குச் சென்று கால் வைப்பதற்கான ஆய்வுகள் நடந்து வருகின்றன. எங்கோ இருக்கும் பிற கோள்களிலிருந்து வரும் அறிவில் உயர்ந்த இனங்கள் நம்மை (மறைமுகமாக) ஆட்சி செலுத்தி வருகின்றனவா என்பது குறித்த ஆய்வுகளும் (unidentified flying object - UFO) ஒருபக்கம் நடைபெற்று வருகின்றன. ஆற்றலை, ஆறறிவை வியக்கின்ற நேரத்தில், அதன் ஆளுமைத் தன்மை, பிறவற்றை அடிமைப்படுத்தி அடக்குமுறைகள் செய்வது என்பது மனித இனத்தின் மரபணுவிலேயே உள்ளதா அல்லது உயிரினங்களின் மரபணுவிலேயே உள்ளதா என்பதை, பூமியில் மனித இனம் அழியும் முன்பே, ஆராய்ந்து அறிவதும் அதன்படி வாழ்வியலை மாற்றி அமைப்பதும் நிகழ்காலத் தேவை என்ற எண்ணம் ஆய்வாளர்களுக்குத் தோன்றாமலா இருந்திருக்கும்?

குறிப்புகள்:

*1. சீனாவின் ஹெய்லாங்கியாங் மாகாணத்தில் ஷாங்குவா நதியின் குறுக்கே 1933 ஆம் ஆண்டில் பாலம் கட்டும் போது கண்டெடுக்கப்பட்ட இந்த மண்டை ஓடு, தனிப்பட்ட ஒருவரின் பாதுகாப்பில் எண்பது ஆண்டுகள் வைக்கப்பட்டு, அவர் இறந்த பிறகு அண்மையில் அறிவியலாளர்களிடம் ஒப்படைக்கப்பட்டது. சீன மொழியில் லாங் என்றால் டிராகன் என்று பொருள். எனவே டிராகன் மனிதன் என்ற பொருளில் ஹோமோ லாங்கி (Homo Longi) என்று பெயரிடப்பட்டுள்ளது. இது ஆதி மனிதன் மற்றும் நவீன மனிதக் கூறுகளின் கலவையாக உள்ளது. இதன் தாடை எலும்பும், தற்போதைய திபெத்தியப் பீடபூமியில் கண்டெடுக்கப்பட்டுள்ள டெனிசோவன் இனத்தின் ஒரு தாடை எலும்பும் ஒரே மாதிரியாக இருப்பதால் டெனிசோவன் இன மனிதனின் முக அமைப்பாக இருக்கலாம் என்றும் கருத்து கூறப்பட்டுள்ளது. தி இன்னோவேஷன் என்னும் அறிவியல் இதழில் இது குறித்த ஆய்வுக் கட்டுரை வெளியாகியுள்ளது (www.bbc.com/tamil/science-576). ஹோமோ டெனிசோவன் இனம் கடந்த காலத்தைச் சேர்ந்த ஒரு வியத்தகு மர்மம். ரஷ்யாவின் டெனிசோவா குகையில் கண்டெடுக்கப்பட்ட 50,000- 30,000 ஆண்டுகள் பழமையான விரல்களில் நிகழ்த்தப்பட்ட டி. என். ஏ. ஆய்வுகளின் வழி டெனிசோவன் இனம் கண்டறியப்பட்டது (Indianexpress.com).*

*2. பாஞ்சியா (Pangaea) – 22.5 கோடி ஆண்டுகளுக்கு முன்பு பூமியின் நிலப்பரப்புகள் ஒன்றாக இருந்தன. அதன் வடபகுதி லாரேசியா என்றும், தெற்குப் பகுதி கோண்டுவானா என்றும் அழைக்கப்பட்டது. பின்னர் ஏற்பட்ட கண்டத்திட்டு நகர்வுகள் காரணமாக இப்பொழுது உள்ள ஏழு கண்டங்களாக பூமியின் நிலப்பரப்புகள் பிரிந்து இருக்கின்றன. கண்டங்கள் நகர்தலின் போது இன்னொரு கண்டத் திட்டில் மோதும் நிலை ஏற்பட்டால் அந்த மோதலின் விளைவாக தொடர் மலைகள் உண்டாகி இருப்பதை முன்பே ஆல்பிரட் வெகனர் சுட்டிக்காட்டியிருந்தார். தென்னமெரிக்கா, ஆப்பிரிக்கா, அண்டார்டிகா, ஆஸ்திரேலியா, இந்தியா ஆகியவற்றுக்கு இடையிலான நிலப்பாலம் ஒன்று நீண்ட காலத்திற்கு முன்பு இருந்ததையும் அவர் சுட்டிக்காட்டினார். மேலும் இப்பகுதிகளில் முன்பிருந்த கிளாசாப்டரிஸ் என்ற மரத்தின் பாறைப் படிமங்கள் படர்ந்து இருப்பதை வைத்தும் இப்பகுதிகள் ஒன்றாக இருந்தவை என்று நிரூபித்தார். இந்த வகைப் பாறைப் படிமங்கள் முதன் முதலில் இந்தியத் துணைக்கண்டத்தில் கோண்டுவானா என்ற பகுதியில் கிடைத்ததால், பழைய ஒன்றாக இருந்த தெற்கு நிலப்பகுதிகள் கோண்டுவானா நிலம் என்று அழைக்கப்பட்டன. மேலும், இலெமூரியாப் பகுதிகள் தெற்கிலிருந்து வடக்கு நோக்கி வந்து ஆசியக் கண்டத்தில் மோதிய நிகழ்வையும் அவர் சுட்டிக்காட்டினார். இவை இரண்டுக்கும் இடையில் இருந்த*

*டெத்திஸ் என்ற பெருங்கடல் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து, இறுதியில் கடலுக்கு இடமே இல்லாமல் கண்டத் திட்டுகள் மோதியதால் உருவானவைதான் திபெத்தியப் பீட பூமியும், இமய மலைத் தொடர்களும் என்றார். அதனால்தான் எவரெஸ்ட் சிகரம் ஆண்டுதோறும் சில சென்டி மீட்டர்கள் உயர்ந்துகொண்டே இருக்கிறது என்றும் அவர் கூறினார் (essay by Dr Siva Ilango in City ads Newspaper, July 15, 2010, p.3).*

*3. திருமதி சாந்திபாப்பு சென்னை சோழிங்கநல்லூரில் உள்ள ஆய்வு நிறுவனம் மூலம் மரபியல் கல்வி குறித்து உலகளாவிய அளவில் தொடர் நிகழ்ச்சிகள் நடத்தி வருகிறார். இக்கட்டுரையில் கூறப்பட்ட அவரது ஆய்வுகள் குறித்த கருத்துகள், தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை, 2020, ஜனவரி, 6 - 10 வரை நடத்திய தொல்லியல் பட்டறையில், திருமதி சாந்தி பாப்பு அவர்களால் செயல் விளக்கமாக அளிக்கப்பட்டவை.*

**நூல் விவரப் பட்டியல்:**

*1. யுவால் நோவா ஹராரி, சேப்பியன்ஸ் - மனிதகுலத்தின் ஒரு சுருக்கமான வரலாறு, 2011, மஞ்சள் பப்ளிஷிங் ஹவுஸ், போபால்.*

2. முனைவர் கே. வி. இராமன், தொல்லியல் ஆய்வுகள், 2015, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை.

3. முனைவர் தி. சுப்பிரமணியன், தமிழகத்தில் பெருங்கற்காலப் பண்பாடு, 2018, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை.

4. ஏற்காடு இளங்கோ, ராபர்ட் புரூஸ் பூட், 2017, ராமையா பதிப்பகம், சென்னை.

5. Dr. V. Selvakumar, Tamil cultural connections across the world, 2010, Tamil University, Thanjavur.

6. Dr. S. Vasanthi, Peeping the past - Through palaeolithic tools (An introduction), 2012, Department of Archaeology, Government of Tamilnadu, Chennai.

7. Akhilesh, Kumar & Pappu, Shanti & Rajapara, Haresh & Gunnell, Yanni & Shukla, Anil & Singhvi, Ashok. (2018).

## 11. அச்சுப் புரட்சியும் உலகளாவிய பதிப்பு முயற்சிகளும்

— முனைவர் க.சுபாஷிணி

குட்டன்பெர்க் என்ற பெயர் பதிப்பகம் அல்லது ஆய்வுலகம் மட்டுமன்றி அச்சு நூல்களைக் கையில் எடுத்து அதனைப் பயன்படுத்தும் ஒவ்வொருவரும் அறிந்திருக்க வேண்டிய ஒரு பெயர். யோகானஸ் குட்டன்பெர்க் (Johannes Gensfleisch zur Laden zum Gutenberg) என உலகளாவிய அளவில் அச்சுப் புரட்சியின் தந்தை என அறியப்படுகின்ற குட்டன்பெர்க் அவர்களது பிறந்த இல்லம் மற்றும் அருங்காட்சியகம் ஜெர்மனியின் மைன்ஸ் நகரில் அமைந்திருக்கின்றது.

இவர் பிறந்த தேதி சரியாக அறியப்படவில்லை என்றாலும் 1400 ஆம் ஆண்டு வாக்கில் பிறந்தவர் என்பதாக ஆவணங்கள் தெரிவிக்கின்றன. 3 பெப்ரவரி 1468 அன்று அதாவது, தனது அறுபத்து எட்டாவது வயதில் அவர் மறைந்தார். தனது வாழ்நாளில் ஒரு கண்டுபிடிப்பாளராக, ஒரு பொறியியலாளராக, அச்சுப் பணியாளராக, பதிப்பாளராக, தச்சராக எனப் பல துறைகளில் தடம் பதித்தவர் இவர். இவரது அச்சுயந்திரக் கண்டுபிடிப்பு ஐரோப்பாவுக்கு அச்சு இயந்திரத்தை அறிமுகப்படுத்தி அது உலகம் முழுவதும்

பரந்து விரிந்து உலகளாவிய அளவில் மாபெரும் புரட்சியை ஏற்படுத்தக் காரணமாகியது.












இவரது அச்சு இயந்திரங்கள் ஏற்படுத்திய தாக்கம் இத்தாலியின் ரோம் நகரத்தில் மையம் கொண்டிருந்த வாட்டிகன் அரசை எட்டியது. ஐரோப்பா மட்டுமன்றி உலகம்

முழுவதும் பைபிள் அச்சாக்கம் செய்யப்பட்டு அவை உலகம் முழுவதும் செல்ல வேண்டும் என்ற எண்ணம் கத்தோலிக்க அரசுக்கு தோன்றியது. இதன் காரணமாக அச்சு இயந்திரங்கள் ஜெர்மனியில் உருவாக்கப்பட்டு கப்பலில் பல்வேறு பகுதிகளுக்குக் கொண்டு செல்லப்பட்ட வரலாற்று நிகழ்வும் நிகழ்ந்தது.




இதன் தொடர்ச்சியில் இந்தோனேசியாவிற்குச் செல்வதற்காக வந்த ஒரு கப்பல் கேரளாவின் கொச்சின் பகுதியில் நிறுத்தப்படவே அங்கிருந்த பாதிரிமார்கள் அந்த அச்சுயந்திரம் தங்களது தமிழ் நிலத்து சமயப் பணிகளுக்குத் தேவை என்ற காரணத்தினால் அதனைக் கேட்டுப் பெற்று

தமிழின் முதல் அச்சு நூலை உருவாக்கினர். அதற்கு முன்பே 'கார்டிலா' என்ற ஒரு நூல் ரோமானிய தமிழ் உச்சரிப்புடன் என்ற வகையில் வாட்டிகனில் அச்சிடப்பட்டது. 'தம்பிரான் வணக்கம்' என்ற நூலே தமிழில் வெளியான முதல் அச்சு நூல் என்ற பெருமையைப் பெறுகிறது. இது நடந்த காலம் கி.பி 16ஆம் நூற்றாண்டின் மத்திய காலகட்டமாகும்.











யோகானஸ் குட்டன்பெர்க் தொழில் ரீதியாக அச்சு இயந்திரத்தைக் கண்டுபிடித்தார் என்றபோதிலும் அவரது செயற்பாடு மாபெரும் சமூகப் புரட்சிக்கு வித்திட்டது என்பதை மறுக்க இயலாது. ஆய்வுலகம் இதனை Gutenberg Revolution என்று சிறப்பித்துக் குறிப்பிடுகின்றது. இதற்குக் காரணம் நூல் வாசிப்பு என்பது ஐரோப்பாவைப் பொறுத்தவரை தேவாலயங்களிலும் அரசவை மற்றும் அரசு

சார் அமைப்பிலும் மட்டுமே என்ற நிலை மாறி எல்லாத் தரப்பு மக்களும் தாள்களில் அச்சு நூல் வடிவில் கொண்டுவரப்பட்ட எழுத்துப் படிமங்களை வாசிக்கக்கூடிய வாய்ப்பை அது உருவாக்கியது எனலாம்.

இந்தியச் சூழலை எடுத்துக் கொண்டால் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையில், மிகக் குறைந்த அளவில், சமூகத்தில் உயர் சாதி என அறியப்பட்டோரும் அரசுகளில் மட்டுமே என்ற வகையில் ஓலைச்சுவடிகள் மக்கள் மத்தியில் புழக்கத்தில் இருந்தன. ஓலைச்சுவடிகளைப் பாதுகாப்பதும், அதனை மறுபதிப்பு செய்வதும், அதனை எழுத்தாணியால் கீறி எழுதி தயாரிப்பதும் சுலபமான காரியமாக இல்லை. இதுவும் ஒருவகையில் சுவடிகள் எல்லோரையும் சென்றடைவதற்குத் தடையாக அமைந்தது எனலாம். இந்தச் சூழலில் அச்சு இயந்திரங்களைக் கொண்டு பெரிய எண்ணிக்கையில் நூல்களை இயந்திரத்தின் வழியாக பல பிரதிகளை அச்சாக்கம் செய்யும் முயற்சி நடைமுறைக்கு வந்தபிறகு பொதுமக்களும் நூல்களை வாங்கி அல்லது நூலகங்களிலிருந்து பெற்று வாசிக்கக் கூடிய வாய்ப்பு என்பது பரவலாக்கம் கண்டது.

தனது அச்சு இயந்திரம் படிப்படியாக பல்வேறு மாற்றங்களை உட்புகுத்தி இன்று நாம் காணும் பேரளவிலான நிலையை அடைவதைக் காண இன்று குட்டன்பெர்க் நம்மோடு இல்லை.

ஆனால் அவர் லத்தீன் மொழியில் அச்சாக்கம் செய்து உருவாக்கிய 200 பைபிள் நூல்கள் அவர் காலத்தில் அவர் சாதித்தது பெரிய சாதனை எனலாம். அன்று 200 பைபிள் நூல்களை அவர் அச்சுப் பதிப்பாக்கம் செய்து முடிக்க மூன்று ஆண்டுகள் ஆயின.

நூல்களை அச்சாக்கம் செய்து முடித்த பின்னரும் கூட அவை மக்களை சென்றடைய சரியான திட்டமிடல் அல்லது முன்னெடுப்பு என்பது அன்று சரியாக இயங்கவில்லை. அந்த சமயத்தில் கத்தோலிக்க சமய அமைப்பு அச்சு ஊடகத்தின் வழியே மக்களைச் சென்றடைய முடியும் என்ற எண்ணத்தை உறுதியாக நம்பியதால் பெருமளவில் பதிப்புகளைத் தயாரித்து வினியோகிக்கும் முயற்சிகளை மேற்கொண்டது. அதற்கு அடுத்த நூற்றாண்டு ஜெர்மனியில் தோன்றி பின்னர் படிப்படியாக விரிவாக்கம் கண்ட லூத்தரன் சீர்திருத்தக் கிறித்துவம் தனது கருத்துக்களை வெளியிடவும் அச்சு எந்திரத்தின் துணையை நாடி அதனைப் பயன்படுத்திக் கொண்டது. கிபி 1500 ஆண்டு வாக்கில் ஏறக்குறைய எட்டு மில்லியன் நூல்கள் ஐரோப்பாவில் இயந்திரங்களால் பதிக்கப்பட்டிருந்தன.

மார்ட்டின் லூத்தர் வாட்டிகன் கத்தோலிக்க அமைப்புக்கு எதிராக தனது 95 கருத்துகளை தாளில் அச்சுப் பதிவாக்கி தேவாலயத்தின் வாசலில் 1517ஆம் ஆண்டு அக்டோபர்

*31ஆம் தேதி ஆணி அடித்து ஒட்டி வைத்தார். கத்தோலிக்க தேவாலயத்தில் பழமைவாத சிந்தனைகள் மற்றும் அங்கு நிலவும் பிரச்சினைகளை அறிவார்ந்த வகையில் எதிர்க்கும் வகையில் அவரது கருத்துகள் அமைந்திருந்தன. இந்த அறிக்கை அக்காலகட்டத்தில் அச்சுப்பதிப்பு செய்யப்பட்டு பொதுமக்களுக்கு வினியோகம் செய்யப்பட்டது. ஏறக்குறைய மூன்று லட்சம் அறிக்கைகள் 1517 முதல் 1520 வரையிலுமான காலகட்டத்தில் ஐரோப்பா முழுமையுமே விநியோகிக்கப்பட்டன.*

*சமய நிறுவனங்களின் கொள்கை பிரச்சாரத்திற்கு மட்டுமன்றி படிப்படியாக அச்சு இயந்திரங்களின் பயன்பாடு என்பது மருத்துவம், கல்வி அறிவியல் என்ற வகையில் விரிவாக பயன்படுத்தப்பட்டது. இதன் காரணத்தால் மொழிகளின் இலக்கணத்தில் சீர்திருத்தங்களும் சீரமைப்பு முயற்சிகளும் நிகழ்ந்தன.*

*இன்று நாம் ஒவ்வொருவரும் நாம் விரும்பும் வகையில் நூல்களை வாங்கி வாசிப்பது எளிமையான ஒரு நிகழ்வாக மாற்றம் கண்டுள்ளது. தகவல்களும் செய்திகளும் எல்லோருக்கும் பொது என்ற வகையில் கருத்துப் புரட்சியை எல்லா மக்களுக்கும் கொண்டு சேர்த்ததில் அச்சு இயந்திரங்களே அடிப்படையாகின்றன.*

தமிழக் கல்வி சூழலிலும் கல்லூரி பாடத் திட்டங்களிலும் அச்சுப் பதிப்பாக்கத்தின் வரலாறு மற்றும் அது படிப்படியாக கண்ட வளர்ச்சியும் முன்னேற்றங்களும் பற்றிய செய்திகளும் யோகானஸ் குட்டன்பெர்க் பற்றிய வரலாற்றுத் தகவல்களும் இணைக்கப்பட வேண்டும். இது கல்வித் தளத்தில் மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் ஆரம்பக்கால அச்சு பதிப்பாக்க செயல்பாடுகள் மற்றும் அச்சு இயந்திரங்கள் பற்றிய அடிப்படை புரிதலை வழங்க நிச்சயம் உதவும்.

## 12. நேற்றைய செய்தி.. இன்றைய வரலாறு !

— முனைவர் தேமொழி

புதிய தகவலைக் கூறுவது பத்திரிக்கைகளின் நோக்கம். தினசரி நடைபெறும் வழக்கமான நடைமுறையில் இருந்து மாறுபட்ட தகவலாக இருப்பது, பெரும்பாலான மக்களைச் சென்றடைய வேண்டிய, அவர்களது வாழ்வில் தாக்கம் ஏற்படுத்தக் கூடிய, அவர்களுக்குப் பயன் தரக்கூடிய, அவர்களைப் பாதிக்கக் கூடிய கருத்து, அறிவிப்பு, நிகழ்ச்சி குறித்த தகவலாகவோ அது இருக்கலாம், அல்லது மக்கள் அறிய விரும்பலாம் என எதிர்பார்க்கப்படுவதாகவும் இருப்பது செய்தியாக அடையாளம் காணப்படுகிறது.

ஆனால் இவை யாவும் உண்மைத் தன்மை கொண்டவையாக இருக்கும். கட்டுக் கதைகளும், புனைவுகளும், ஊகங்களும் இருந்தால் அவை செய்தியல்ல, அவை படைப்பிலக்கியம் என்ற பிரிவிற்குச் சென்றுவிடும். இன்றும் பலருக்கு இந்த வேறுபாடு தெரியாமல் இருப்பதும், படிப்பவர் செய்தியா கட்டுக்கதையா என்று விளங்கிக் கொள்ள முடியாத வகையில் எல்லாவற்றையும் கலந்து தரும் ஊடகங்களும் உள்ளன. அவர்களின் நோக்கம் வேறு, தன்னலமும் ஏமாற்றும் நோக்கம் தவிர வேறு அடிப்படை நோக்கம் இருக்க வழியில்லை.

*தமிழ் அச்சேறிய பொழுது நூல்கள் அச்சாக்கம் பெற்று மக்களைச் சென்றடையத் துவங்கிய காலத்தில், நாட்டு நடப்புகளை மக்களிடம் கொண்டு சேர்க்கப் பல செய்தி இதழ்களும் துவக்கப் பட்டன. இவை தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கும் பெரும் பங்காற்றின, அத்துடன் சமூக வளர்ச்சியிலும் பெரும் பங்காற்றின. பெரும்பாலான வெகுமக்களைச் சென்றடைய உருவாக்கப்பட்ட செய்தி நாளிதழ்கள் போலவே, சமுதாயத்தின் ஒரு குறிப்பிட்ட பிரிவினரின் தேவைக்காக பற்பல சிறிய சிறப்பு இதழ்களாகப் பல மாற்று இதழ்களும் வெளியாகின. நாட்டின் சுதந்திரம், சமூக சுதந்திரம், தொழில்நுட்ப வளர்ச்சி, வணிகம் மற்றும் பொருளாதாரம், காந்திய சித்தாந்தங்கள், இலக்கியம், பெண்ணுரிமை, மதம் முதலிய பல செய்திகள் மற்றும் கருத்துக்களை பல்வேறு மாற்றுத் தமிழ் இதழ்கள் தேவையானவர்களுக்குக் கொண்டு சேர்த்துள்ளன.*

*பெண்களுக்காகப் பெண்களால் நடத்தப்பட்ட, பெண்ணுரிமையைக் குறிக்கோளாகக் கொண்ட இதழ்களை மாற்று இதழ்களுக்கான எடுத்துக் காட்டாகக் காட்டலாம். மாதர் மறுமணம் (1936), சிந்தாமணி (1923), தமிழ் மாது (1926), தமிழ் மகள் (1926), மகளிர் குரல் (1926), சக்கரவர்த்தினி (1926), கிருகலக்ஷ்மி (1936) போன்ற இதழ்கள் சில சான்றுகள்.*

இவை யாவும் பெண்களின் முன்னேற்றத்திற்கான நோக்கில் வெளியிடப்பட்ட சிறப்பிதழ்கள்.

மக்களைப் பற்றி மக்களுக்காக மக்களால் எழுதப்படுபவை செய்திகள் ஆகும். "இன்றைய செய்திகள் நாளைய வரலாறு" என்ற வழக்காறு உள்ளதை நாம் அறிவோம். நடைமுறைக்கும், இயற்கைக்கும் மாறுபட்ட புதுமையான நிகழ்ச்சிகள் செய்தியாகின்றன என்பதை அடிப்படை வரையறையாகக் கொண்டு;
"நாய் மனிதனைக் கடித்தால், அது செய்தி அல்ல,
ஆனால் மனிதன் நாயைக் கடித்தால் அது செய்தி"
என்ற நகைச்சுவை விளக்கமும் செய்தி என்பதற்குக் கொடுக்கப்படும்.

பத்திரிக்கையின் தாக்கத்தைக் கவிதையில் வடித்த கவிஞர்களும் உள்ளனர்.

*"உலகம் இதிலே அடங்குது*
*உண்மையும் பொய்யும் விளங்குது*
*கலகம் வருது தீருது*
*அச்சுக் கலையால் நிலைமை மாறுது"*

என்று இதை விளக்கிய கவியரசர் கண்ணதாசனும் சண்டமாருதம், திருமகள், திரை ஒலி, தென்றல், தென்றல்திரை, முல்லை, கண்ணதாசன் ஆகிய இதழ்களின் ஆசிரியராக இருந்தவரே.

பத்திரிக்கை குறித்து அனைவருக்கும் நினைவில் நிற்கும் மற்றொரு கவிதை பாரதிதாசனுடையது. செய்தித்தாள் பேராற்றலைக் கொண்டது என்பது பாரதிதாசனின் கருத்து, இதை,

*"காரிருள் அகத்தில் நல்ல*
*கதிரொளி நீதான்! இந்தப்*
*பாரிடைத் துயில்வோர் கண்ணிற்*
*பாய்ந்திடும் எழுச்சி நீதான்*
*ஊரினை நாட்டை இந்த*
*உலகினை ஒன்று சேர்க்கப்*
*பேரறிவாளர் நெஞ்சில்*
*பிறந்த பத்திரிகைப் பெண்ணே"*

என்றார் பாரதிதாசன். அவரும் குயில், பொன்னி, முல்லை, புதுவை முரசு, தேச சேவகன், புதுவைக் கலைமகன், தேசோபகாரி, தேசபக்தன், ஆனந்த போதினி, துய்ப்ளேக்ஸ் ஆகிய இதழ்களின் ஆசிரியராக இருந்தவர்தாம். கண்ணதாசனின் பாடல் 1963ஆம் ஆண்டு வெளியான 'குலமகள் ராதை' என்ற படத்திலும், பாரதிதாசனின் பாடலின் ஒரு பகுதி 1966ஆம் ஆண்டு வெளியான சந்திரோதயம் படத்திலும் இடம் பெற்றது.

சென்ற நூற்றாண்டின் தொடக்கக் கால கட்டத்தில், பிரிட்டிஷ் இந்தியா காலகட்டமான 20 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில்,

*அதாவது 1940ஆம் ஆண்டை ஒரு கால எல்லையாக நாம் வகுத்துக் கொண்டால், அக்காலத்தில் வெளியான, பொதுமக்களை அடையும் நோக்கில் நடத்தப்பட்ட, புகழ் பெற்ற நாளேடுகளான இந்து, சுதேசமித்திரன் போன்றவற்றைத் தவிர்த்து சமூகத்தின் ஒரு சில பிரிவினரை மட்டும் குறிவைத்துத் துவக்கப்பட்ட சிறப்புச் சிற்றிதழ்களான மாற்று இதழ்கள் மூலமும், அவை பதிவு செய்த செய்திகளின் மூலமும் 20 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியின் வரலாற்றை நாம் அறியலாம். பெரிய அளவில் வெகுமக்களை அணுகுவதில் இருந்து மாறுபட்டு, ஒரு குறுகிய வாசிப்பு வட்டத்தை அணுகும் குறிக்கோளுடனும், அப்பிரிவினர்க்குச் செய்திகளைக் கொண்டு சேர்க்கும் நோக்கத்துடன் எல்லையை வகுத்துக் கொண்டு வெளியான மாற்று இதழ்களும் சமூக மாற்றத்தில் பெரும் பங்கு வகித்துள்ளன. அவை கொண்டு சேர்த்த செய்திகளுக்கும், அச் செய்திகள் ஏற்படுத்திய தாக்கங்களுக்கும் கூட வரலாற்றில் பங்கு உண்டு என்பதை மறுப்பதற்கு இல்லை.*

*அச்சு இதழ்கள் இக்கால கட்டத்தில் செய்திகள் பகிர ஒரு புதிய வாய்ப்பாக அமைந்தது. அச்சு இதழ்கள் பரவலான ஆரம்பக் காலத்தில் தமிழில் தோன்றிய இவ்வாறான சிறப்புப் பத்திரிக்கைகளின் இயக்கம் ஆங்கிலத்தில் 'Early alternate Tamil magazine movement' என்று கூறப்படுகிறது. ஆரம்பக் கால மாற்றுப் பத்திரிக்கைகளைக் குறித்த துறையில் பலகாலமாக*

*ஈடுபட்டிருப்பவராகவும், அவற்றை ஆவணப்படுத்துவதும், ஆய்வு செய்வதுமாக அறியப்பட்டிருக்கும் பேராசிரியர் வீ.அரசு அவர்கள், இத்தகைய இதழ்களைப் படிப்பதன் மூலம் பல அரிய வரலாற்றுத் தகவல்களை அறிந்து கொள்ள முடிவதாகக் கூறியுள்ளார்.*

**அன்றைய செய்தி இன்றைய வரலாறுதானே !!!**

*சிறப்பு நோக்கத்தைக் குறிக்கோளாகக் கொண்டு இயங்கும் மாற்றுப் பத்திரிக்கைகளும் பொது இதழ்களைப் போன்றே நாள், வாரம் ஒருமுறை, மாதம் இருமுறை, அல்லது பத்து நாட்களுக்கு ஒருமுறை என மாதம் மும்முறையாக வெளியான இதழ்கள், மாத இதழ்கள், இரண்டு மாதத்திற்கு ஒருமுறை, அல்லது மூன்று மாதத்திற்கு ஒருமுறை என வெளியான காலாண்டு இதழ்கள், அரையாண்டு இதழ்கள், ஆண்டு மலர் என்ற பலவேறு கால இடைவெளிகளிலும் வெளியாயின. சில இதழ்கள் காலப்போக்கில் தேவைக்கு ஏற்ப வெளியிடும் கால இடைவெளிகளையும் மாற்றிக் கொண்டன. இது போன்று வெளியான இதழ்களின் நோக்கங்களை அவற்றின் தலைப்புகளின் மூலமே நம் தெளிவாக அறிந்து கொள்ளலாம். சில பத்திரிக்கைகள் அன்றும் ஆங்கிலத்திலும் தமிழிலும் வெளிவந்தன. முதல் தமிழ் கம்யூனிஸ்ட் ம. சிங்காரவேலர் 1923இல் 'லேபர் கிசான் கெசட்' என்ற மாதமிருமுறை வெளியான ஆங்கில ஏட்டையும்,*

வார ஏடாக 'தொழிலாளன்' என்ற தமிழ் ஏட்டையும் நடத்தினார்.

ஊடகங்கள் என எடுத்துக் கொண்டால், திரைப்படங்களின் போக்கு ஒரு தலைமுறைக்கு ஒருமுறை மாறுவது போலவே பத்திரிக்கைத் துறையும் காலப் போக்கில் மாறித்தான் வந்துள்ளது. இந்த மாற்றத்திற்கு சமூகச் சூழலும், தொழில்நுட்ப வளர்ச்சியும் காரணமாக அமைந்திருக்கின்றன. என் பார்வையில், ஒரு 60 ஆண்டுகளில் கொஞ்சம் கொஞ்சமாக எழுதப்படும் எழுத்து நடை, சமூகம் எதிர்கொள்ளும் நிகழ்ச்சிகள், செய்திகள் மக்களைச் சென்றடையும் தொழில் நுட்பம் ஆகியன முற்றிலும் மாறிவிடுவதாகத் தெரிகிறது.

1940ஆம் ஆண்டுக்கு முன்னர் வெளியான இதழ்கள் என்ற கால எல்லை வகுத்துக் கொண்டு பார்க்கும் பொழுது, விடுதலை அடையாத இந்திய மக்களின் போராட்டங்களும் வாழ்க்கைமுறையும் வேறு. அக்காலத்தில் கல்வி கற்று எழுதப் படிக்கத் தெரிந்தவர் எண்ணிக்கையும் குறைவு. ஆனால், அந்த குறைவான எண்ணிக்கையில் உள்ளவர்களை அடைய விரும்பித்தான் பல பத்திரிக்கைகளும் துவக்கப் பட்டன என்பது சவால்கள் நிறைந்த முயற்சி என்பதில் யாருக்கும் ஐயம் இருக்க வழியில்லை. அத்துடன், அக்கால மக்களுக்குப் பொழுது போக்கும் வாய்ப்புகளும் குறைவு.

தமிழில் முதல் பேசும் படம் என மக்களுக்குத் திரைப்படங்கள் அறிமுகமாகத் தொடங்கியிருந்த காலம் அது. நாடகம், இசைநிகழ்ச்சி, சொற்பொழிவு இவை போன்றவையே நகர மக்களுக்குக் கிடைத்தன. அவற்றின் மூலம்தான் மக்களிடம் கருத்துக்களைக் கொண்டு சென்று கொண்டிருந்தார்கள். ஆக, வெகுமக்களைக் கவரும் கலையுலகச் செய்திகள் மற்றும் விளையாட்டுச் செய்திகளுக்குப் பத்திரிக்கைகளில் வெற்றிடம் இருந்த காலம் அது. இக்கால கட்டத்தில் நடத்தப்பட்ட இதழ்களின் ஆசிரியர்கள் 19ஆம் நூற்றாண்டில் பிறந்தவர்கள்.

1940 காலகட்டத்திற்குப் பிறகு தொடங்கிய இதழ்களின் ஆசிரியர்களாக உருவாகி இருந்தவர்கள் பெரும்பாலும் 20 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் பிறந்தவர்கள். 'திராவிட நாடு' என்கிற முழக்கம் 1940-ல் தொடங்கி, 1940க்குப் பிறகு பத்திரிக்கைகளின் தாக்கம் திராவிட நாடு ஆர்வலர்களின் கையில் என்ற வகையில் பத்திரிக்கைகளின் களம் மாறிவிடுகிறது. திராவிட இயக்க வழிவந்தவர்களும் எண்ணற்ற மாற்று இதழ்களை வெளியிடத் தொடங்கியிருந்தனர், விடுதலை பெற்ற இந்தியாவின் தமிழ்நாட்டில் அரசியல் களம் வேகமாக மாறிக் கொண்டிருந்த காலம் இது.

மருதுபாண்டியர் வரலாறு சொல்லும் 'சிவகங்கை சீமை' திரைப்படத்தின் பாடலில் "வீரர்கள் வாழும் திராவிட நாட்டை வென்றவர் கிடையாது" என்றொரு வரியை கவிஞர் கண்ணதாசன் பாடலில் அமைத்தார். அத்துடன், திராவிட கழக ஆதரவு பத்திரிகைகளான 'மன்றம்', 'முரசொலி', 'நம்நாடு', 'தென்றல்' ஆகிய இதழ்களின் பெயர்களைக் குறிப்பிடும்படி,

*"மன்றம் மலரும், முரசொலி கேட்கும்*
*வாழ்ந்திடும் நம்நாடு*
*இளந்தென்றல் தவழும் தீந்தமிழ் பேசும்*
*திராவிட திருநாடு"*

- என்றொரு பாடலும் அந்தப் படத்தில் இடம்பெற்றது. இவ்வரிகள் நுட்பமாக எழுதப் பட்டவை.

"மூன்றெழுத்தில் என் மூச்சிருக்கும் ..கடமை அது கடமை" என்ற வகையில் இருபொருள்பட எழுதப் பட்ட கவிஞர் வாலியின் அரசியல் குறிக்கும் வரிகள் போன்றது இந்தப் பாடலின் வரிகளும். தணிக்கைத் துறையினருக்குப் பாடல் வரிகளின் உட்பொருள் புரிந்தாலும் கவிஞர்கள் நுட்பமாக எழுதிவிட்ட காரணத்தால் தடை செய்ய வழியின்றி திணறும்படி செய்து, தணிக்கைக்கு உள்ளாகாமல் தப்பித்துக் கொண்ட பாடல்களைக் கேட்கும் எவருமே புன்முறுவல் செய்வது வாடிக்கை.

இத்தகைய இடைப்பட்ட காலமான 1940ஆம் ஆண்டுக்குப் பிறகு, விடுதலை பெற்ற இந்தியாவில் வெளியான பல சிறப்புச் சிற்றிதழ்களைத் தமிழ் இணையக் கல்விக்கழகம் மின்னூலகம் தளத்தில் பெறலாம். 'பருவ வெளியீடுகள்' என்ற பிரிவின் கீழ்:ஆய்விதழ்கள், இதழ்கள், தமிழக அரசின் பருவ வெளியீடுகள் என்ற பிரிவுகளில் சுமார் 15,000 இதழ்கள் தமிழ் இணையக் கல்விக்கழகம் மின்னூலகம் தளத்தில் (https://www.tamildigitallibrary.in/) இடம் பெறுகின்றன.

இவையாவும் காலத்தின் பிரதிநிதிகளாகத் தமிழக நிகழ்வுகளை ஆவணப் படுத்தியுள்ளன. எடுத்துக்காட்டாக மொழியியல், செந்தமிழ், திராவிட நாடு, புதுவாழ்வு, இஸ்லாம், குமரிமலர், தென்மொழி, போர் வாள் எனப் பல வேறுபட்ட தலைப்புகளில், வெவ்வேறு நோக்கத்தில் தொடங்கப்பட்ட இதழ்களை இத்தளத்தில் காண முடிகிறது.

அரசு சார் நிறுவனங்கள், அரசு சாரா நிறுவனங்கள், தொண்டு நிறுவனங்கள், ஆர்வலர்கள் எனப் பலரும் தொடர்ந்து கடந்த 25 ஆண்டுகளுக்கும் மேலாக மின்னாக்கப் பணியில் ஈடுபட்டு வருகிறார்கள். அவ்வாறு ஆர்வத்துடனும் அக்கறையுடனும் சேகரிக்கப் படுபவை பயன் கொள்வதற்காகத்தான் என்பதை மறக்காமல் இருப்பது கற்பவர் கடமை.

இந்தக் கட்டுரையில்

**[I] தமிழ்ப் பொழில்**

**[II] நாடார் குல மித்திரன்**

**[III] தமிழன் / ஒரு பைசாத் தமிழன்**

**[IV] குடி அரசு**

ஆகிய இதழ்கள் குறித்து சற்று விரிவாகக் காணலாம். இந்த நான்கு செய்தி இதழ்களை இந்த உரைக்குத் தேர்வு செய்த காரணம்; பல்வேறு இதழ்கள் வரிசையில் வகைக்கு ஒன்றாக அமைந்த இந்த இதழ்களை எடுத்துக் காட்டுகளாகக் கொள்ளலாம் என்பதும் ஒரு காரணம். அத்துடன், ஆய்வாளர்களுக்குத் தமிழ் மரபு அறக்கட்டளையின் மின்னூல் சேகரத்திலும் உள்ள இந்த இதழ்கள் குறித்து அறிமுகப்படுத்தலாம் எனபதும் மற்றொரு காரணம். பார்க்கப் போகும் இதழ்கள் குறித்து முதலில் இதழின் பெயருடன் அது குறித்து மேலும் சில அடிப்படைத் தகவல்களான, இதழ் துவங்கப்பட்ட நோக்கம், வெளியான காலம், வெளியீட்டின் கால இடைவெளி, இதழின் ஆசிரியர் போன்ற தகவல்களையும் இப்பகுதியில் அறிந்து கொள்ளலாம்.

**[I] கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் தமிழ்ப் பொழில் இதழ்கள்:**

இதழ்: தமிழ்ப் பொழில்

நோக்கம்: தமிழ் இலக்கிய வளர்ச்சி, ஆய்வு, தமிழ்க்கல்வி வளர்ச்சி

*வெளியான காலம்: 1925 ஆம் ஆண்டு ஏப்ரல் முதல் - 1979 ஆண்டு மார்ச் வரை*

*வகை: மாத இதழ்*

*இதழின் ஆசிரியர்: முதல் பொழில் தொண்டராக கவிஞர் அரங்க. வேங்கடாசலம் பிள்ளை பொறுப்பேற்றார், அவரைத் தொடர்ந்து மேலும் பலர் தங்கள் பங்களிப்பை நல்கியுள்ளார்கள்*



உ

தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு

துணர் ௧௪ } வெகுதானிய, ஆனி { மலர் ௩

பெரும்பற்றப் புலியூர் நம்பி

திரு. S. சோமசுந்தர தேசிகர் அவர்கள், சென்னை.

தஞ்சை கரந்தைத் தமிழ்ச் சங்கம் துவங்கக் காரணமாக இருந்த த.வே. உமாமகேசுவரனார் அவர்களின் திட்டங்களில் ஒன்று மாதம் தோறும் வெளிவரும் 'தமிழ்ப் பொழில்' என்னும் இலக்கிய இதழ் வெளியீடு செய்வது. கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் நோக்கங்களையும் செயல்பாடுகளையும் தமிழுலகத்திற்கு அறிவிக்கவும், தமிழரின் மேன்மையையும் தமிழின் தொன்மையையும் ஓங்கி ஒலித்து உலகறியச் செய்யவும், தமிழுக்கும் தமிழருக்கும் இழிவு ஏற்படுத்த முன்னெடுக்கப்படும் செயல்களை நியாய நெறியில் கண்டிக்கவும், பிற நாட்டு இலக்கியங்களையும் கலைநூல்களையும் தமிழில் மொழிபெயர்த்து வெளிக்கொணரவும், தமிழ் இலக்கிய வளர்ச்சிக்காகவும் சங்கத்தின் சார்பில் ஓர் இலக்கிய இதழ் தேவை என்ற குறிக்கோளுடன் துவக்கப்பட்டது தமிழ்ப் பொழில் இலக்கிய இதழ்.

இதன் வெளியீட்டு ஏற்பாடுகளை 1913 ஆம் ஆண்டில் முன்னெடுத்த த. வே. உமாமகேசுவரன் தலைமையிலான குழுவின் முயற்சிகள், பொருள் பற்றாக் குறை உட்படத் தடைகள் பல கடந்து, பன்னிரு ஆண்டுகளும் கடந்த பின்னர், நன்கொடை தந்த பல தமிழ் ஆர்வலர்களின் உதவியுடன் 1925 ஆம் ஆண்டு சித்திரைத் திங்களில் தமிழ்ப் பொழில் என்ற பெயரில் முதல் இதழ் வெளியீடு கண்டது. இதழின் ஆசிரியர்

பொழில் தொண்டர் எனக் குறிப்பிடப்பட்டார். கவிஞர் அரங்க. வேங்கடாசலம் பிள்ளை தமிழ்ப் பொழிலின் முதல் பொழில் தொண்டராகப் பொறுப்பேற்றவராவார். ஒவ்வொரு மாதமும் தமிழ்ப் பொழிலின் இதழொன்று சராசரியாக 40 பக்கங்களைக் கொண்டதாக வெளியிடப்பட்டுள்ளது.

தஞ்சை கரந்தைத் தமிழ்ச் சங்கம் வெளியிட்ட தமிழ்ப் பொழில் இதழ், தமிழ் இலக்கிய உலகில் பெரும் பங்களிப்பைச் செய்துள்ளது. அக்காலத்தில் தமிழ்ப் பொழிலுக்கு இணையாக 13 தமிழிலக்கிய இதழ்கள் வெளியானது. அவற்றுள் தமிழ்மொழி வளர்ச்சியில் அக்கறை கொண்டு முன்னிலை வகித்த இதழ்களான மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் இலக்கிய இதழாக 1902ஆம் ஆண்டு முதல் வெளியிடப்பட்ட"செந்தமிழ்" என்ற இதழுடனும்; திருநெல்வேலிச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் இலக்கிய இதழாக 1923ஆம் ஆண்டு முதல் வெளியிடப்பட்ட"செந்தமிழ்ச்செல்வி" என்ற இதழுடனும், இணைத்து மதிக்கப்பட்ட நிலையில் தமிழ்ப் பொழில் விளங்கியது.

மறைமலையடிகள், ஞா. தேவநேயப்பாவாணர், வ. உ. சிதம்பரம், தி.வை. சதாசிவப் பண்டாரம், மா. இராசமாணிக்கம், ஔவை சு. துரைசாமி என இன்று நாம் அறியும் பல தமிழறிஞர்களின் கட்டுரைகள் தமிழ்ப்

*பொழிலில் வெளிவந்தன. தமிழ்ப் பொழிலில் வெளியான இவர்களது கட்டுரைகளை பின்னர் நூல்களாகவும் தொகுத்து இந்தத் தமிழறிஞர்கள் நமக்குத் தந்து சென்றுள்ளனர்.*

*சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில், 'மொழி மறுமலர்ச்சி இயக்கம்' தோன்றி வளரத் துவங்கிய நாட்களில் தமிழ்மொழியின் நிலையை நாம் தமிழ்ப் பொழில் இதழ்கள் மூலம் அறியலாம். அந்நாட்களில் தமிழ்க் கல்வி பெற்றிருந்த மதிப்பற்ற நிலையையும், தமிழாசிரியர்கள் போற்றப்படாமல் மாற்றாந்தாய் பிள்ளைகள் நிலையில் நடத்தப்பட்டதையும், சரியான பதவியும் ஊதியமும் அங்கீகாரமும் கிடைக்கப்பெறாமல் தமிழறிஞர்கள் வருந்தியதையும், தமிழுக்காகப் பல்கலைக்கழகம் ஒன்றை உருவாக்கத் தமிழார்வலர்கள் முயன்றதையும், தமிழ் வளர்க்கும் நோக்கில் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தைத் துவக்கும் முயற்சிகளை மேற்கொண்டதையும், தமிழ் வளர்ச்சியில் அக்கறை கொண்டோர் சமஸ்கிருதம், இந்தி, ஆங்கிலமொழி ஆதிக்கத்துடன் தொடர்ந்து போராடிக் கொண்டே இருந்த நிலை என இவையாவற்றையும் தமிழ்ப் பொழிலின் தமிழிலக்கியப் பதிவுகளின் வழியாக, அவை தரும் செய்திகள் மூலம் நாம் தெளிவாக அறிய முடியும்.*

*1925 ஆம் ஆண்டு ஏப்ரல் தொடங்கி, இடையில் தடைப்பட்டாலும் மீண்டும் உயிர்த்தெழுந்து 50 ஆண்டுகள்*

தமிழ்ப் பொழில் இலக்கிய திங்களிதழ் வெளிவந்தது, 1979 ஆண்டு மார்ச் மாதத்துடன் தமிழ்ப் பொழிலின் வெளியீடு நிறுத்திக் கொள்ளப் பட்டது. அதுவரை, கரந்தை தமிழ்ச் சங்கத்தினர் தமிழகம், தமிழினம், தமிழ்மொழி உயர தமிழ்க் கல்வியின் வளர்ச்சி இன்றியமையாதது என்று தெளிவாக உணர்ந்து கொண்டு, கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் குரலொலியாக வெளியிடப்பட்டது தமிழ்ப் பொழில். தமிழியல் ஆய்விலும், தமிழ்க் கல்வி வளர்ச்சிக்காகப் பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழக பாடத்திட்டங்களுக்கு ஆலோசனையும், பரிந்துரையும், நெறிப்படுத்துதலையும் தமிழ்ப் பொழில் கட்டுரைகள் வழியே கரந்தை தமிழ்ச் சங்கத்தினர் செய்து வந்தனர்.

இதற்கு எடுத்துக் காட்டாக ஒரு நிகழ்வைக் குறிப்பிடலாம். தமிழறிஞர் பின்னங்குடி சுப்பிரமணிய சாஸ்திரியின் தொல்காப்பியச் சொல்லதிகாரக் குறிப்பு நூலை சென்னை பல்கலைக்கழகத்தின் தமிழ் வித்துவான் தேர்வுக்குக்குரிய பாடநூலாகப் பல்கலைக்கழகம் அறிவித்தது. ஆனால், கருத்துப் பிழைகள் மலிந்த நூலாக இந்நூலைத் தமிழ் அறிஞர்கள் கருதினர். பாடநூலாக வைக்கத் தகுதியற்றது இந்தநூல் என்ற எதிர்ப்புக் குரலுடன், 'பின்னங்குடி சுப்பிரமணிய சாஸ்திரியார் எழுதிய 'தொல்காப்பியச் சொல்லதிகாரக் குறிப்பு' என்ற நூலின் மீது ஜூலை 1931 தமிழ்ப் பொழிலில் துவங்கிய மறுப்புரை கட்டுரைகள் ஜூன்

1937 இதழ் வரை 6 ஆண்டுகளாகத் தொடர்ந்தது. மறுப்புரைகளும் அந்த மறுப்புரைகளுக்கு மறுப்புரைகளும் விளக்கங்களும் என 35 கட்டுரைகள் தொல்காப்பியச் சொல்லதிகாரக் குறிப்பு நூலைக் குறித்து எழுதப்பட்டன. இவற்றில் 29 கட்டுரைகளை ம. நா. சோமசுந்தரம் பிள்ளை அவர்கள் மட்டுமே எழுதியுள்ளார்.

தமிழ்ப் பொழில் காட்டிய இத்தகைய விடாத தொடர் முயற்சியானது பிழையுள்ள பாடங்களை மாணவர்கள் ஏற்றுக் கொள்வதைத் தடை செய்ய வேண்டும் என்ற முனைப்பின் அடிப்படையில் இருந்துள்ளது தெளிவாகிறது. இந்த நிகழ்ச்சி குறித்து "பல்கலைக்கழகங்களின் தமிழ்ப் பாடநூல்கள் தரம் குறித்து படிப்பினை தரும் சென்ற நூற்றாண்டு நிகழ்வுகள்" என்ற தலைப்பில் வெளியான கட்டுரை விளக்கும்.

**[II] திரு.சூ.ஆ.முத்து நாடாரின் நாடார் குல மித்திரன் இதழ்கள்:**

இதழ்: நாடார் குல மித்திரன்

நோக்கம்: நாடார் குல மக்கள் வாழ்வில் முன்னேற்றம், சமவுரிமை

வெளியான காலம்: 1919-செப்டம்பர் முதல் 1931ம் ஆண்டு வரை 12 ஆண்டுகள் வெளி வந்தது

வகை: வார இதழாக திங்கட் கிழமைகளில் வெளியிடப்பட்டன

*இதழின் ஆசிரியர்: அருப்புக்கோட்டை திரு.சூ.ஆ.முத்து நாடார்; உதவி ஆசிரியர் திரு.சொக்கலிங்க பாண்டியன்*


Reg. No. M. 1434

நாடார்குலமித்திரன்

THE NADAR KULA MITRAN

*20 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் பல சாதி குல இதழ்கள் தோன்றுவதற்குக் காரணம் பிரிட்டிஷ் அரசு துவக்கிய சென்சஸ் என்னும் மக்கள் தொகை கணக்கெடுப்பு முறை. இந்திய மக்களின் நிலையை, அவர்கள் இடையே நிலவும் சாதி இன பேதங்களால் அவர்கள் எதிர்கொண்ட உயர்வு தாழ்வு நிலைகளை சென்சஸ் தரவுகள் தெளிவாகக் காட்டிய பின்னரே மக்களுக்கு விழிப்புணர்வு ஏற்பட்டது. ஒடுக்கு முறையால் வாய்ப்புகள் மறுக்கப்பட்டிருந்த ஒவ்வொரு குலத்திலிருந்தும் அக்குலத்தில் தோன்றி இருந்த கற்றறிந்த சான்றோர்கள் தங்கள் குலத்தை மேம்படுத்தப் பல முயற்சிகளை முன்னெடுத்தனர்.*

*தங்கள் குல மக்களின் வாழ்வு மேம்பாட்டிற்காக அவர்களுக்கான பத்திரிகையை உருவாக்கி, அவர்களின் வாழ்வின் முன்னேற்றத்திற்கான விழிப்புணர்வை ஏற்படுத்துதல் அவர்களின் நோக்கங்களில் ஒன்றாக இருந்தது. உரிமை, சமத்துவக் குரல்கள் ஒலிப்பதாக அந்த இதழ்கள் அமைந்தன. எடுத்துக் காட்டாக; நாடார் குல மித்திரன் (1919), விஸ்வகர்மம் (1913), வைசியன் (1923), யாதவமித்திரன் (1929), செட்டியார் குல மித்திரன்(1935), கிராமணி குலம்(1936) போன்றவை அவ்வாறாக வெளிவந்த குல முன்னேற்றக் குறிக்கோள் கொண்ட இதழ்கள். அவற்றில் நாடார் குல மித்திரனுக்குச் சிறப்பிடம் உண்டு.*

*நாடார் குல மித்திரன் இதழ் 1919-செப்டம்பர் மாதத்தில் ஆரம்பிக்கப்பட்ட பொழுது அது மாதம் தோறும் வெளிவரும் இதழாக இருந்தது. பின்னர் மாதம் இரு முறை என்ற இதழாக ஒவ்வொரு மாதமும் 1, 15 தேதிகளில் வெளிவரும் இதழாக மாறியது. அப்போது பத்திரிக்கையின் தோற்றத்திலும் மாற்றம் நிகழ்ந்தது. செய்தித்தாள் வடிவத்திற்கு மாறியது. அதன் பிறகு 1, 11, 21 தேதிகளில் வெளியீடு என மாதம் மும்முறை வெளியாகும் நிலைக்கு மாறியது, ஐந்தாம் ஆண்டிலிருந்து ஒவ்வொரு திங்கட்கிழமையும் வெளியாகும் வார இதழாக வெளியீடு கண்டு வார இதழ்களாக 1931ம் ஆண்டு வரை வெளியானது. 12 ஆண்டுகள் தொடர்ந்து வெளி வந்தது நாடார் குல மித்திரன் இதழ். இதழின் பக்க*

*எண்ணிக்கை 8 பக்கங்கள் என்ற அளவிலும், சிறப்பு இதழ்களாக வெளிவருகையில் மேலும் பல இணைப்புகளுடன் பக்க எண்ணிக்கை அதிகரித்தும் இதழ்கள் வெளிவந்தன.*

*திராவிட இயக்க ஆய்வாளராகவும், 'சிந்தனையாளன்' இதழின் ஆசிரியராகவும் இருந்த வே.ஆனைமுத்து அவர்கள் 'பெரியாருடைய சொற்பொழிவுகளும், கட்டுரைகளும்' என்று ஆய்வை மேற்கொண்டவர். பெரியார் ஈ.வெ.ரா. தொடங்கிய 'குடியரசு' பத்திரிகையில் வெளியானவை, 'குடியரசு'க்கு முன்னால் வந்த ஆவணங்கள் என எல்லாவற்றையும் தொகுப்பதில் ஆனைமுத்து ஈடுபட்டிருந்தார். ஜூன் 2010 அன்று அவர் வழங்கிய நேர்காணல் ஒன்றில் வே. ஆனைமுத்து அவர்கள், அருப்புக்கோட்டை முத்துநாடார் குடும்பத்தில் இருந்து கிடைத்த நாடார் குல மித்திரன் இதழ்களைத் தனது பெரியாரின் செயல்பாடுகள் குறித்த வரலாற்று ஆய்வுக்குப் பயன்படுத்திக் கொண்டதாகக் கூறியுள்ளார். ஒருமுறை ஆனைமுத்து அவர்கள் முன்னாள் முதல்வர் காமராஜர் அவர்களிடம் தரவுகள் வேண்டி நேர்காணலுக்குச் சென்றபொழுது காமராஜரும் அவரிடம் பெரியாரும் முத்து நாடாரும் நெடுநாள் நண்பர்கள், முத்துநாடார் குடும்பத்தில் தடயங்கள் கிடைக்கலாம் என்று வழிகாட்டியதாகவும் ஆனைமுத்து குறிப்பிட்டுள்ளார்.*

பெரியார் ஈ.வெ.ரா.வும், முத்து நாடார் அவர்களும் அன்றைய காங்கிரசில் இணைந்து நாட்டின் விடுதலைக்கானப் போராட்டங்களில் பங்கு பெற்றவர்கள். இறுதிவரை நண்பர்களாக இருந்தவர்கள். ஈ.வெ.ரா. தனது சுயமரியாதை இயக்கக் கொள்கைகளை மக்களிடம் கொண்டு செல்ல குடியரசு இதழைத் துவக்கிய ஆண்டுக்கும் ஆறாண்டுகளுக்கு முன்னரே முத்து நாடார், நாடார் குல மக்களின் முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு நாடார் குல மித்திரன் என்ற பத்திரிக்கையைத் துவங்கி விட்டிருந்தார். ஈ.வெ.ரா. குறித்த பல செய்திகள், அவரது உரைகள் போன்ற குறிப்புகளை 'நாடார் குல மித்திரன்' இதழ்களிலிருந்து பெற்றிருக்கிறார் ஆனைமுத்து. பெரியாரைப் பற்றி அச்சில் கிடைக்கும் முதல் கட்டுரை, இன்றிலிருந்து சரியாக 100 ஆண்டுகளுக்கு முன்னர் நடந்த பெரியாரின் நேர்காணல் ஒன்று. அருப்புக்கோட்டையை அடுத்த பாளையம்பட்டியில் தமிழ்நாடு காங்கிரஸ் மாநாடு அக்டோபர் 31, 1922இல் நடைபெற்றது. அம்மாநாட்டின் தலைவர் பெரியார் ஈ.வெ.ரா. மாநாடு நடந்த அன்று அருப்புக்கோட்டையைச் சேர்ந்த சில நாடார் இளைஞர்கள் அவரிடம் 15 கேள்விகளை எழுப்பி ஒரு நேர்காணல் செய்தார்கள். இந்த நேர்காணல், அடுத்து வெளியான நவம்பர் 11, 1922 ஆம் ஆண்டு நாடார் குல மித்திரன் இதழின் 2 ஆம் பக்கத்தில் வெளியானது. தனது ஆய்வுக்கு உட்பட்ட வரையில், முதன் முதல் அச்சில் பதிப்பாகி வெளி வந்த பெரியாரின் பேட்டி இதுதான் என்றும், இது ஒரு

வரலாற்றுச் சிறப்பு மிக்க பேட்டி என்றும் வே. ஆனைமுத்து கூறியுள்ளார்.

4 நாடார்குல மித்திரன், சனிக்கிழமை. அற்பசி 26வ:

## பேட்டிகண்ட விபரம்.

ஈரோடு, ஸ்ரீமான் ராமசாமி நாயக்கர் அவர்களும்,

பால்ய நாடார்களும்

வினவும், விடையின் சாரமும்

அருப்புக்கோட்டை 31-10-22.

இந்தப் பேட்டியில் காங்கிரஸ் கட்சியில் செயலாளராகப் பொறுப்பிலிருந்த பெரியாரின் கவனத்திற்கு நாடார் குல மக்கள் கொண்டு சென்ற ஒரு முக்கியக் கோரிக்கை நாடார் குல மக்களின் கோவில் நுழைவு உரிமை பற்றியது. அவர்களிடம் தீண்டாமையை ஒழிக்கப் பாடுபடுவேன் என்று பெரியார் உறுதி அளிக்கிறார். அடுத்த இரண்டு மாதத்தில்

*திருப்பூர் நகரில் தமிழ் மாகாண காங்கிரஸ் மாநாடு நடந்த பொழுது, மாநாட்டில் கோவில் நுழைவு உரிமை குறித்த தீர்மானத்தைக் கொண்டு வருகிறார் ஈ. வெ. ரா. ஆனால், காங்கிரஸ் கட்சியின் பெரும் பதவிகளிலிருந்த பார்ப்பனர்கள் இது மத சம்பந்தமானது, காங்கிரஸ் கட்சி அரசியல் சார்ந்தது, கோவில் நுழைவு உரிமை போன்ற கோரிக்கைகள் நமது கொள்கைக்கு அப்பாற்பட்டது என்ற காரணம் சொல்லி மறுத்துவிடுகிறார்கள். அன்று மாலை நடந்த காங்கிரஸ் பொதுக் கூட்டத்தின் தீர்மான விளக்க நிகழ்ச்சியில்தான், மனித உரிமையை மதிக்காத மனுநீதியைக் கொளுத்த வேண்டும், இராமாயணத்தைக் கொளுத்த வேண்டும் என்று ஈ. வெ. ரா. முதன் முறையாக கருத்துரைக்க ஆரம்பித்தார் என்கிறார் வே. ஆனைமுத்து. பிப்ரவரி 25,1929 அன்று வெளியான தனது நாடார் குல மித்திரன் இதழில், "ஈ.வெ. ராம சகாப்தம் 4" எனத் தலையங்கப் பகுதியில் பதிவு செய்தார் அருப்புக்கோட்டை சூரிய. ஆறுமுக. முத்து நாடார் என வே.ஆனைமுத்து குறிப்பிடுகிறார்.*

*உரிமை இழந்தவர்களாகத் தமிழகத்தின் கோவில் நுழைவு போராட்டத்தில் ஈடுபட்டவர்களின் போராட்டங்கள் குறித்து இந்த இதழ்களில் வெளியான செய்திகள் மூலம் அறியலாம். காந்தியின் சத்திய சோதனை, அன்றைய இந்திய, தமிழக அரசியல் களம், போன்றவற்றையும் அறிய நாடார் குல மித்திரன் பதிவுகள் உதவும். பர்மா, இலங்கை போன்ற*

*நாடுகளில் வாழ்ந்த அன்றைய அயலகத் தமிழர்கள் குறித்தும் செய்திகள் பதிவாகியுள்ளன.*

***[III]பண்டிதர் அயோத்திதாசரின் தமிழன் இதழ்கள்:***

*இதழ்: ஒரு பைசாத்தமிழன் மற்றும் தமிழன்*

*நோக்கம்: தமிழரிடையே சமத்துவம், சமநீதி, பகுத்தறிவு, முன்னேற்றம், பௌத்தக் கருத்துகள் பரப்புரை*

*வெளியான காலம்: 1907ஆம் ஆண்டு ஜூன் மாதம் முதல் 1914 ஆண்டுவரை வெளி வந்தது*

*வகை: வார இதழ், புதன்கிழமைகளில் வெளியிடப்பட்டன*

*இதழின் ஆசிரியர்: அயோத்திதாசப் பண்டிதர்.*

Registered No, M. 673.    EDITED BY PANDIT C. IYOTHEE THASS.

ஒரு பைசாத் தமிழன்

ஜெயது    மங்களம்

ONE PICE TAMILIAN

Vol. I.    (26th June 1907)    No. 2.





*அயோத்திதாசர் ரெவரெண்ட் ஜான் ரத்தினத்துடன் இணைந்து 1885இல் 'திராவிடப்பாண்டியன்' என்ற இதழையும் தமிழன் இதழுக்கு முன்னர் நடத்தியுள்ளார். 19ம் நூற்றாண்டின் இறுதியிலும் 20ம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வெளிவந்த 42 தலித் பத்திரிக்கைகள், இதழ்கள் பற்றிய தகவல்களைத் திரட்டி 'சூரியோதயம் முதல் உதயசூரியன் வரை - தலித் இதழ்கள் 1869-1943' என்ற தலைப்பில் ஜெ.பாலசுப்பிரமணியம் நூல் வெளியிட்டுள்ளார். இந்த 42 தலித் பத்திரிக்கைகள் அனைத்துமே தலித் சமூகத்தவரால் தொடங்கி நடத்தப்பட்டவை என்று அவர் நூலில் குறிப்பிட்டுள்ளார். சூரியோதயம் என்ற இதழ் திருவேங்கடசாமி பண்டிதர் என்பவரால் 1869ம் ஆண்டு சென்னையிலிருந்து வெளியிடப்பட்டது. பஞ்சமன்(1871), சுகிர்தவசனி (1872),*

இந்துமத சீர்திருத்தி (1883), ஆன்றோர் மித்திரன்(1886), மஹாவிகடதூதன் (1886), இரட்டைமலை சீனிவாசன் அவர்களால் வெளியிடப்பட்ட பறையன் (1893), இல்லற ஒழுக்கம் (1898), பூலோகவியாஸன் (1903) என சில இதழ்களின் பெயர்களை இந்த நூல் மூலம் அறிய முடிகிறது.

பண்டிதர் அயோத்திதாசரின் "ஒரு பைசாத் தமிழன்" இதழ் சென்னை இராயப்பேட்டையில் இருந்து ஜூன் 19, 1907 முதல் புதன் கிழமை தோறும் வெளியானது, அன்றைய விலை காலணா, இதழின் பக்க எண்ணிக்கை நான்கு. பின்னர் மக்களின் வேண்டுகோளை ஏற்று, மறு ஆண்டு முதல் "தமிழன்" என்று பெயர் மாற்றம் செய்து வெளியிட்டார் அயோத்திதாசர். இதழ் வெளியிடுவதன் நோக்கம் குறித்து: "உயர் நிலையும், இடை நிலையும், கடை நிலையும் பாகுபடுத்தி அறியமுடியாத மக்களுக்கு நீதி, சரியான பாதை, நேர்மை ஆகியவற்றைக் கற்பிப்பதற்காக சில தத்துவவாதிகளும் இயற்கை விஞ்ஞானிகளும், கணிதவியலாளரும், இலக்கியவாதிகள் பலரும் ஒன்று கூடி இப்பத்திரிக்கையை "ஒரு பைசாத் தமிழன்" வெளியிட்டிருக்கிறோம்" என்று அறிவித்திருந்தார் அயோத்திதாசர். தாமரை மலரின் இதழ்களில், பத்திரிக்கையின் பெயர் குறிக்கப்பட்டு, இடப்புறம் 'ஜெயது' என்றும் வலப்புறம் 'மங்களம்' என்றும் நடுவில் 'நன்மெய்க் கடைபிடி' என எழுதி, இருபுறமும் மலர்க்

கொத்துகளுடன் உள்ள ஓர் அழகிய சின்னம் இதழின் முகப்பை அலங்கரித்தது.

சமூக மேம்பாட்டுக் கருத்தாடல்களாக; மூட நம்பிக்கை, தீண்டாமை கொடுமைக்கு ஆதரவளிக்கும் வேத இதிகாசப் புரட்டுகள் குறித்தும், பிராமணிய மேலாதிக்கம் பற்றியும் விரிவாக எழுதினார் அயோத்திதாசர். வேத மத எதிர்ப்பு, பிராமணிய எதிர்ப்பு, மூடப்பழக்கம் எதிர்ப்பு, சாதி ஒழிப்பு, பெண்ணடிமை ஒழிப்பு, சமூக நீதி, சமூக மதிப்பீடுகள், விளிம்பு நிலை ஒடுக்குமுறைகள் போன்ற பல கருத்துக்கள் இதழில் தொடர்ந்து வெளியாயின.

அரசியல் கருத்தாடல்களாக; அதிகாரத்தில் பங்கு, பிரதிநிதித்துவ அரசியல், ஒடுக்கப்பட்டோர் விடுதலை, தமிழ் மொழியுணர்வு, பகுத்தறிவு, சுயமரியாதை, சாதி ஒழிப்பு, இந்தி மொழி எதிர்ப்பு, வேத மத, பிராமணிய எதிர்ப்பு, தீண்டாமை ஒழிப்பு போன்ற கருத்துகளை வெளியிட்டு வந்தார்.

பெண்ணியம் சார்ந்த செய்திகளாக; மகளிர் பகுதியில் பெண்கள் கல்வி, வேலை வாய்ப்பு, பெண்கள் முன்னேற்றம் பற்றிய செய்திகள் தமிழன் இதழ்களில் இடம் பெற்றன.

பூய்வத்தமிழொளி  என்ற தலைப்பில் அரசியல் தொடர், வர்த்தமானங்கள் என்ற தலைப்பில் நாட்டு நடப்புச் செய்திகள், சித்த மருத்துவ குறிப்புகள் போன்றவை இதழில் தொடர்ந்து வெளியாயின.  பொதுச் செய்தி பகுதியில் வானிலை அறிக்கை, வாசகர் கடிதங்கள், அயல் நாட்டுச் செய்திகள், விளம்பரங்கள் மற்றும் நூல் மதிப்புரைகள் போன்றவை இடம்பெற்றன.

கர்நாடக கோலார் தங்க வயல், குடகு, பர்மா, தென்னாப்பிரிக்கா, இரங்கூன், சிங்கப்பூர் போன்ற தமிழர்கள் அதிகம் வசித்த  பகுதிகளிலும் அயல் நாடுகளிலும் தமிழன் இதழ் விற்பனையானது. இதழியலிலும், அரசியலிலும் நவீனம் குறித்த கருத்தாக்கங்களுடன் வெளியான இதழ்களுக்கு எல்லாம் முன்னோடி பண்டிதர் அயோத்திதாசரின் தமிழன் என்ற சிறப்பு இந்த இதழுக்கு உரியது.

**[IV]பெரியாரின் குடி அரசு:**

இதழ்: குடி அரசு

நோக்கம்: தமிழரிடையே சுயமரியாதைக் கருத்துக்கள், பகுத்தறிவு, சமத்துவம், சமநீதி, முன்னேற்றக் கருத்துகளைப் பரப்புதல்

தொடக்கம்: மே 2, 1925 ஆம் ஆண்டு

வகை: வார இதழ்

இதழின் ஆசிரியர்: பெரியார் மற்றும் பல சுயமரியாதை இயக்க எழுத்தாளர்கள்




அறிஞர் அண்ணாதுரை, சிங்காரவேலர் போன்றவர்களும் ஆசிரியர் பொறுப்பில் இருந்துள்ளனர். குடியரசில் சிங்காரவேலர் தொடர்ந்து பல பொதுவுடைமைக் கொள்கைக் கட்டுரைகள் எழுதினார். அந்தக் கட்டுரைகள் சுயமரியாதை இயக்கத்தினரிடம் கம்யூனிசக் கருத்துகள் பரவ உதவின.

இப்பத்திரிக்கை ஆரம்பிக்கும் நோக்கம் குறித்து பிப்ரவரி 5, 1925 இதழில்; "தேசாபிமானம், பாஷாபிமானம், சமயாபிமானம் இன்னும் மற்ற விஷயங்களையும் ஜனங்களிடை உணர்த்துவதற்கே யாம். ஏனைய

பத்திரிக்கைகள் பலவிருந்து, அவைகள் தங்களது மனசாட்சிக்குத் தோன்றிய உண்மையான அபிப்ராயங்களை வெளியிட அஞ்சுகின்றன. அவைகளைப் போலல்லாமல் பொது ஜனங்களுக்கு விஷயங்களை உள்ளவற்றை உள்ளபடி தைரியமாகத் தெரிவிக்க வேண்டுமென்பது என் நோக்கம்" என்று பெரியார் ஈ.வெ.ரா. குறிப்பிட்டிருந்தார்.

1925 ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டு 1949 நவம்பர் முடிய வெளிவந்த 'குடி அரசு' வார ஏடுகளிலிருந்து குறிப்பாக; சுயமரியாதை இயக்கம் தொடங்கப் பட்ட ஆரம்பக் காலமான 1925ஆம் ஆண்டு முதல் 1938 ஆண்டு வரையிலான பதிவுகள், "பெரியாரின் எழுத்தும் பேச்சும்" என்ற தலைப்பில் குடி அரசு இதழில் வெளியான கட்டுரைகளின் 27 தொகுப்பு நூல்களாகத் தொகுக்கப்பட்டு வெளியாயின. 1925 ஆம் ஆண்டு முதல் 1938 ஆம் ஆண்டு வரை உள்ள கால இடைவெளியில் 'குடி அரசு' ஏட்டில் வெளி வந்த பெரியாரின் எழுத்துகளையும் பேச்சுகளையும் தொகுத்து வெளியிட "பெரியார் திராவிடர் கழகம்" எடுத்த முயற்சியில் உருவானவை இத்தொகுப்புகள். சென்ற நூற்றாண்டு தமிழகத்தின் சமூக மாற்றங்களை அறிய உதவும் கருவூலமாகவும் விளங்கும் இத் தொகுப்புகள். சமத்துவம், சீர்திருத்தம், பகுத்தறிவு ஆகியவற்றினை குறிக்கோள்களாகக் கொண்டு சமூக மாற்றங்களில் தீவிர செயல்பாடுகளை

இயக்கம் முன்னெடுத்த காலத்தில் வெளியானவை இத்தொகுப்புகளில் இருக்கும் பதிவுகள்.



R. No. M. 2041

"KUDI-ARASU"

குடி அரசு

தமிழ் நாட்டுப் பெண்கள் மாநாடு.

இவற்றிலிருந்து, பெரியாரின் சுயமரியாதை இயக்கம் செய்த பரப்புரைகளின் நோக்கம் என்ன, எவற்றை நோக்கி அந்த இயக்கம் பாடுபட்டது, அக்கலாச் சூழ்நிலை (environment) என்ன? அரசியல் சூழமைவு (context) என்ன? என்பதையெல்லாம் அறியத் தரும் பதிவுகள் நிரம்பியதாக இத்தொகுப்புகள் அமைந்திருக்கும். பெரியாரின் கருத்துகள் போலவே அவர் சமூகச் சூழலில் நிகழ்ந்தவற்றுக்கு அவர்

ஆற்றிய எதிர்வினைகளும் முக்கியத்துவம் பெற்றவை. இவை அக்காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் என்ன, அவற்றுக்குப் பெரியாரும் அவரது இயக்கமும் எவ்வாறு எதிர்வினையாற்றியது, எவ்வாறு சீர்திருத்த நடவடிக்கைகள் குறித்த கருத்துகளை மக்களிடம் இயக்கத்தின் தொண்டர்கள் கொண்டு சென்றனர் போன்றவற்றையும் அறிய மிக உதவும் ஆவணமாக விளங்குகிறது. அத்துடன், பெரியாரின் செயல்பாடுகள் மூலம் அக்காலத்தின் தமிழக வரலாற்றுப் போக்கையும் அதனோடு தொடர்புள்ள இந்திய வரலாற்றுப் போக்கையும் புரிந்து கொள்ள குடி அரசு இதழில் வெளியான கட்டுரைகள் மிக உதவும்.

**நிறைவாக;**

தமிழ் அச்சேறிய பொழுது, நூல்கள் அச்சாக்கம் பெற்று மக்களைச் சென்றடையத் துவக்கிய காலத்தில் நாட்டு நடப்புகளை மக்களிடம் கொண்டு சேர்க்க பல செய்தி இதழ்களும் துவக்கப் பட்டன. இவை தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கும் பெரும் பங்காற்றின, சமூக வளர்ச்சியிலும் பெரும் பங்காற்றின என்பதை அறிய முடிகிறது. தமிழகத்துத் தமிழ்ச் செய்தி ஏடுகளும், அத்தோடு தமிழர் குடியேறிய, வாழும் மலேசிய சிங்கை இலங்கை, தென்னாப்பிரிக்கா என எந்த ஒரு நாட்டில் வெளியான தமிழ்ச் செய்தி ஏடுகளும், காலம் தோறும் தமிழர்களின் வாழ்வையும் வளர்ச்சியையும் பதிவு செய்து வந்துள்ளன.

இலக்கியம் காலத்தின் கண்ணாடி என்று அறியப்படுகிறது. குறிப்பிட்ட ஒரு காலகட்டத்தில் வெளியான ஒரு நூலின் அல்லது இதழின் உள்ளடக்கச் செய்திகளை ஆராயும் பொழுது, அவை தரும் தகவல்கள் அடிப்படையிலேயே பிற்காலத்தில் நூலின் காலத்தின் இருந்த சூழ்நிலையை நாம் அறிய முடிகிறது. இவ்வாறு தொகுக்கப்பட்ட சென்ற நூற்றாண்டின் செய்தி இதழ்களை ஆய்வாளர்கள், ஆர்வலர்கள் படிப்பதன் மூலமும், தாங்கள் அறிந்தவற்றைப் பிறரும் அறியும் வண்ணம் பதிவு செய்வதன் மூலமும் நாம் நம் வரலாற்றை அறிந்து எதிர்கால வளர்ச்சியை மேலும் செம்மைப் படுத்திக் கொள்ள வாய்ப்புள்ளது. History repeats itself - வரலாறு திரும்பும் என்பது அனைவரும் அறிந்த ஒரு பழமொழி, அத்துடன் இலத்தீன் மொழியில் 'Historia Magistra Vitae' (In English: History Is Life's Teacher) வரலாறே நம் வாழ்வின் ஆசிரியர் என்பதையும் நாம் நினைவில் கொள்ளலாம்.

**நேற்றைய செய்தி.. இன்றைய வரலாறு !**

— முனைவர் தேமொழி

காணொளியாக:

***https://youtu.be/2UVUc4_bZPk***

**உதவிய வெளியீடுகள்:**

*The Tamil written word and its mass appealhttps://www.newindianexpress.com/cities/chennai/2018/aug/25/the-tamil-written-word-and-its-mass-appeal-1862286.html*

*தமிழ் மரபு அறக்கட்டளை - மின்னூல்கள்*
*https://tamilheritage.org/*

*பருவ வெளியீடுகள் தமிழிணையம் - மின்னூலகம்: (தமிழ் இணையக் கல்விக்கழகத்தின் ஒரு பிரிவு)*
*http://www.tamildigitallibrary.in/*

*பல்கலைக்கழகங்களின் தமிழ்ப் பாடநூல்கள் தரம் குறித்து படிப்பினை தரும் சென்ற நூற்றாண்டு நிகழ்வுகள், தேமொழி Journal of Tamil Peraivu, Vol. 6 No. 1 (2017)*
*https://ejournal.um.edu.my/index.php/tamilperaivu/article/view/12945*

*சூரியோதயம் முதல் உதயசூரியன் வரை - தலித் இதழ்கள் 1869-1943; நூல் விமர்சனம்*
*முனைவர்.க.சுபாஷிணி, மின்தமிழ்மேடை: காட்சி 13 [ஏப்ரல் 2018]*

**மின்தமிழ் கூகுள் குழும உரையாடல்கள்:**

*- mintamil thread - nadar kulamithran [2013] -*

*https://groups.google.com/g/mintamil/c/X6VR9tdwfI8/m/dSqVFTEWZLAJ*

*- mintamil thread - kudi arsu [2014] -*

*https://groups.google.com/g/mintamil/c/KaGEGuTY2sk/m/7TK2IVfgQfkJ*

*- mintamil thread - thamizhan [2015] -*

*https://groups.google.com/g/mintamil/c/PrOJv0VAY6U/m/Z6wMF0sWAgAJ*

*- mintamil thread - tamil pozhil [2016] -*

*https://groups.google.com/g/mintamil/c/T9FebJbKPLA/m/xk8LqxRkAQAJ*

# 13. தொல்காப்பியம்-பொருளதிகாரமும், சங்க இலக்கியங்களும் காட்டும் பெண்களின் சமூகநிலை

— முனைவர் செல்வநாயகி ஸ்ரீதாஸ்

சங்ககாலத்தில், ஆண், பெண் இருபாலரும் நல்லதொரு சமூகத்தை உருவாக்குவதற்குத் தமக்குப் புலனான சமூக ஒழுங்கு முறைகளையே நடைமுறைப்படுத்தியுள்ளார்கள். அந்தச் சமூகத்தில் ஆள்பவன், ஆளப்பட்டவன் என்ற பாகுபாட்டிற்கே இடமிருந்ததாகத் தெரியவில்லை. காலப்போக்கில் இந்நிலையில் பல மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பதும், சங்க கால மகளிர் நிலையை இக் காலத்தவர் விளங்கிக் கொள்ள முடியாமைக்குத் தலைமுறை இடைவெளி காரணமாக இருக்கலாம் என்பதும் இவ் ஆய்வின் கருதுகோளாகும். ஆய்வுப் பரப்பெங்கும் இக் கருதுகோள் உள்நுழைந்து அதற்கான விடையைக் காண முயன்றிருக்கிறது. இவ்வாய்வு, கீழ்க்காணும் தகவல்களின் அடிப்படையில் மேற்கொள்ளப்பட்டது.

1. தொல்காப்பியம், கி. மு. 5 ஆம் நூற்றாண்டிற்கு முன்னையது. சங்கத் தொகை நூல்கள் வெவ்வேறு காலப்பகுதியில் பாடப்பட்ட பாடல்களின் தொகுப்பு. தொல்காப்பியர் காலத்திற்கும் சங்க இலக்கியங்களின் காலத்திற்கும்

இடையில் ஆகக் குறைந்தது 200 ஆண்டுகள் இடைவெளி இருந்திருக்கவேண்டும். இந்த 200 ஆண்டுகள் கால இடைவெளியில், வாழ்வியல் மாற்றங்கள் மிகக் குறைந்த அளவில், நடை பெற்றிருப்பது அறியக் கிடக்கிறது.

2. பொருளதிகாரம் சமூகத்தில் மிகக் குறைந்த தொகையினரான (5% இலும் குறைவான) உயர்குடி மக்களின் வாழ்வியலைப் பெரிதும் காட்டிநிற்கிறது. உயர்குடித் தலைவன் தலைவியரது வாழ்வியலை அளவுகோலாகக் கொண்டு ஒட்டுமொத்தச் சமூகத்தையும் அளவிடமுடியாது. தொல்காப்பியம், பொருளதிகாரத்திலும், சங்க இலக்கியங்களிலும், மேல்மட்டக் குடிகளின் வாழ்வியலோடு தொடர்புபடுத்திக் கூறப்பட்டவை, கூறப்படாதவை, மௌனம் காத்தவை, அணிகளில் ஆங்காங்கே கூறப்பட்ட தகவல்கள் முதலியவற்றிலிருந்து பொதுமக்களின் வாழ்வியல் குறித்து அறிய முயற்சி மேற்கொள்ளப்பட்டது.

3. அகத்திணை இலக்கணமும் இலக்கியமும் காட்டும் பெண்களை உழைக்கும் வருக்கத்தினர், உயர்குடியினர் என இரு வகையாகப் பிரித்துக் காணலாம். மேற்கண்ட அடிப்படையில், தொல்காப்பியம் - பொருளதிகாரமும் சங்க இலக்கியங்களும் காட்டும் பெண்களின் சமூகநிலையின் முடிவுரை, அரசியல், கல்வி, பொருளாதாரம், சமூகம் என்னும் அடிப்படையில் தரப்படுகிறது. வரலாற்றில் பெண்

அரசாண்டிருக்கக் கூடிய சந்தர்ப்பங்கள் சங்க இலக்கியத்தில் காணப்படினும் பெண் அரசாண்டமைக்கான சான்றுகள் இல்லை. ஆனால், அரசுரிமை பெண்களுக்கு மறுக்கப்படவில்லை என்று ஊகிக்கக்கிடக்கிறது.

பெண் அரசு செய்ததற்கான வலுவான சான்றுகள் இல்லாதபோதும், சேர நாட்டில், சங்ககாலத்தில் நிலவிய பெண்ணின் அதிகார நிலையை, சொத்துரிமையை, எடுத்துக் காட்டுவதாக மருமக்கள் தாயமுறை ஆட்சி வழக்கில் இருந்திருக்கிறது. இது, தாய்த் தலைமையின் எச்சம் என்று கொள்ளலாம். ஆனால் இது பெருவழக்காக இருந்ததாகத் தெரியவில்லை. சங்ககாலத்தில், கல்வி தொடர்பாகப் பொது மக்களிடையே காணப்பட்ட விழிப்புணர்வும், கல்வி கற்பதில் காட்டிய ஆர்வமும் உயரியது. வறிய மாணாக்கர்கள், ஊர்விட்டு ஊர் சென்று பொது மன்றுகளில் தங்கி, வீடுகளில் விருந்தினராக நுழைந்து தமது ஏழ்மை நிலையிலும் கல்வி கற்றிருக்கிறார்கள். பாணர் குடியினர், தம்முள் ஒரு கல்விமுறையைக் கடைப்பிடித்து வந்திருக்கிறார்கள்.

பெரும்பாலான சங்கப்புலவர்கள், வசதி வாய்ப்பற்ற பொதுமக்களே. பெண்பாற் புலவர்களில் பெரும்பான்மையானவர்கள் பொதுமக்களே. 473 சங்கப் புலவர்களில் பெண்பாற் புலவர்கள் 45 பேர் என்றும், அவர்கள் பாடிய பாடல்கள் 196 என்றும் அறிகிறோம்.

போக்குவரத்து வசதிகள் குறைந்த அக்காலச் சூழலில்; 10 விழுக்காடு பெண்கள் கவி பாடியதே அதிகம். பாடியோர் எண்ணிக்கையை விடப் பாடல் தரத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கலாம். சங்க காலத்தில் பெண்கள் கல்வியில் சிறந்தவர்களாகவும் புலவர்களாகவும் துணிச்சல் காரர்களாகவும் மனவுறுதி படைத்தவர்களாகவும் இருந்திருக்கிறார்கள். அவர்களுக்கு மக்களிடமும் மன்னரிடமும் பெருமதிப்பும் மரியாதையும் இருந்திருக்கிறது. அவர்களை யாரும் அடக்கியாளவில்லை என்பதும் அவர்கள் பெண் என்ற முறையில் எங்கும் இரண்டாம் தரக் குடிமக்களாக நடத்தப்படவில்லை என்பதும் எந்த ஆணுக்கும் அவர்கள் எந்த வகையிலும் தம்மைக் குறைத்துக் கணக்கிட்டது கிடையாது என்பதும் நிரூபிக்கப்பட்டது. வீட்டின் தேவைகளை நிறைவேற்றுவது ஆண்மகன் கடமை என்று கூறும் ஒரு சமுதாய அமைப்பையே தொல்காப்பியர் காட்டுகிறார்.

உயர்குடிச் சமூகத்தில் பெண் வீட்டு நிருவாகம் செய்வதைக் கூறிய அவருக்குச் சராசரிப் பெண், வீட்டுத் தேவைகளுக்காக தன்பங்கிற்குச் சிறுகச் சிறுகத் தொழிலும் வியாபாரமும் செய்திருக்கிறாள் என்பதைக் கூறும் சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொள்ளவில்லை. ஆனால் சங்க இலக்கியங்கள் அவற்றைக் கூறத் தவறவில்லை. உயர்குடிப் பெண் கணவனோடு இருக்கும் வரை கணவனின் சொத்து அவள்

சொத்து என்னும் நிலைப்பாடே அக்காலத்தில் நிலவியிருக்க வேண்டும். கணவனை விட்டு அவள் விலகிய நிலையில் அவளுக்குச் சொத்தும் இல்லை, காப்புமில்லை என்ற அளவில் அவள் கணவனைச் சார்ந்தே இருக்கிறாள். கணவன் ஊரில் இல்லாத வேளைகளில் மனைவி தன்விருப்பப்படி புலவர்களுக்குப் பரிசில் வழங்கியிருக்கிறாள் என்ற அளவில் அவளுக்குப் பொருளாதாரச் சுதந்திரம் இருந்திருக்கிறது.

ஒரு சராசரிப் பெண்ணுக்குச் சொத்துரிமை என்று ஒன்று தனியாக இருக்கவில்லை. ஆணுடன் சேர்ந்து தொழில் செய்பவளுக்கு கணவனுடையது எல்லாம் அவளுடையதே;

தந்தையோ தமையனோ கணவனோ கடலிலிருந்து கொண்டு வரும் மீன், கொண்டு வரும் வரை தான் ஆணின் சொத்து. அதனைக் கூடையில் ஏற்றி விலைப் பொருளாக்குவதும் உப்புப் போட்டுக் கருவாடாக்குவதும் பெண்ணின் கடமையாக இருந்திருக்கிறது. அப்படியானால் மீன் யார் சொத்து?

நெல் விற்று எருது வாங்கி வரும் பெண், இந்த எருதை யார் பெயரில் சொத்தாக எழுதிக் கொள்ளுவாள்?

வண்டியில் உப்பை ஏற்றி, நெடுஞ்சாலையில் ஓட்டி, உப்பு வணிகத்தில் பெரும் பங்கு கொள்ளும் பெண்ணுக்கு இவ்வாணிபத்தில் பங்கு என்ன?

ஆணுக்குச் சமமாக வயலில் வேலை செய்கிறாள் பெண். விளைபொருளுக்குச் சொந்தக்காரர் யார்?
இவ்வாறு தொழிலைச் சமமாகப் பங்கு போட்டுச் செய்யும் சமூகத்தில்; சொத்துரிமை ஒரு சிக்கலாக இருக்கவில்லை.

அகவிலக்கியத்தில் தலைவியே முக்கிய பாத்திரம் என்பது புள்ளிவிவர அடிப்படையில் நிறுவப்பட்டுள்ளது. தலைவியின் வாழ்வின் பிற்கூறு இப்படித்தான் இருக்கும் என்பதை நற்றாயைப் பார்த்து அறிந்து கொள்ளலாம். குடும்பத்தில் முடிவெடுக்கும் அதிகாரம் தந்தையிடமும், மட்டுப்படுத்தப்பட்ட அதிகாரம் தாயிடமும் இருந்திருக்கிறது. ஆனால், தந்தையைத் தனது முடிவிற்குச் சாதகமாக மாற்றும் ஆற்றல் தாயிடம் இருந்திருக்கிறது. எனவே இறுதித் தீர்மானங்கள் பெண்களாலேயே எடுக்கப்பட்டிருக்கின்றன. ஆண், பெண் கடமைகள் சமமானவையாகத் தொல்காப்பியம் காட்டவில்லை என்று கூறப்படுகிறது. ஆணும் பெண்ணும் உடலமைப்பில் ஒத்தவர்கள் போலக் காணப்பட்டாலும் அடிப்படையில் உடல்ரீதியாகவும் உளரீதியாகவும் வெவ்வேறு அமைப்புக்களைக் கொண்டவர்கள். உடல் சார்ந்த தொழிற்பாடுகளை ஆணால் திறமையாக ஆற்ற

முடியும். பெண் இனப் பெருக்கத்திற்குக் காரணமானவள், மென்மையானவள், உள்ளம் சார்ந்த செயல்களில் திறமைசாலி. உலகோடு தன்னை இணைத்துக் கொள்ளும் அணுகுமுறையிலும் ஆணிலும் பல வழிகளில் வேறானவள். அவர்கள், தமது தன்மைகளுக்கு ஏற்ற முறையில், தம்மிடையே ஏற்படுத்திக் கொண்ட எழுதா ஒப்பந்தத்தின்படி தொழிற்பாடுகளைப் பகிர்ந்து வாழ்ந்த வாழ்க்கையை ஆராயும் நாம் அதனைப் புரிந்து கொள்வதற்குத் தற்கால நடைமுறைகளை அளவுகோலாகக் கொண்டிருக்கின்றோம்.

மகளிர், மொழிவழி அல்லாத மறைமுகத் தொடர்பியலே பெரும்பாலும் கொள்கின்றனர் என்பது தொல்காப்பியர் மீது சுமத்தப்படும் ஒரு குற்றச்சாட்டு. இது தொடர்பான நூற்பாக்களும் விளக்கங்களும் அவற்றிற்கு எதிரான கருத்துக்களும் ஆராயப்பட்டன. 'தொடர்பாடல்' என்னும் சொல் விரிவாக ஆராயப்பட்டு, அதன்வழி தொல்காப்பியம் பெண்ணிற்குக் கூறியிருக்கும் தொடர்பாடல் இரட்டைத் தொடர்பாடலே என்பதும் களவிலும் கற்பிலும் அவளது தொடர்பாடல் அவளது இணையான தலைவனது தொடர்பாடலுக்கு எந்த வகையிலும் மாறுபட்டதோ, தாழ்வு பட்டதோ அல்ல என்பதும் நிறுவப்பட்டுள்ளது. பெண் ஆணின் விருப்பத்திற்கு ஏற்பக் கற்பிக்கப்பட்டவளாகக் கூறப்படுகிறது.

களவில் தலைவியின் இயக்கத்தில் தலைவன் ஒழுகினானே தவிரத் தலைவனின் இயக்கத்தில் தலைவி இயங்கவில்லை. தலைவி, யாருடைய ஆலோசனையோ அனுமதியோ இன்றித் தோழிக்கும் தெரியாமல், தலைவனைத் தெரிந்தெடுக்கிறாள். பெண்ணை, ஆண் கட்டாயப்படுத்தி எதையும் சாதித்துக் கொண்டதாகத் தெரியவில்லை. சங்ககாலப் பெண், தனது மனத்துக்குப் பிடித்தவனைக் கணவனாகத் தெரிந்தெடுக்கும் மனத் துணிவையும் சுதந்திரத்தையும் அக்காலச் சமூகம் அவளுக்குக் கொடுத்திருக்கிறது. தொல்காப்பியர் காலத்தில் களவில் மெய்யுறுபுணர்ச்சி நடந்திருப்பதை மறுப்பதற்கில்லை. ஒத்த குணவியல்புகளும் ஆளுமையும் கொண்ட தலைவியின் சம்மதமின்றித் தலைவனுக்கு எதுவும் சாத்தியமில்லை என்பது தெளிவு. தொல்காப்பியர் இலக்கணப்படி 'கற்பு' என்பது 'கன்னித்தன்மை' யுடன் தொடர்புடைய பொருளில் ஆளப்படவில்லை. திருமணத்தின் முக்கிய நிகழ்வான புணர்ச்சி திருமணத்திற்கு முன்னமே நடந்து முடிந்து விட்டது. எனவே புணர்ச்சிக்கும் கற்புக்கும் தொடர்பில்லை. காட்டலாகாப் பொருளான 'கற்பு' என்பது நிறை என்னும் உள்ளத்து உணர்வு. துணைக்கு யாருமற்ற நிலையில் மதுரைத் தெருக்களில் நின்று நீதி கேட்ட வணிகர் குடிப்பிறந்த கண்ணகி தனது கற்பு வழித் தீர்வு கண்டாள். ஒரு சராசரிப் பெண்ணுக்கு இதுவும் சாத்தியமே.

தொல்காப்பியர் காலத்தில், நிறை என்னும் பொருளில் ஆளப்பட்ட கற்புக்குப் பிற்கால ஆய்வாளர்கள், தம் காலக் கருத்தைப் புகுத்திப் பொருள் காண விழைவது பொருந்துவதாக இல்லை. தலைமுறை இடைவெளியைத் தாண்டிப் பொருள் காணவேண்டும்.

பெண் உடைமைப் பொருள் என்று கூறப்படுகிறது. மகட்பாற்காஞ்சி போன்ற துறைகள் பெண்ணை உடைமைப் பொருளாகக் காட்டுகின்றன. பிற்காலத்தில் பாடல்களுக்குத் துறைகள் அமைத்தலில் சில தவறுகள் நேர்ந்திருக்கின்றன. புறநானூற்றில், மகட்பாற்காஞ்சிப் பாடல்களும் பெண் காரணமாக எழுந்த போரைக் குறிப்பிடவில்லை. சீறூர்த் தலைவரின் வீரமும் குடிச்சிறப்பும் மான மாண்பும் புகழ்வதற்குப் புலவர்கள் மேற்கொண்ட புனைவு நெறியே மகட்பாற்காஞ்சியாகும். சங்ககாலத்தில், பெண் உடன்கட்டை ஏறும்படி கட்டாயப்படுத்தப்படவில்லை. ‘சதி’ என்னும் கட்டாய வழக்கம் சங்ககாலத்தின் பின் சிறிது சிறிதாக வளர்த்தெடுக்கப்பட்டிருக்கிறது. மனைவி இறந்த கணவனுக்கு, காதலியை இழந்த ‘தபுதார நிலை’ மட்டும் ஒரு புறநடையாகும். அதுவும் வருந்தி நிற்பது மட்டும் தான். பெண்ணுக்கு மறுமணம் செய்து கொள்ளும் உரிமை இருந்ததாகத் தெரியவில்லை. ஆனால் மனைவி உயிரோடு இருக்கும் போதே கணவன் வேறொருத்தியை மணந்து கொள்ளும் இருதாரமணம் சங்ககாலத்தில் இருந்திருக்கிறது.

சங்ககாலப் பெண்களும் காலத்தைப் பிரதிபலிப்பவர்களாக, மறக்குடி மரபிற்கேற்ற மனநிலையை வளர்த்துக் கொண்டவர்களாகவே இருந்திருக்கிறார்கள். தன் ஒரே மகனைப் போருக்கு அனுப்பும் வீரத்தாயாகவும், தன் கணவன் போர்க்களத்தில் இறந்தான் என்பதை அறிந்து தானும் உயிர் நீக்கும் பதிவிரதையாகவும், தன் கணவன் உயிர் குடித்தவனைக் கொன்று பழி தீர்த்த பின் தன் உயிரை மாய்த்துக் கொள்ளும்; மறக்குடி மகளாகவும், மாண்ட தலைவனின் தலையை அணைத்தபடி உயிர்விடும் வீரத்தலைவியாகவும் தமிழ் மறக்குடி மகள் காட்டப்படுகிறாள்.

மறக்குடி மாதருக்குத் தமிழர் வரலாற்றில் தனியிடம் தரப்பட்டிருக்கிறது. பாதுகாப்புக் காரணத்தாலேயே பெண்ணுக்குக் கடல் பயணம் மறுக்கப்பட்டது. சங்க காலத் தமிழர் பண்பாட்டில் பெண்கள் மடலேறியிருக்கமுடியாது என்பது நிறுவப்பட்டது. பாசறைக்குப் பெண்கள், தொழில் தொடர்பாகப் போயிருக்கிறார்கள் என்பதும் எவரும் போரில் நேரடியாகக் கலந்து கொள்ளவில்லை என்பதும் நிறுவப்பட்டது. எனவே, மறுக்கப்பட்டதாகக் கூறப்பட்டவை யாவும் நன்நோக்குடனேயே மறுக்கப்பட்டன, பெண் என்ற காரணத்தால் அல்ல.

கலை வளர்த்த ஒரு குடிக்கும் பணமும் அதிகாரமும் வாய்ப்பும் மிக்க உயர்குடி மக்களுக்குமிடையே ஏற்பட்ட கொடுக்கல் வாங்கலில் உருவானவர்களே பரத்தையர் குலம். எனலாம். கலைமக்களாக இருந்த விறலியரை விலைமகளாக்கியதில் பாணரது பங்கும் பெரியது. தமது வாழ்வாதாயத்தின் பொருட்டுத் தம் குலப் பெண்டிரைப் பொருளுக்கு விற்றனர் என்பது தான் உண்மை. போரின் விளைவாக ஆண் பெண் சமநிலை அற்றுப் போனதும், போரில் கைதிகளாகக் கொண்டுவரப்பட்ட மகளிருக்கும் இதுவே தொழிலாக ஆக்கப்பட்டதும், ஒருவனுக்கு ஒருத்தி என்ற நிலைப்பாட்டைத் தமிழர் போற்றி வந்தமையும் சங்ககால இறுதிப் பகுதியில் பரத்தையர் பெருக்கத்திற்கான வேறு காரணங்களாக அமைந்தன எனலாம். பரத்தையருக்குக் குழந்தைகள் பிறந்திராவிட்டால் பரத்தையர் குடி அருகி இல்லாமற் போயிருக்கவேண்டும். மாறாகப் பரத்தையர் எண்ணிக்கை பல்கிப் பெருகியிருக்கிறது. இது, பரத்தையரது மகப்பேறு, தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியங்களிலும் தவிர்க்கப் பட்டிருக்கிறது என்ற கருத்தை உறுதி செய்கிறது.

தலைவன் பரத்தையிற் பிரிதலை ஒரு சாதாரண நிகழ்வாகத் தொல்காப்பியமும் சங்க இலக்கியங்களும் கூறுகின்றன. சுவை கருதிப் பரத்தையர் ஒழுக்கம் அதிகமாகப் பேசப்பட்டிருக்கிறது என்பது தான் உண்மை. பரத்தையிடம்

ஆண் செல்வது அவனது பலவீனம். இதுவே தலைவியின் பலமாகவும் ஆகிவிடுகிறது. தலைவிக்குத் தலைவனின் பரத்தைமையைப் பொறுத்துப் போகும் பண்பு கூறப்படுகிறது. இது, தலைவி, தலைவனின் பரத்தமையை ஏற்று நடக்காவிட்டால், அவள் ஒதுக்கப்படக்கூடியதொரு நிலை உருவாகும் என்று அச்சுறுத்துவது போல இருக்கிறது.

கற்பு வாழ்க்கையில் கணவனின் பரத்தைமை ஒழுக்கம் அவளுக்கு ஒரு தலையிடியாக இருந்ததே ஒழிய அது அவள் வாழ்க்கையைத் தகர்க்கும் ஒழுக்கமாக இருக்கவில்லை. அவள் அதனை அக்கால வாழ்க்கை நெறியின் ஒரு அம்சமாகக் கொண்டு பெரிதாக அலட்டிக் கொள்ளாத நிலையே காணப்பட்டிருக்கிறது. தலைவன் தலைவியரிடையே புலவியும் ஊடலும் ஏற்படுவதற்குத் தலைவனின் பரத்தைமை தவிர வேறு காரணம் உள்ளதாகப் பாடல் இல்லை. கணவனை ஊடியும் கூடியும் ஏசியும் பணிந்தும் நயந்தும் கடிந்தும் அவனது தவறுகளை எடுத்துக் கூறும் உரிமையும் தகுதியும் கடமையும் பெற்றவள் தலைவி ஒருத்தியே.

பரத்தை, தலைவன் மேல் உண்மையான அன்பு கொண்ட நிலையிலும் கூட, பிற்கால மாதவி போன்று, தலைவன் வாழ்க்கையில், தனக்கென நிலையான ஒரு இடத்தை நிலைநாட்டிக் கொள்ள முடியாத நிலையில் இருந்தவள். சங்க

காலப் பிற்பகுதியில் தனக்கும் தலைவன் மேல் உரிமை உண்டு என்பதைத் தலைவி, தோழி, உற்றார் காணப் பொது இடத்தில் உரிமை கோரிக் கொள்ளும் நிலை உருவாகியிருந்தது. காலமும் சமூகமும் பரத்தைக்கு இழைத்த அநீதி பல நூற்றாண்டு காலத்திற்குச் சமூகத்தைப் பழிவாங்கத் தவறவில்லை. மிக அண்மைக் காலம் வரை இதன் கொடுமை நீடித்திருந்திருக்கிறது. பெண் சமூகத்தின் ஒரு பகுதி, பரத்தை என்னும் பெயரால், பல நூற்றாண்டுகளாக மீளமுடியாத ஒரு கொடுமைக்கு ஆளாக்கப்பட்டு வந்தது என்பது மறுக்கமுடியாத ஒரு விடயமாகும்.

தொல்காப்பியம் ஆணாதிக்க சமூகத்தைப் பிரதிபலித்தபோதிலும், பெண்ணுக்கு முழுச் சுதந்திரமும் கொடுக்கப்பட்டிருந்தது, பெண்ணை உயரிய இடத்தில் வைத்துப் பாராட்டத் தவறவில்லை என்பதையும் மறுப்பதற்கில்லை. பெண் ஆணையும், ஆண் பெண்ணையும் சார்ந்து வாழவேண்டியதன் தேவையைக் காட்டி நிற்கிறது பாரிமகளிர் வரலாறு. இளம்பெண் ஒருத்தி, வீட்டிற்கும் ஊருக்கும் அஞ்ச வேண்டிய ஒரு பண்பாட்டுக்குக் கட்டுப்பட்டிருந்ததையும் நக்கண்ணையார் பாடல்கள் காட்டி நிற்கின்றன. சமூகம், குடும்பம் என்னும் தாபனங்கள் ஆரோக்கியமாக இயங்குவதற்குச் சில கட்டுப்பாடுகள், சட்டதிட்டங்கள் அத்தியாவசியமானவை. சங்ககாலத்தில்

கட்டுப்பாட்டுடன் கூடிய ஒரு சமூக அமைப்பையே நாம் காணக்கூடியதாக உள்ளது.

சங்க காலத்தின் பின் தொடங்கிப் படிப்படியாகக் காலங்காலமாக வளர்த்தெடுக்கப்பட்ட ஆண் பெண் பாலாரிடையேயான சமனற்ற தன்மை சமூகத்தில் ஓர் அதிகாரப் படிநிலையை உருவாக்கி இருக்கிறது. சங்ககாலத்தில் இல்லாதிருந்த இந் நிலைப்பாட்டைச் சங்ககாலத்தின் மேல் ஏற்றிப்பார்க்கும் முயற்சி வலுவற்றது. சங்க காலப் பெண் கல்வியில் உயர்நிலையில் இருந்திருக்கிறாள். வீரத்தில் போற்றப்படும் இடத்தில் இருந்திருக்கிறாள். மிகவும் சுதந்திரமான வாழ்க்கை வாழ்ந்திருக்கிறாள். குடும்பத்தைத் தன் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்கும் இல்லத்தலைவியாக இருந்திருக்கிறாள். சமூகத்தில் அவளுக்கென்று உயரியதொரு இடம் இருந்ததை யாரும் மறுப்பதற்கில்லை.

ஆண், பெண்பாலாருக்கு இருக்கவேண்டிய பத்துப் பண்புகளில் சமநிலை தவறுவது விரும்பப்படாவிடினும் அப்படி ஒருவர் உயர்ந்திருக்கும் வேளையில் அது ஆணாக இருக்கலாம் என்னும் மரபைத் தொல்காப்பியர் கூறியிருப்பது, இந்நிலைப்பாடு சிறந்த குடும்பம் உருவாக வழி வகுக்கும் என்னும் கொள்கையின் அடிப்படையிலேயே என்று ஊகிக்கக் கிடக்கிறது. இன்றைய நவீனத்துவச்

*சமூதாயச் சிந்தனையாளர்கள், இன்றைய சமூகச் சிந்தனையை அளவுகோலாகக் கொண்டு, இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னைய ஒரு சமூகத்தின் நிலைப்பாட்டை அளக்க முயல்வது, பொருத்தமானதல்ல.*

*உயர் சமூகம் உருவாக்கப்பட வேண்டும் என்னும் கொள்கைக்கு அடிப்படையாகப் பெண்மைப் பண்புகள் காக்கப்படவேண்டும் என்னும் கருத்துத் தொல்காப்பியம் எங்கனும் ஊடுருவி நிற்கிறது. இன்று, சங்ககாலத்து நடைமுறைகளைப் புரிந்து கொள்ள முடியாமைக்குத் தலைமுறை இடைவெளியே காரணம் என்னும் முடிவு கொள்ள வேண்டியிருக்கிறது.*

***தொல்காப்பியம் பொருளதிகாரமும் சங்கஇலக்கியங்களும் காட்டும் பெண்களின் சமூகநிலை***

*— முனைவர் செல்வம் ஸ்ரீதாஸ்*

*காணொளியாக :*

***https://youtu.be/VtcqCKgatAA***

## 14. தொல்காப்பியர் பிள்ளைத் தமிழ்

— புலவர் ஆகாளியப்பன்

**தொல்காப்பியச் செம்மல் புலவர் ஆ.காளியப்பன்**
**இயற்றிய**
**ஒல்காப் பெருபுகழ்த் தொல்காப்பியர் பிள்ளைத்தமிழ்**

**தாலப்பருவம்:**



"தாலப்பருவம் அல்லது தாலாட்டு" பிள்ளைத் தமிழில் மூன்றாம் பருவம் தாலப்பருவம் ஆகும். இது குழந்தையின் ஏழாம் திங்களில் நிகழ்வது ஆகும். தால் என்பது நாக்கு. நாக்கை அசைத்துக் குழந்தை பேசிப் பழகும் பருவம் மேலும் நாக்கை அசைத்துத் தாலாட்டிக் குழந்தையைத் தூங்க வைப்பதும் இப்பருவமாகும். பிள்ளைத்தமிழ் இலக்கியத்தில் ஒரு பருவமாக விளங்கும் தாலாட்டு. நாளடைவில் தனியொரு சிற்றிலக்கியமாக உருப்பெற்றது எனலாம் (சான்றாக மாரியம்மன் தாலாட்டு போன்றன).

பாடல்– 1:

உந்தி [83] முதலா முந்துவளித் தோன்றி
உரசு நாவால் தோன்றிய ஒலியே
செந்தமிழ் எழுத்தெனச் செப்பினர் புலவர்
சேர்த்தே பாடினர் உன்னைத் தாலாட்டி
முந்தித் தாயே கற்றிடச் செய்தாள்
முக்கனி மொழியைத் தாலாட்டி என்றும்
தீந்தமிழுக்(கு) இலக்கணம் ஆனது தாலாட்டு
தீதறக் கற்றனர் தெளிந்து புலவோர்கள்
முந்தையர் குலத்தின் பெருமை யோடு
முன்னோர் வாழ்வியல் நெறிமுறை கூறி
சந்தவிசை பாடி ஆட்டினர் தொட்டிலையே
சிறுகண் மூடி சிறுவா உறங்காயோ
அந்தமிலா ஐவகை இலக்கணம் உரைத்தவனே
அதங்கோட் டாசாற்கு அரில்தப உணர்த்தியவா
செந்நாப் போதார் உன்வழிக் குறளை
உரைக்கச் செய்தவா தாலோ தாலேலோ [1]

குறிப்பு: 83 என்பது தொல்காப்பிய நூற்பாவைக் குறிக்கும்.

அருஞ்சொற்பொருள்:

உந்தி– மூலாதாரம்; முந்துவழி– மேலேவரும் காற்று; தீந்தமிழ்– தீம்+தமிழ் இனிமையான தமிழ்; அந்தம்– அழிவு முடிவு; அரில்தப– மயக்கம் நீங்க

இதன்பொருள்:

உந்தியிலிருந்து காற்றுத் தோன்றி மேலே வரும் போது நாவால் உரசப்பட்டு ஒலியாக மாறுகிறது. இந்த ஒலிகளைச் செந்தமிழ் எழுத்துகள் என்று செந்தமிழ்வாணர்கள் கூறினார்கள். அந்த எழுத்துக்களைச் சேர்த்துச் சொற்களை உருவாக்கினர். முதன்முதலாக தாயால் நாவை அசைத்துப் பாடிய பாட்டே தாலாட்டு எனப்பட்டது. இதைத்தான் தாய்மொழி என்று கூறுவர். இத்தாலாட்டே முக்கனி மொழிக்குத் தொடக்க இலக்கணம் ஆகும். இவ்விலக்கணத்தைக் குற்றமறக் கற்றுத்தெளிந்தவர்களே புலவர்கள் எனப்பட்டனர். அவர்கள் நம்முன்னோர்களின் குலப்பெருமையோடு வாழ்வியல் நெறிமுறைகளையும் இசையோடு பாடி தாலாட்டுச் செய்கிறார்கள். தாலாட்டித் தொட்டிலை ஆட்டுகின்றார்கள். எனவே சிறுகண்மூடிச் சிறுவா உறங்காயோ? அழிவில்லாத ஐந்து இலக்கணங்களை உரைத்தவனே! அதங்கோட்டாசான் தடைகளுக்கு விடைகூறி இலக்கணத்தை மயக்கமின்றி உணர்த்தியவனே! திருவள்ளுவரையும் உன்வழியிலேயே குறளை இயற்ற வைத்தவனே! தாலோ தாலேலோ

இலக்கணக்குறிப்பு:

உரசு நா– வினைத்தொகை; செந்தமிழ், முக்கனி, தீந்தமிழ்,சிறுகண் செந்நாப்போதார் – பண்புத்தொகைகள்;

*அந்தமிலா— ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம்; உன்வழி— ஆறாம் வேற்றுமைத்தொகை*

———————————————————————————

*பாடல்— 2:*

*தமிழர் வாழ்வைக் களவு கற்பெனத்*
*தனித்தனி பிரித்துத் துறைபல தந்தவனே!*
*தண்டமிழ் நிலத்தை நான்காய்ப் பிரித்துத்*
*தனித்தே ஐவகை ஒழுக்கத்தை நிறுத்தியவா*
*தமிழர் பெருமையைத் தரணிக்கு உரைத்தவா!*
*தலைவன் தலைவி அறத்தொடு நிற்றலும்*
*தோழியும் பாங்கனும் உற்றிடத் துதவலும்*
*தாயர் இருவர் தன்மை உரைத்தவனே!*
*இமிழ்கடல் சீற்றத்தால் இறந்தன நூலெலாம்*
*எனினும் உன்நூல் இறவாது மீண்டதே*
*இடைகடைச் சங்கத்தார்க்கு இலக்கணம் தந்தவா!*
*எங்கள் காப்பியா தாலோ தாலேலோ*
*அமிழ்தாம் தமிழுக்கு அரணாய் உள்ளவா!*
*ஐவகை நிலத்தின் தெய்வம் உரைத்தவா!*
*அணிக்குத் தலைமை உவமை என்றவா!*
*அனைத்தும் அறிந்தவா தாலோ தாலேலோ* [2]

அருஞ்சொற்பொருள்:

தரணி— உலகம்; தாயர் இருவர்— செவிலித்தாய்; நற்றாய்; பாங்கன்— தோழன்; இமிழ்கடல்— ஒலியை உடைய கடல்; அரணாய்— பாதுகாப்பாய்

இதன்பொருள்:

தமிழர் அகவாழ்க்கையைக் களவென்றும் கற்பென்றும் பிரித்து, அதை விளக்கத் துறைகளாகப் பிரித்துக் கூறியவா! தமிழர் வாழும் நிலப்பகுதியைக் குறிஞ்சி முதலாக நான்காய்ப் பிரித்தவா! அதேசமயம் ஒழுக்கத்தை ஐந்தாகக் கூறியவா! தமிழர் பெருமையை உலகிற்கு எடுத்துச் சொன்னவனே! தலைவன் தலைவியர் பேசிக்கொள்ளும் இடத்தினையும், தோழியும் தோழனும் தலைமக்கள் காதல் வளர உதவி செய்தலையும் நற்றாய் செவிலித்தாய் இருவர் தன்மைகளையும் உரைத்தவா! முன்னொரு காலத்தில் ஏற்பட்ட ஆழிப்பேரலையால் அனைத்து நூல்களும் மறைந்தன. ஆனால் உன்நூல் மட்டும் இறவாமல் மீண்டது. அதுவே இடைச் சங்கத்தார்க்கும், முதற்சங்கத்தார்க்கும் (ஏன் இக்காலத்தார்க்கும்) இலக்கண நூலைத்திகழத் தந்தவனே! எங்கள் தொல்காப்பியனே! நாவினை அசைத்துப் பேசாயோ! தமிழ் தமிழ் என்று சொல்லச் சொல்ல அமிழ்தாக மாறும் தமிழ் மொழிக்குப் பாதுகாப்பாக விளங்குபவனே! ஐவகைத்திணைக்கும் உரிய தெய்வங்களை எடுத்துக் கூறியவா! அணிகளுக்கெல்லாம் முதன்மையானது

உவமையணி என்றவா! அனைத்தும் அறிந்த ஆன்றோனே! தாலோ தாலேலோ!

இலக்கணக்குறிப்பு:

களவு கற்பு, தலைவன் தலைவி– உம்மைத்தொகைகள்; தண்டமிழ்– பண்புத்தொகை; தோழியும் பாங்கனும்– எண்ணும்மை; இமிழ்கடல்– இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கத்தொகை; உன்நூல்– ஆறாம் வேற்றுமைத் தொகை.

---

பாடல்– 3:

பிரிவுகள் என்பது பாலையின் உரிப்பொருள்
களவிலும் கற்பிலும் இருவேறு நிலையிலும்
பிரிவுக்கு இலக்கணம் பற்பல சொன்னவனே
பொருள்வயிற் பிரிதலும் உண்டென மொழிந்தவா!
உரித்தென மொழிந்தாய் ஓதலும் காவலும்
உயர்ந்த தூதும் ஒருவழி உண்டென்றாய்
உரிய காலத்தை ஓதினாய் அன்றே
ஒருவழித் தணத்தலும் உடந்தான் ஓதியவா!
உரிமை கோரார் உயர்ந்த மங்கையர்
மடல்மேல் ஏறவும் கடல்மேற் செல்லவும்
உடன்போக்கும் ஒருவகைப் பிரிவாய் உரைத்தவா!

உள்ளம் உவக்கத் தாலோ தாலேலோ
பரத்தையர் பிரிவால் ஊடலும் வந்தால்
பற்பல வாயில்கள் பலவாய்த் தேற்றுவதைப்
பலவகை மொழியால் பாங்காய் உரைத்தவா!
பாரோர் மகிழத் தாலோ தாலேலோ [3]

அருஞ்சொற்பொருள்:
ஒருவழித்தணத்தல்– உடன்போக்கு; பார் உலகம்; வாயில்கள் தலைவனுக்கும் தலைவிக்கும் சிறு பிணக்கு ஏற்படும்போது உடன்பாடு செய்பவர்கள்

இதன்பொருள்:
பிரிவு என்பது பாலைத்திணையின் உரிப்பொருள். இது களவு, கற்பு என்ற இருவேறு நிலைகளிலும் நடைபெறும் எனப் பிரிவுக்கு இலக்கணம் சொன்னவனே! பொருள் தேடச் செல்லும் பிரிவு, கற்பதற்காகவும் நாட்டைக்காப்பதற்காகவும், தூது செல்வதற்காகவும் பிரியும் பிரிவுகள் உள்ளன. உடன்போக்கையும் ஒரு பிரிவாகக் கூறயவனே! பெண்கள் மடல் ஏறுதல் வழக்கம் இல்லை. அதேசமயம் பெண்கள் தனியாகக் கலம் ஏறி கடல்கடந்தும் செல்வதில்லை என்றுஇலக்கணம் உரைத்தவா! நாங்கள் உள்ளம் மகிழும்படி கண்ணுறங்காயோ! கற்புக்காலத்தில் பரத்தையர்ப்பிரிவால் தலைவி ஊடும்போது பலவகையான வாயில்கள்

*பல்வேறுமுறையில் தேற்றுவர்கள் என உரைத்தவனே!*
*உலகமக்கள் மகிழும்படித் தாலோ தாலேலோ!*

*இலக்கணக்குறிப்பு:*
*ஓதலும் காவலும்– எண்ணும்மை*

––––––––––––––––––––––––––––––––––––––––––––

*பாடல்– 4:*

*ஒலியைக் கணக்கிட உரைத்தாய் மாத்திரை*
*ஒருவிர லோடு பெருவிரல் சேர்த்து*
*ஓசை செய்தல் ஒருமாத் திரையாம்*
*ஒருவர் இயல்பாய்க் கண்ணிமைத் தலுமாம்*
*ஒலிக்கும் மாத்திரை ஒருநான்கு கூறாம்*
*ஒலிக்க மனதால் நினைத்தல் காலாம்*
*ஊன்றல் அரையே முறுக்கல் முக்கால்*
*விடுத்தல் ஒன்றென விளம்பினர் தமிழர்*
*ஒலிக்கும் எழுத்தைக் குறில்நெடில் ஒற்றென*
*ஒலிக்கும் அலகால் ஒருபெயர் வைத்தவனே!*
*ஒன்றே குறிலாம் இரண்டே நெடிலாம்*
*ஒற்றே அரையென ஓதிய புலவன்நீ*
*வலிமெலி இடையென வகுத்தாய் எழுத்தினை*
*வாய்பாட்டில் நீளும் எழுத்தின் இலக்கணம்*
*வருமிசை நூலில் காண்க என்றவனே!*
*வல்லோர் மகிழத் தாலோ தாலேலோ* [4]

இதன் பொருள்:

எழுத்துக்கள் உச்சரிக்க ஆகும் நேரத்தைக் கணக்கிட மாத்திரை என்னும் அலகினை உரைத்தாய். சுட்டு விரலோடு பெருவிரலைச் சேர்த்துச் சொடுக்க ஆகும் நேரமே ஒருமாத்திரை நேரமாகும். அதைக்கூட நான்கு கூறாக்கி எழுத்தை உச்சரிக்க நினைப்பது கால் மாத்திரை, இருவிரல்களையும் சேர்ப்பது அரை, முறுக்குதல் முக்கால், விடும்போது ஒருமாத்திரை ஆகும் என எடுத்துச் சொன்னவர்கள் நம்தமிழர்கள். ஒலிக்கும நேரத்தை வைத்துக் குறில்,நெடில், ஒற்று எனப்பெயர் வைத்தவனே! ஒரு மாத்திரை பெறுவது குறில் என்றும்,இரண்டு மாத்திரை நேரம் ஒலிப்பது நெடில் என்றம், அரைமாத்திரை அளவு ஒலிப்பதை ஒற்று என்றும் வகுத்துக் காட்டிய புலவன் நீயே! ஒற்று எழுத்தினை வல்லினம், மெல்லினம், இடையினம் என்று வகுத்துக் காட்டினாய்! வாய்ப்பாட்டில் நீண்டு ஒலிக்கும் எழுத்தின் அளவுகளை இசை நூலில் கண்டுகொள்க என்றவனே! வல்லோர் மகிழத்தாலோ தாலேலோ!

இலக்கணக்குறிப்பு:

ஒரு விரல்,பெருவிரல்– பண்புத்தொகைகள்; நினைத்தல்,ஊன்றல் தொழிற்பெயர்கள். வலிமெலி இடை உம்மைத்தொகை

———————————————————————————

பாடல்— 5:

எல்லா எழுத்தும் பிறக்கும் இடமும்
எடுக்கும் முயற்சியும் தொகுத்துச் சொல்லியவா
எண்ணிய சார்பாய் இருக்கும் மூன்றும்
அதனதன் முதலே அடிப்படை என்றவனே!
எல்லா [102] எழுத்தும் வெளிப்படக் கிளந்து
சொல்லிய பள்ளி எழுதரும் என்றவனே!
அகத்தெழு வழிஇசை அரில்தப நாடி
அளபிற் கோடல் அந்தணர் மறையென்றாய்
எல்லா[103] எழுத்திலும் இருபத்தி ரண்டே
சொல்லுக்கு முதலாம் என்று சொல்லியவா!
இருபத்து நான்கே இறுதியில் வருவதொடு
இடைநிலை மயக்கமும் இயம்பிய காப்பியனே!
எல்லாப் புணர்ச்சியும் இயையும் போது
இடையில்[118] சாரியை வருவதை உரைத்தாயே
எல்லாம் தொகுத்து தொகைமரபு உரைத்தவா!
எல்லாரும் மகிழத் தாலோ தாலேலோ [5]

குறிப்பு: 102,103 118 என்பன தொல்காப்பிய நூற்பாக்களைக் குறிக்கும்.

இதன் பொருள்:

முதலெழுத்து, சார்பெழுத்து ஆகிய எல்லா எழுத்துகளும் பிறக்கும் இடமும், ஒலிக்கும் முயற்சியும் ஆகிய

அனைத்தையும் தொகுத்துச் சொல்லியவா! சார்பெழுத்துகள்அதன்அதன் முதல் எழுத்துகளை அடிப்படையாகக் கொண்டு வரும் என்றவனே! எல்லா எழுத்துகளும் முன்பு கூறிய பிறப்பிடங்களிலிருந்து பிறக்கும் ஓசை காற்றினால், வெளிப்படக் கேட்குமாறு சொல்லும்போது உள்ளே உறுப்புகளில் தங்கிச் சுழன்று எழும் ஓசைக்காற்றுக்கு அளபு கூறுதல் அந்தணர் இலக்கண நூல்களில் காணப்படும் என்றவனே! முப்பத்து மூன்று எழுத்துக்களில் இருபத்து இரண்டு எழுத்துகள் மொழிக்கு முதலிலும், இருபத்து நான்கு எழுத்துகள் மொழிக்கு இறுதியிலும் வரும் என்று கூறியதோடு மொழிக்கு இடையில் எந்த எந்த எழுத்துகளோடு எந்த எந்த எழுத்துகள் சேர்ந்து வரும் என்று கூறியவா! எல்லா வகைப் புணர்ச்சியிலும் சாரியைகள் இடையிலும் வருவதை உணர்த்தியவா! இவற்றை எல்லாம் தொகுத்து தொகைமரபு என்னும் இலக்கணம் உரைத்தவா எல்லோரும் மகிழத் தாலோ தாலேலோ !

இலக்கணக்குறிப்பு:
எழுத்தும்— முற்றும்மை; அகத்தெழு— ஐந்தாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கத் தொகை; தொகை மரபு— இருபெயரொட்டுப் பண்புத்தொகை

————————————————————————————————————

பாடல்– 6:

எல்லா ஈற்றுக்கும் சாரியை உரைத்து
இருவகைப் புணர்ச்சிக்கும் இலக்கணம் இயம்பியவா!
இகர இறுதிப் பெயர்நிலை முன்னர்
வல்லெழுத்து மிகமென இலக்கணம் வகுத்தவனே!
எல்லாப் பருவத்தும் உழைத்தான் என்பதை
பனிவளி வெயில்மழை யுடன்அத்துச் சாரியை
இயைந்து வருமென எடுத்துக் காட்டியவா
இலக்கணத் தூடே பண்பாடு பகன்றவா!
எல்லாச் சொல்லிலும் எகரமும் ஒகரமும்
ஈற்றலில் வாராது என்று இயம்பியவா!
எல்லா ஈற்றுக்கும் எடுத்துக் காட்டுடன்
இலக்கணம் சொன்னாய்த் தாலோ தாலேலோ
நல்லது அல்லாச் சொல்லுக்குக் கூட
நற்றமிழில் இடக்கர் அடக்கல் என்றவனே!
நல்லதல்லா மலத்தைப் 'பகர ஈ' என்றவனே!
நாங்கள் மகிழ தாலோ தாலேலோ [6]

அருஞ்சொற்பொருள்:

வழி– காற்று; ஊடே– இடையே; பகறல்– கூறுதல்

இதன்பொருள்:

வேற்றுமை, அல்வழி என்னும் இருவகைப் புணர்ச்சிகளிலும் உயிரீறு மெய்யீறு குற்றியலுகர ஈறு என எல்லா வகை ஈறுகளுக்கும் சாரியை கூறியவனே! இகர இறுதி பெயர் சொல்லின்(அப்படி இப்படி எப்படி) முன்னர் வல்லெழுத்து மிகும் என இலக்கணம் வகுத்தவனே! தமிழன் பனி, காற்று, வெயில், மழை என்னும் எல்லாப்பருவ காலத்திலும் உழைத்தான் என்பதை அத்துச் சாரியை கூறும் போது சான்றுகூறியவனே! இவ்வாறு இலக்கணம் கூறும்போது இடையிடையே தமிழ்ப் பண்பாட்டையும் கூறியவனே! எந்தச் சொல்லுக்கும் இறுதியில் எகரமும் ஒகரமும் வாரா என்று கூறியவனே! இவ்வாறு எல்லா ஈறுகளுக்கும் இலக்கணம் சொன்னவனே! மலத்தை 'பீ' என்று கூறாமல் இடக்கர் அடக்கலாகப் 'பகர ஈ' என்றவனே! நாங்கள் மகிழத் தாலோ தாலேலோ.

இலக்கணக்குறிப்பு:

ஈற்றுக்கும் — முற்றும்மை; இருவகை,நற்றமிழ்— பண்புத்தொகைகள்; பனிவழிவெயில் மழை— உம்மைத்தொகை; இலக்கணம் சொன்னாய்— இரண்டாம் வேற்றுமைத்தொகை

---

பாடல்— 7:

எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டலென
எல்லா அளவையும் எடுத்துச் சொன்னவனே!
எள்ளையும் கொள்ளையும் நெல்லையும் குறித்தே
எல்லா நிலத்தார் உணவைக் கூறியவா!
கண்ணியும் மாலையும் தாரும் பூத்தானே
கழுத்திலும் மார்பிலும் அணிகையில் வேறாமே
காலம் இடத்திற்கு முன்பின் பொதுவெனக்
காட்டிய காப்பியனே தாலோ தாலேலோ
விண்ணும் [1589] மண்ணும் வளியொடு நெருப்பும்
வான்மழை நீரும் கலந்த உலகத்தில்
பெண்ணும் ஆணும் நீங்கிய அலியை
பேடியெனக் கூறியே மரபினைப் போற்றியவா
பெண்ணைப் பெற்றோர் கொடுப்பக் கொள்ளாது
பாங்கன் பாங்கியைத் தூதாய் விடுத்து
பெண்ணுடன் போதல் உடன்போக் காமென
பேசிய காப்பியா தாலோ தாலேலோ [7]

குறிப்பு: 1589 என்பது தொல்காப்பிய நூற்பாவைக் குறிக்கும்.

அருஞ்சொற்பொருள்:
கண்ணி – தலைமாலை; தார் – மார்பணிமாலை; வளி – காற்று; பாங்கன் – தோழன்; பாங்கி – தோழி

இதன்பொருள்:

அளவைப் பெயர்களாகிய எண்ணல், எடுத்தல் (நிறை) நீட்டல், முகத்தல் என்று எல்லா வற்றையும் எடுத்துச் சொன்னவனே! எள்,கொள், நெல் என்ற சொற்களால் ஐவகை நிலமக்களின் உணவுகளைக் குறித்துக் கூறியவா! கண்ணி, மாலை, தார் என்பன யாவையும் பூக்களால் ஆன தொடர்களே, இருப்பினும் தலையில் அணியும்போது கண்ணி என்றும், கழுத்தில் அணியும் போது மாலை என்றும், மார்பில் அணியும்போது தார் என்றும் பெயர்களைப் பெறுகின்றன. இவற்றின் வேறுபாடுகளை எல்லாம் உரைத்தவனே! இடத்திற்கும் காலத்திற்கும் முன் பின் என்ற சொற்கள் பொதுவாக வரும் என்று காட்டிய காப்பியனே தாலோ தாலேலோ! வானமும்,நிலமும், காற்றும் நெருப்பும் நீரும் கலந்த சேர்க்கையே உலகம் என்றவனே! அவ்வுலகத்தில் ஆண் தன்மையும், பெண்தன்மையும் அற்ற பிறவியைப் பேடி என்று கூறி மரபினைக் காத்தவனே! தலைவியின் பெற்றோர்களால் கொடுக்கப்படாத போது, தோழியையும் தோழனையும் தூதாக விடுத்துப் பெண்ணை அழைத்துக்கொண்டு செல்லுதலை உடன்போக்கு என்று கூறிய காப்பியனே! தாலோ தாலேலோ.

இலக்கணக்குறிப்பு:

எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் உம்மைத்தொகைகள்; எள்ளையும், கொள்ளையும் – எண்ணும்மை

பாடல்—8:

ஈருயிர் [140 ]சேர்ந்தால் இடையில் தோன்றும்
எழுத்தைக் கூட 'ய்.வ்' என்றவனே!
எழுதும் போது மகரம் வரும்முறை
உட்பெறு புள்ளி உருவாகும் என்றவனே[143]
ஆரிய மொழியை அண்ட விடாது
அன்றே காத்தவனே அதையும் மீறினால்
அம்மொழிக் கிளவி அவ்வெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும் என்றவனே [884]
சீரிய புலவர் அவையில் கேட்ட
தடைக்கு விடையைத் தகும்படி உரைத்தவனே!
திருவிற் பாண்டியன் திருமுன் அரங்கேற்றத்
தொடங்கிய காப்பியா தாலோ தாலேலோ![பாயிரம்]
ஊரொடு[1031] தோற்றம் உரித்தென மொழிந்து
உலாத்தோன்ற ஒருவித் திட்டவனே! உன்னை
ஊரில் உள்ளதேரில் வைத்து இழுப்போம்
உள்ளம் மகிழ்ந்து தாலோ தாலேலோ [8]

குறிப்பு: பாயிரம் மற்றும் 140, 143, 884, 1031 என்பன தொல்காப்பிய நூற்பாக்களைக் குறிக்கும்.

அருஞ்சொற்பொருள்:

மகரம் ம் என்னும் மெய்யெழுத்து; கிளவி—சொல்;சீரிய-சிறந்த

இதன்பொருள்:

புணர்ச்சியில் வருமொழி முதலிலும் நிலை மொழி ஈற்றிலும் உயிர் எழுத்துகள் வரும்போது அவற்றை உடன்படுத்த ய், வ் என்னும் எழுத்துகள் தோன்றும் என்றவனே! எழுதும் போது மகரக்குறுக்கத்திற்கு உள்ளே புள்ளி உருவாகும் என்றவனே! அன்றே ஆரிய மொழியைத் தமிழில் கலக்க விடாது காத்தவனே! அதையும் மீறிய எழுதவேண்டும் என்ற சூழ்நிலையில் அவ்வெழுத்துகளின் வரிவடிவத்தை நீக்கி தமிழ் ஒலிக்கு ஏற்றாற் போல் மாற்றி எழுதவேண்டும் என்றவனே! சிறந்த புலவர்கள் வீற்றிருக்கும் நிலந்தரு திருவில் பாண்டியன் அவையில் புலவர்கள் வினவிய வினாக்களுக்கெல்லாம் விடைகளைக் கூறி நூலினை அரங்கேற்றம் செய்தவனே! சிற்றிலக்கியங்களில் ஒன்றாகிய உலா இலக்கியம் தோன்ற அடிப்படை இட்டவனே! ஊரில் உள்ள நாங்கள் அனைவரும் ஒருங்குகூடி உள்ளமாகிய தேரில் வைத்து இழுப்போம். ஆகவே உள்ளம் மகிழ்ந்து தாலோ தாலேலோ.

இலக்கணக்குறிப்பு:

ஒரீஇ – சொல்லிசை அளபெடை

பாடல்—9:

ஒன்பதின் மீதுனக்கு நாட்டம் உள்ளதால்
ஓரதி காரத்தை ஒன்பதியல் ஆக்கினையோ
ஓராயிரத் தறுநூற்று பதினொரு நூற்பா
உரைத்தாய் என்றே ஒத்துக் கொண்டோமே
ஒன்பதி னோடு ஒருநூறு ஆயிரம் [463]
ஒட்டி வருவதை உரைத்தாய் இலக்கணத்தால்
தொண்ணூறு தொள்ளா யிரமாகும் முறையைத்
துளைந்து உரைத்த தொல்காப் பியனே
நன்றாய் சோற்றை ஆக்கல் போல
நவின்றாய் இலக்கணம் கிளவி ஆக்கத்தில்
நம்தமிழ் வாழ நல்லரண் அமைத்த
நற்றமிழ்ப் புலவா தாலோ தாலேலோ
உந்தன் நூலை நூலெனத் தொடங்கி
நூலென முடித்த நுனித்தகு புலவோனே
உனக்கீடாய் இனியொரு நூலை படைக்க
உள்ளா ரிலையே தாலோ தாலேலோ [9]

குறிப்பு: 463 என்பது தொல்காப்பிய நூற்பாவைக் குறிக்கும்.

அருஞ்சொற்பொருள்:

துளைந்து—ஆய்ந்து

இதன்பொருள்:

ஒன்பதின் மீது உனக்கு அளவிலா நாட்டம் இருப்பதால்தான் என்னவோ ஒவ்வொரு அதிகாரத்தையும் ஒன்பது ஒன்பது இயல்களாகப் பகுத்துள்ளாய் அதனால் நூற்பாக்களின் எண்ணிக்கையும் 1611 ஆக உள்ளதோ? மேலும் புணர்ச்சியில் ஒன்பது என்ற எண்ணை மட்டும் சிறப்பாக எடுத்துக் கூறியுள்ளாய். தொண்ணூறு தொள்ளாயிரம் தோன்றும் முறைகளை ஆயந்து கூறிய தொல்காப்பியனே! குருணை, கல், கறுப்பு அரிசி இவற்றை எல்லாம் களைந்து உணவு சமைப்பதைச் சோறு ஆக்கல் என்பர். அதை மனத்தில் கொண்டே சொல் அதிகாரத்தின் முதல் இயலைக் கிளவி ஆக்கம் என்று பெயர் வைத்தவனே! நம் தமிழ் மொழியின் காப்பரண் ஆக தொல்காப்பியம் தந்த புலவா! தாலோ தாலேலோ. உன்றன் நூலை நூல் மரபு என நூலில் தொடங்கி, புலவர் கூறிய நூலே என நூலில் முடித்த கூர்த்த அறிவுள்ளவனே தாலோ தாலேலோ!

இலக்கணக்குறிப்பு:

நம் தமிழ்—ஆறாம் வேற்றுமைத்தொகை; நல்லரண்—பண்புத்தொகை; உன்றன் என்பது உந்தன் என எதுகைக்காக எழுத்தப்பட்டது. இலை—இல்லை என்பதன் இடைக்குறை

9 இன் சிறப்பு – விளக்கம்:

9உடன் எந்த எண்ணைப் பெருக்கினாலும் 'விடையின் கூட்டுத்தொகை 9ஆகவே வரும்'

*சான்று: 9x9 =81 → 8+1= 9; 8x9 =72 → 7+ 2 = 9*

*9 உடன் எந்த எண்ணை கூட்டினாலும் 'விடையின் கூட்டுத்தொகை கூட்டப்பட்ட எண்ணாக இருக்கும்'*
*சான்று: 9+ 9 =18→1+8= 9; 9+ 7 =16 → 1+6= 7*

அதனால்தான் சிறப்பு தலைமை எனும் பொருள்தரும் ஓரெழுத்து ஒரு மொழியாகிய ஐ யை ஒன்பதாவது எழுத்தாகத் தமிழ் நெடுங்கணக்கில் வைத்துள்ளனர். இக்காரணத்தினாலேயே அய் என எழுதக்கூடாது என்கிறோம். அக்காரணம் பற்றியே தொல்காப்பியர் ஒவ்வொரு அதிகாரத்தையும் ஒன்பது ஒன்பது இயல்களாகப் பிரித்துள்ளார்.

திருமூலரும் இவ்வாறே திருமந்திரத்தை ஒன்பது உட்பிரிவுகளைக் கொண்டதாகச்செய்துள்ளார்.
ஒவ்வொரு பிரிவும் ஒரு 'தந்திரம்' எனக் குறிக்கப்பட்டுள்ளது. இந்த ஒன்பது தந்திரங்களும், ஆகமங்கள் ஒன்பதின் சாரமாக அமைந்துள்ளன. அந்த எண்ணில் நீண்ட வாழ்வு எனும் அர்த்தம் பொதிந்திருப்பதாகச் சொல்கின்றனர், சீனர்களின் சொர்க்க கோபுரம், ஒன்பது வளையங்களால் சூழப்பட்டுள்ளது. எகிப்து, ஐரோப்பா, கிரீக் முதலான நாடுகளும் 9-ஆம் எண்ணை விசேஷமாகப் பயன்படுத்திப் போற்றுகின்றன. புத்த மதத்தில், மிக முக்கியமான சடங்குகள்

யாவும் ஒன்பது துறவிகளைக் கொண்டே நடைபெறும். தங்கம், வெள்ளி மற்றும் பிளாட்டினத்தின் சுத்தத்தை 999 என்று மதிப்பிடுவார்கள். பெண்களின் கர்ப்பம், பூரணமாவது ஒன்பதாம் மாத நிறைவில்தான்!

ஒன்பது என்ற எண்ணுக்கு வடமொழியில் நவம் என்று பெயர். நவ என்ற சொல் புதிய, புதுமை எனும் பொருள் உடையது.

(5-27-20222)

---

பாடல்—10:

களவல ராயினும்[1061] காமத்துப் படினும்
கண்ட ஊரார் காதொடு பேசினும்
கட்டினும் கழங்கினும் வெறியாட்டு அயர்தலும்
செவிலிக் கூற்று நிகழும் என்றவனே!
களவில் பழகிய காதலர் இருவர்
காவிலும் பூம்பொழில் சோலையில் சேர்ந்தே
கனவில் மிதந்தது போதுமென்றே கற்புக்காக
கடிமணம் புரிவர் என்று சொன்னவனே!
அளவிற்கும்[170] நிறையிற்கும் மொழிமுத லாகி
உளவெனப் பட்ட ஒன்பதிற் றெழுத்தென
அகரவுகரம் கசதப நமவ என்றவனே!
அனைத்தும் அடக்கி இலக்கியம் சொன்னவனே
உளமகிழ்ந் துன்னைப் போற்றினோம் ஐயனே
உவந்து நீயும் தாலோ தாலேலோ

ஒருபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்கா
பெற்றதால் உன்னை தாலோ தாலேலோ [10]

குறிப்பு: *170, 1061* என்பன தொல்காப்பிய நூற்பாவைக் குறிக்கும்.

அருஞ்சொற்பொருள்:
அலர்– ஊரார் தூற்றிப் பேசல்; கட்டு–கட்டாக உள்ள ஓலைச்சுவடி பார்த்துக்கூறல்; கழங்கினும்– கழற்சிக்காயின் எண்ணிக்கையை வைத்துக் கூறல்; வெறியாட்டு– வேலன் மீது வந்து கூறல்; கா–பூங்கா; கடி மணம்–திருமணம்

இதன்பொருள்:
தலைவனும் தலைவியும் பழகுவதை ஊரார் தங்களுக்குள் பேசிக் கொள்ளும் போதும், காமம் மிகுதியால் தலைவியின் உடலில் தோன்றும் நிறவேறு பாட்டின் போதும், ஊர் மக்கள் தங்களுக்குள் கமுக்கமாகப் பேசிக் கொள்ளும் போதும், ஓலைக்கட்டு,கழற்சிக்காய்,இவற்றின மூலமும் வேலன் வந்து ஆடிச் சொல்லும் போதும் செவிலி கூற்று நிகழும் என்றவனே! காதலர் இருவரும் பூங்காவிலும், சோலையிலும் சேர்ந்து சுற்றி மகிழ்ச்சியாக இருந்தது போதும் என்று திருமணம் செய்து கொள்ளுவர் என்று கூறியவனே! அளவைகளாகிய எண்ணுதல் முகத்தல் நீட்டல் மற்றும் நிறுத்தல் முதலிய அளவுப் பெயர்கள் மொழிக்கு முதலாக வரும் போது

வரக்கூடிய எழுத்துகளை அ, உ, க,ச,த,ப,ந,ம,வ என்னும் ஒன்பது எழுத்துகளும் வரும் என்றவனே! இவற்றையெல்லாம் உள்ளடக்கி தமது நூலை இலக்கியம் போல் கூறியவனே! எங்கள் உள்ளம் மகிழ்ந்து போற்றினோம் தலைவா நீயும் உள்ளம் மகிழ்ந்து நாவை அசைத்துப் பாடுவாயாக!எந்தப் பிறவியிலும் எங்களை தீயவை தீண்டாமல் இருப்போம். ஏனெனிலே பழிசேராத உன்னை நாங்கள் மகவாகப் பெற்றுள்ளோம். தாலோ தாலேலோ

இலக்கணக்குறிப்பு:
கட்டினும் கழங்கினும் எண்ணும்மை; பூம்பொழில்- இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கத்தொகை; தீண்டா – ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்

---

தொல்காப்பியச் செம்மல் புலவர் ஆ.காளியப்பன்
அலைபேசி: 9788552993

# 15. தமிழில் காட்சியியலும் வள்ளுவமும்

— முனைவர் ஆனந்த் அமலதாஸ்

*தமிழில் காட்சியியல் என்பது ஆங்கிலத்தில் "பிலாசபி" என்று சொல்வதற்கு "சமமான" சொல் எனலாம். தத்துவம் சமஸ்கிருதச் சொல். 'காட்சியர்' என்றால் 'அறிவாளி', 'சிந்தனையாளர்' என்று பொருள். பிலாசபருக்குச் சமமாகச் சொல்லலாம்.*

**நம்பிக்கையும் பகுத்தறிவும் (Faith and Reason):**

*மெய்யியல், தத்துவம், பிலாசபி என்பதும் கூட மக்கள் மத்தியில் தெளிவற்ற நிலையில் உள்ளது. அரசியல் தலைவர்கள் அனைவரையும் 'பிலாசபர்' என்று பொதுவாகச் சொல்லி விடுவோம். அதில் தவறில்லை. ஆனால் எந்தப் பொருளில் அந்தச் சொல்லைப் பயன்படுத்துகிறோம் என்று தெரிந்திருப்பது முக்கியம். இல்லையென்றால் ஏதோ அர்த்தமில்லாமல் பேசுவது போல ஆகும்.*

*"ஆழமாக அலசிப் பார்த்த வாழ்வு அர்த்தமுள்ள வாழ்வு", என்பது சாக்ரட்டீஸ் கூற்று (An examined life is worth living). அப்படி என்றால் அடிப்படைக் கேள்விகளைக் கேட்க வேண்டும். ஒரு கட்டெறும்புக்கு எத்தனை கால்கள் உண்டு? இது அடிப்படைக் கேள்வி இல்லை. இந்த மைக்ரோ போன்*

எப்படி வேலை செய்கிறது? தெரிந்தவர்களைக் கேட்டால் விளக்கம் சொல்வார்கள். இது அடிப்படை கேள்வி இல்லை.

ஆனால், இந்த வாழ்க்கைக்கு ஏதாவது பொருள் இருக்கிறதா? எத்தனையோ பேர் சுட்டுக் கொல்லப் படுகிறார்களே, அவர்கள் வாழ்வு அத்தோடு முடிந்து போய் விட்டதா அல்லது பின்பு ஏதும் நடக்குமா? இந்தப் பிரபஞ்சத்திற்குத் தொடக்கம் உண்டா, முடிவு என்று ஒன்று உண்டா? இதெல்லாம் அடிப்படைக் கேள்விகள். இதற்கு விவிலியத்தையோ, குர்ஆனையோ, கீதையையோ சான்று காட்டிப் பதில் சொன்னால் அதற்கு இறையியல் என்று சொல்வதுண்டு. பகுத்தறிவு அளவில் சான்று வைத்து பதில் அளித்தால் அதை மெய்யியல் என்பர். இந்த இரண்டையும் பிரித்துக் காட்டலாம். ஆனால் அவை முரண்பாடானவை என்று சொல்ல முடியாது.

கருப்பு பிடிக்குமா காவி பிடிக்குமா என்று கேட்டார் ஒருவர். எனக்குக் கருப்பும் பிடிக்கும் காவியும் பிடிக்கும். இரண்டும் இயற்கையின் நிறங்கள், நமக்குக் கிடைத்த கொடைகள். இவற்றை இப்பொழுது தனியார் மயமாக்கிவிட்டு எது வேண்டும் என்றால் என்ன சொல்வது. அதுபோல்தான் நம்பிக்கையும் பகுத்தறிவும்.

நம்பிக்கை இன்றி பகுத்தறிவாளர்களும் வாழ முடியாது. பகுத்தறிவின்றி நம்பிக்கை வாதிகளும் தங்கள் நம்பிக்கையை

விளக்கமுடியாது. ஆனால் எங்கு பகுத்தறிவு முடிகிறது, எங்கு நம்பிக்கை தொடங்குகின்றது என்பதைக் கூறுதல் கடினம். அந்த எல்லைக் கோட்டை தீர்மானிப்பது சுலபமில்லை. ஆதி சங்கரரும் தாமஸ் அக்குவினாவும் பக்கம் பக்கமாக அதுபற்றி எழுதியுள்ளார்கள்.

நம்பிக்கையும் பகுத்தறிவும் ஒன்றுக்கொன்று நிறைவு செய்கிறது. நம்பிக்கை இல்லாமல் பகுத்தறிவு மட்டும் குணமளிக்காது, மீட்பு கொடுக்காது, முழுமை தராது. பகுத்தறிவு இல்லாமல் நம்பிக்கை மட்டும் செயல் பட்டால் மனிதத்துவம் போய்விடும், மனிதாபிமானமும் மறைந்து விடலாம். மனிதம் இல்லாத விண்ணக விளக்க உரை (heavenly metaphysics) நமக்குத் தேவையில்லை. அர்த்தமுள்ள வாழ்வை மேற்கொள்ள இரண்டும் வேண்டும்.

**கருத்தளவில் தெளிவு வேண்டும்:**

கருத்துத் தெளிவு இல்லை என்றால் குழப்பத்திற்கு இட்டுச்செல்லும். இப்பொழுது தமிழ் ஊடகங்களில் திருக்குறளில் பதிவான ஒரு பாடலுக்குப் பல விளக்கங்கள் கொடுக்கின்றனர். அது ஒருவரை ஒருவர் அவமதித்து, ஏன், கொச்சைப் படுத்தியும் வருகிறது. இது தமிழுக்கும், தமிழ்ப் பண்பாட்டுக்கும், தமிழ் மக்களுக்கும் பெருமை தருவதாகச் சொல்ல முடியாது. காரணம், இது கருத்துத் தெளிவில்லாத நிலை.

“பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்” என்பது குறள் கூறும் கோட்பாடு. இங்குச் சர்ச்சைக்கு உள்ளானது ‘சமத்துவம்’ என்ற கருத்துக் கோட்பாடு. சமத்துவம் என்பதற்கு நம்பிக்கை அடிப்படையில் விளக்கம் கொடுக்கலாம். அல்லது பகுத்தறிவு வழியாகவும் விளக்கம் தரலாம். இரண்டுக்கும் முரண்பாடு இல்லை.

கிறித்துவ மரபில் வந்தவர்கள் விவிலியத்தைச் சான்று காட்டிச் சமத்துவத்தை ஏற்றுக் கொள்வார்கள். மனிதன் கடவுளின் சாயலால் படைக்கப்பட்டவன் என்பது விவிலிய வாக்கு. அதன் பார்வையில் மனிதனின் தனித்துவமும் மகத்துவமும் அடங்கி உள்ளது. இந்த நம்பிக்கை கொண்டவர்களுக்கு மனிதர்கள் சமத்துவம் பெற்றவர்கள்.

மற்றவர்கள் இதை ஏற்றுக் கொள்ளாமல் இருக்கலாம். பரவாயில்லை. சமய சாயம் பூசாமல் பேசலாம். குறள் சமயம் சாரா நூல். அதனால் வேறு விளக்கம் கொடுக்க வேண்டும். பகுத்தறிவின் பார்வையில், மெய்யியல் கண்ணோட்டத்தில் பார்க்கலாம்.

மெய்யியல் வரலாற்றில் ’பெர்சன’ (person) என்ற கருத்து உண்டு. அதைத் தெளிவுபடுத்த வேண்டும். அதாவது பகுத்தறிவும் சுதந்திர உள்ளமும் (intelligence and free will)

இயல்பாகக் கொண்ட தனிப்பட்ட ஒன்றை (substance), மனிதரை person என்று சொல்வது. Person and personality are different. இவை இரண்டையும் குழப்பி விடக்கூடாது. “பெர்சனாலிட்டி” என்றால் தனி ஒரு மனிதனின் தனித்துவம்; ஒருவரின் ’டெம்பரமென்ட்’, ’கேரக்டர்’ பற்றி பேசுவது. ‘பெர்சன’ என்பது இதற்கும் அடிப்படையாக உள்ளது.

பெர்சன் என்பதை முக்கியமான மூன்று அம்சங்களை அடையாளமாக வைத்து விளக்கம் கூறலாம்.
ஒன்று: தனித்துவம் - “யுனீக்” - இதை டியூப்ளிகேட் பண்ண முடியாது. ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு தனித்துவம் உண்டு. அதை “க்ளோனிங்” செய்ய முடியாது.

இரண்டு: பகிர்ந்து கொள்ள முடியாதது: - incommunicable – அணுவைப் போல இதை உடைக்க முடியாது, கரைக்க முடியாது, மற்றொன்று இதை விழுங்க முடியாது. அதனால்தான் நெருங்கிய நண்பர்களைக்கூட நம்மால் முழுதும் புரிந்து கொள்ள முடிவதில்லை.

மூன்று: subsistence – to be on one’s own. தானாகவே இருக்கிற தன்மை கொண்ட நிலை. பகுத்தறிவு உள்ள மனிதனின் இயல்பு இங்கே மையம் கொண்டுள்ளது.

“நான்” என்பதையும் கூட இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

ஒன்று: மற்றவர் பார்வைக்கு உட்பட்டது. என்னுடைய செயல்களின் வழியாக, நான் என் உணர்வுகளை வெளிப்படுத்தும் முறையில், எனது மனப்போக்கின் வழியாக மற்றவர் என்னைப் பார்க்க முடியும். இது உயிர் நிலையின் மையம். நம் சொந்தப் பொறுப்புணர்வுக்கும் மையம்.

மற்றொன்று: பார்வைக்கு அப்பாற்பட்டது. அடிப்படையில் பகிர்ந்து கொள்ள முடியாதது. இந்த மையத்தைத்தான் "அண்டலாஜிக்கல் பீயிங்" என்று சொல்கிறோம்.

நாய்க்குத் தனிப்பட்ட இயல்பு உண்டு. ஆனால் அதை ஒரு "பெர்சன்" என்று சொல்ல முடியாது. அது பகுத்தறிவும் சுதந்திர உள்ளம் கொண்ட பொருட்கூறு அல்ல.

2000 ஆண்டுகளுக்குப் பின்னும் திருக்குறளைப் பற்றிப் பல விமர்சனங்கள் நடக்கின்றன. அது ஒரு தொகுக்கப்பட்ட நூல். பல் வேறு பழமொழிகளை, நீதிச் சொல்லாடல்களைத் தொகுத்துத் தரப்பட்டுள்ளது என்பர். இது சில ஐரோப்பிய அறிஞர்களின் கருத்து.

விவாதத்திற்காக இந்தக் கருத்தை நாம் ஏற்றுக் கொண்டாலும் கூட, இதைத் தொகுத்தவர் ஒரு குறிப்பிட்ட கண்ணோட்டத்தோடு மூன்று பகுதியாகப்பிரித்து, 133 அதிகாரங்களாக அமைத்து ஒரு நூலாக வடிவம்

கொடுத்திருக்கிறார். அவர் ஒரு கோட்பாட்டின் அடிப்படையில் செய்திருக்க வேண்டும். அப்பொழுது உள்ள சமுகச் சூழ்நிலைக்குப் பதில் சொல்லும் குறிக்கோளோடு செய்திருக்க வேண்டும்.

எவருமே குறிக்கோள் இல்லாமல் ஒரு வேலையைத் தொடங்குவதில்லை. ஒரு எழுத்தாளன் அல்லது வணிகன் திட்டம் ஏதும் இல்லாமல் தன் வேலையைத் தொடங்க மாட்டான். பிரபாகரன் என்ற மீமாம்ச சிந்தனையாளர் (ஏழாம் நூற்றாண்டு) கூறிய வாக்கை மேல்நாட்டு இன்டாலஜிஸ்டுகள் அடிக்கடி சுட்டிக்காட்டி இந்திய மரபின் அடையாளமாகக் கூறுவார்கள். "ஒரு பயனைச் சிந்தித்துத் தெளிவாக குறி வைக்காமல் ஒரு முட்டாள் கூட ஒரு வேலையைத் தொடங்க மாட்டான் என்பது. "பிரயோஜனம் அநுத்திஷ்ய ந மந்தோ'பி ப்ரவர்த்ததே," என்பது மீமாம்சாவின் (*slokavārtika*) சொல்லாடல்.

வள்ளுவர் அப்பொழுது இருந்த சமூகத்தில் ஆதிக்கம் செலுத்திய கோட்பாட்டுக்கு மாற்றுக் கண்ணோட்டம் தருகிறார். அவருக்கு உதவிய மூலநூல்கள் என்னவென்று தெரியவில்லை. ஆனால் குறளின் கண்ணோட்டம் வைதிக கோட்பாட்டுக்கு முரணானது என்பது தெளிவு. அதில் மாற்றுக் கருத்து இல்லை.

## 16. வள்ளுவமும் விஞ்ஞானமும்

— *வெ.தோதாத்திரி*

**ஒப்புரவு அறிதல்:**

ஒப்புரவு என்பது கைம்மாறு கருதாத உதவி. பிரதி உபகாரம் எதிர்பார்த்துச் செய்வது ஒப்புரவு ஆகாது. மற்றவர்களுக்கு நம்மால் இயன்ற உதவிகளைச் செய்வது, பணத்தால் உதவுவது, உடலால் உதவுவது இதற்குப் பிரதி பயனை எதிர்பாராமல் செய்ய வேண்டும். இதற்கு உதாரணமாக வள்ளுவர் நான்கு திருக்குறள்களைக் காட்டியுள்ளார்.

*கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு*
*என் ஆற்றும் கொல்லோ உலகு (211)*

இந்த உலகத்தார் தமக்கு உதவும் மழைக்கு என்ன கைம்மாறு செய்கின்றனர்? மழை போன்றவர் செய்யும் உதவிகளும் கைம்மாறு வேண்டாதவை.

மழை பொழியும் மேகத்திற்கு நாம் என்ன பிரதி பலன் செய்கின்றோம்? ஒன்றுமில்லை. மேகமும் நம்முடைய பிரதி பலனை எதிர்பார்த்து மழை பொழிவதில்லை. மழையைப் பொழிவது மேகத்தின் குணம், இயல்பு. அதே போன்று பிரதி பலனை எதிர்பாராமல் பிறர்க்கு உதவி செய்ய வேண்டும்.

*ஊருணி நீர் நிறைந்தற்றே உலகவாம்*
*பேரறிவாளன் திரு. (215)*

ஊரார் நீருண்ணும் குளம் நீரால் நிறைந்தது போன்றது பேரறிவாளனிடம் உள்ள செல்வம். ஊரார் ஊருணியில் நீரை எடுத்துப் பலவகையிலும் பயன்படுத்துகிறார்கள். அந்த ஊருணிக்கு அவர்கள் எந்தவித கைம்மாறும் செய்வதில்லை. அவ்வாறே பேரறிவாளனிடம் உள்ள செல்வம் ஊராருக்குப் பயன்படும். எத்தகைய கைம்மாறும் பேரறிவாளன் எதிர் பார்ப்பதில்லை.

*பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்*
*நயன் உடையான் கண்படின் (216)*

ஊரின் நடுவே பயன் மிகுந்த மாம்பழங்கள் பழுத்தாற் போன்றது நற்பண்புடையானிடன் செல்வம் சேர்தல். ஊரின் நடுவே பயன்மிகுந்த மா பலா வாழை போன்ற மரங்கள் கனிகளுடன் இருந்தால் அவற்றை ஊரார் உண்டு களிப்பர். அதற்காக இம்மரங்களுக்கு எவ்வித கைம்மாறும் செய்வது கிடையாது.

*மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்*
*பெருந்தகையான் கண்படின் (217)*

அனைத்து உறுப்புகளும் மருந்தாகிப் பயன்படத்தவறாத மரம் போன்றது பெருந்தகைமை உடையவனிடம் செல்வம் சேர்தல். சில மரங்களின் காய்கள், இலைகள், பழங்கள், பட்டை மற்றும் வேர் அனைத்தும் மருந்தாகப் பயன்படும். அவற்றைத்தக்க முறையில் உபயோகித்து மக்கள்

பயனடைகிறார்கள். இருந்தாலும் அவர்கள் அந்த மரத்துக்கு எந்த வித உதவியோ கைம்மாறோ செய்வதில்லை. அதைப் போலவே பெருந்தகைமையுடையான் தன் செல்வத்தைப் பிறருக்காகவும் பயன்படுத்துவான். இதற்கு அவன் பிரதி பலனை எதிர்பார்ப்பதில்லை.



கைம்மாறு கருதாமல் செய்யும் உதவி ஒப்புரவு என்று பார்த்தோம். அப்படி உதவி செய்வதால் விளையும் நன்மைகள் யாதென்று பார்த்தோம். உதவி செய்பவர்கள் அந்தப் பலனை எதிர்பார்ப்பதில்லை என்றாலும் அந்த நன்மைகள் தாமாகவே உதவி செய்பவர்களுக்கு வந்து சேரும். விஞ்ஞானம் அவ்வாறே கூறுகிறது. அது எங்ஙனம் என்பதைப் பார்ப்போம்.

தன்னையும் தன் குடும்பத்தைப் பற்றி மட்டுமே எண்ணாமல் பிறரைப் பற்றி எண்ணும் போது நமது மனவழுத்தம் (stress) குறைகிறது. இதனால் நமது ஆரோக்கியம் கூடுகிறது. மற்றவர்களுக்கு உதவும் போது தன்னைப்பற்றிய சிந்தனை (self centeredness) போய்விடுகிறது. இதனால் நமக்கு ஏற்படும் கவலைகளும் போய்விடுகின்றன. மற்றவர்களுக்கு உதவும் போது மூளையில் நம்மை அமைதிப்படுத்தும் endorphins, oxytocin போன்ற hormones உற்பத்தியாகி நமக்கு மன அமைதியையும் மகிழ்ச்சியையும் கொடுக்கின்றன. அதனால்தான் திரு.இரவீந்திரநாத் தாகூர் அவர்களும் 'service is joy ' அதாவது "தொண்டு மகிழ்ச்சி" என்றார். மற்றவர்களுக்குச் சேவை செய்யும் போது நமது கோபம், குரோதம் போன்ற குணங்கள் மறைந்து விடுகின்றன. இதனாலும் நமது ஆரோக்கியம் கூடுகிறது.

எதிர்மறை எண்ணங்களான, கோபம், பழி வாங்குதல் போன்ற சிந்தனைகள் நம்முடைய ஆரோக்கியத்தைக் கெடுக்கின்றன.. அந்த உணர்ச்சிகள் வரும் போது நமது நெஞ்சு படபடக்கின்றது.. நமது இரத்த அழுத்தம் கூடுகிறது. நமது ஜீரணம் தடைப்படுகிறது. இவற்றினால் நமது ஆரோக்கியம் கெடுகிறது. இந்த உணர்ச்சிகள் எல்லாம் நாம் மற்றவர்களுக்குச் சேவை செய்யும் போது மறைந்துவிடுகின்றன. இதனால் நமது ஆரோக்கியம் பேணப்படுகிறது.

# 17. தாமிரமும் தமிழரும்

— முனைவர் வேட்டவலை கைலாசம்

*தாமிரம், இயற்கையில் ஒரு தனி உலோகமாகக் கிடைக்கிறது. உலோக வகையைச் சார்ந்த இத்தனிமத்தை "செப்பு", "செம்பு" என்றும் கூறுவர். இதன் மூலக்கூறு வாய்பாடு "CU" என்பதாகும். லத்தீன் சொல்லான "Cuprum" என்பதனை "CU" என்கின்றனர். ஆங்கிலத்தில் "Copper" என்று அழைக்கப்படுகிறது. இதன் அணு எண் 29. மனிதன் முதலில் பயன்படுத்திய இவ் உலோகம் மிகுந்த பயன்பாடு உடையது. தமிழர்கள் இதன் பயன்பாட்டை உணர்ந்து ஆதிகாலம் தொட்டே பயன்படுத்தி வருகின்றனர்.*

***தமிழ் நிகண்டுகள்:***

*சொற்களுக்குப் பொருள் தரும் அகராதிகளாகிய தமிழ் நிகண்டுகள், தாமிரம் பற்றிக் கூறுகின்றன. திவாகரம் என்ற தமிழ் நிகண்டு ஐவகையுலோகத்தைப் பற்றிக் கூறும்போது,*

*" பொன்னும், வெள்ளியும், செம்பும், இரும்பும் அன்ன ஈயமும், ஐவகை யுலோகம்"*

*என்று உரைக்கிறது.*

*செம்பு பற்றிக் கூறும்போது*

*"சீருமை, தாம்பிரம், கற்பம், செம்பே" - திவாகரம் - 1042*

*எனக்கூறும்.*

பிங்கலம் என்ற நிகண்டு,

"தாமிர மெருவை வடுவே கற்பம்

உதும்பரஞ் சீருள் சீருணஞ் செம்பே" - பிங்க லம் - 1235

எனச் சுட்டுகிறது.

நாம தீப நிகண்டு

"இரவி யுதும் பரமி ராசிவடுக் கற்ப

பெருமவை செம்பு தாம்பிரம்.... - நாம தீப நிகண்டு - 37

இரவி, உதும்பரம், இராசி, வடு, கற்பம், எருவை, செம்பு, தாமிரம், ஆகியன செம்பின் பெயர்களாய்க் கையாளப்படுகின்றன.

நாநார்த்த தீபிகை என்ற தமிழ் நிகண்டு தாமிரத்திற்கு, "சிவப்பு", மற்றும் "செம்பு" என இருபொருள் தருகின்றது. - (நாநார்த்த தீபிகை - 575)

அபிதான மணிமாலை செம்பு என்பதற்கு,

"செம்பு, எருவை, தாம்மிரம், சீருணம், சீருள்

உதும்பரம், வடுவொடு, கற்பமுமிதற்கே" (அபிதான மணிமாலை - 1452)

எனப் பொருள் தரும்.

இவ்வாறு தமிழ் நிகண்டுகள் தாமிரம் என்ற சொல்லுக்கான பல பொருட்களைத் தருகின்றன. இதனால் தமிழர் வாழ்வில் தாமிரம் சிறப்பிடம் பெற்றுத் திகழ்வதை நாம் அறிய முடிகிறது.

சிந்துச்சமவெளி நாகரிகத்தில் களிமண், தாமிரம் மற்றும் வெண்கலத்தினால் உருவான பாத்திரங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இலக்கியங்களில் தமிழர்கள் அன்றாட வாழ்வில் பயன்படுத்திய உலக்கை, திருகை போன்றவை பதிவு செய்யப்பட்டுள்ளன. பாத்திரங்கள் பலவற்றைப் பயன்படுத்திய குறிப்புகளும் உள்ளன. செப்புப் பட்டயங்கள், எழுத்தூசி, ஓலைச்சுவடிகள் சட்டங்கள், சிற்பங்கள் போன்ற பலவகைப் பொருட்களிலும் தாமிரத்தைப் பயன்படுத்தி வந்துள்ளனர் என்று அறியப்படுகிறது.

**பஞ்ச சபைகள்:**

பஞ்சலோகம், பஞ்சவர்ணம், ஐம்பொன் என்பன ஐந்து என்ற எண்ணிக்கையைக் குறிப்பன. பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் சேர்ந்ததைப் பஞ்சலோகம் என்பர். கருப்பு, சிவப்பு, பச்சை, வெள்ளை , மஞ்சள் நிறங்களில் கூடிநிற்பது பஞ்சவர்ணம்.

சிவபெருமான் திருநடனம் ஆடிய இடங்களைப் பஞ்சசபை என்பர்.

"குடதிசை யதனில் மருவுகு ற்றாலம்
கோதறு சித்திர சபையாம்
குற்றமில் குணக்கின் பழையனூர் மன்றம்,
குலநவ ரத்தினமன் றென்பர்;

அடல்விடைப் பாகன் நெல்லையம் பதியில்
அம்பலம் தாமிர சபையாம்;
ஆலவாய் மதுரை வெள்ளியம் பலமாம்
அணித்தில்லைச் செம்பொ னம்பலமே"
(இரட்டையர் தில்லைக் கலம்பம்)



தாமிரபசபை - செப்பறை



தாமிரபசபை - திருநெல்வேலி

இரட்டையர் தில்லைக் கலம்பகம் கூறும் “தாமிரசபை” நம் தாமிரவருணிநதிக் கரையில் அமைந்து தாமிரவருணிக்குப் பெருமை சேர்க்கிறது. சிவபெருமானே தனக்கான திருநடனத்திற்குத் தாமிரத்தால் ஆன சபையைத் தேர்ந்தெடுத்துள்ளான்.

**தமிழ் மருத்துவத்தில் தாமிரம்:**

தமிழர்களின் மருத்துவமான சித்தமருத்துவத்தில் தாமிரம் பல மருந்துகள் தயாரிக்கப் பயன்படுத்தப்படுகிறது. "தாமிரபஸ்பம்" என்பது ஒன்று; இதனைத் "தாம்பூர பற்பம்" என்பர். ஒரு செம்பு நாணயத்தைப் பழுக்கக் காய்ச்சிப் புளியிலைச் சாற்றில் பலதடவை துவைத்துப் பிறகு மூசையிலிட்டு இரண்டு தடவை அவ்வுருக்கு முகத்தில் கந்தகத்தைச் சேர்த்து உருக்கவும், பிறகு அதை எடுத்து நொறுங்கப்பொடி செய்து எலுமிச்சை சாற்றில் சுத்தி செய்ய தாம்மிரம் வெளுத்துக் காணும். இதைப் புடமிடப் பற்பமாகும்.

இப்பற்பம் குட்டம் முதலிய சரும நோய்களுக்குக் கொடுக்க குணமாகும். அன்றியும் பல்வலி, மண்ணீரல் வீக்கம், ஈரல் வீக்கம், சூலைப் பிடிப்பு, வாதநோய் முதலிய நோய்களுக்கும் கொடுக்கலாம். ( டி.வி. சாம்பசிவம்பிள்ளை - தமிழ் - ஆங்கில (மருத்துவம்) அகராதி).

தங்கம், வெள்ளியைவிட செம்பு உயர்ந்தது என்கிறார் போகர். தங்கமும் வெள்ளியும் உடல் என்றால் அவற்றை முழுமையாக்கும் உயிராக செம்பைக் குறிப்பிடுகிறார். அதாவது சிறிதளவு செம்பு சேர்த்தால் மட்டுமே தங்கத்தையும் வெள்ளியையும் பயன்படுத்த முடியும்.

> "தாம்பரத்தாற் சோரிபித்தஞ் சந்நிவமூவைகபம்
> வீம்பார் பிலீகமந்தம் வெண்மேகம் - தேம்பழலை
> சூதகநோய் புன்கிரந்தி தோடசுவாசம் கிருமி
> தாதுநட்டம் கண்ணோய் போஞ்சாற்று"

என்பது தேரையார் வாக்கு.

இவ்வாறு நோய்கள் தீர்க்கும் மருந்தாக்கத்தில் தாமிரம் தனியிடம் பெற்றுள்ளது. பிற மருத்துவத்தாரும் தாமிரத்தைப் பயன்படுத்தி உயிர்காக்கின்றனர். அன்றாடவாழ்வில் தாமிரத்தின் பயன்பாடு எல்லையற்றது. தமிழர்கள், தாமிரத்தின் பயனை உணர்ந்து தமது வாழ்வியலோடு இணைத்துப் பயன்பெற்று வருகின்றனர்.

உலகின் பொருளாதாரத்தைத் தீர்மானிப்பதிலும் தாமிரத்திற்குத் தனியிடம் உண்டு. தாமிரவருணி நதிநீரின் அல்வாவைச் சுவைக்கும் நாம், தாமிரத்தின் பயன் உணர்வோம். தாமிரந்தி போற்றுவோம்.

**"தாமிரவருணித் தமிழ் வனம்"**

*ஆசிரியர்: முனைவர் வே. கட்டளை கைலாசம்*

*முதற்பதிப்பு: மல்லி பதிப்பகம், டிசம்பர்-2021*

*விலை: ரூ.50*

*நூலில் இருந்து .....*

## 18. வல்லினம் மிகும் இடங்களும் மிகா இடங்களும்

— நா.முத்துநிலவன்

பாட்டெழுதிப் பெயர் வாங்கும் புலவர்களும், குற்றம் கண்டுபிடித்தே பெயர் வாங்கும் புலவர்களும்!

"திருவிளையாடல்" எனும் புகழ்பெற்ற தமிழ்த் திரைப்படத்தில் வரும் ஓர் உரையாடல் மிகவும் புகழ்பெற்றது -"பாட்டெழுதிப் பெயர் வாங்கும் புலவர்களும் இருக்கிறார்கள், குற்றம் கண்டுபிடித்தே பெயர் வாங்கும் புலவர்களும் இருக்கிறார்கள்" இது, இன்றும் பொருத்தமாகவே உள்ளது!

பெரும்புலவர் சிலர், இன்றைய இளைஞர்களின் படைப்புகளைப் பார்த்து, தமிழைத் தப்பும் தவறுமாக எழுதுவதாக வருத்தப்படுகிறார்கள். அவர்கள் வருத்தம் ஒரு பக்கம் நியாயம் தான் என்றாலும், தமிழில் எழுத முயற்சி செய்வோரை, தட்டிக் கொடுத்து வளர்க்க வேண்டிய சூழலில்தான் நாம் வாழ்கிறோம் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். முயற்சி செய்வோரின் "கொழுந்து" முனையைக் கிள்ளிவிடாமல், செடியின் பழுத்த இலைகளைக் கிள்ளி அந்தச் செடிக்கே உரமாகப் போட வேண்டும்.

எழுதுவோரின் ஆர்வத்தைத் தூண்ட, அவர்தம் பிழையான தமிழைக் கவனமாகப் பார்த்து, ஆக்கவழியில் ஆலோசனை சொல்வதே அவர்தம் படைப்புத்திறனை வளர்க்கும் வழியாகுமே அல்லாமல், “க் ச் சரியா இல்லையே இவனெல்லாம் எதுக்கு எழுதுறான்?” என்று ஒரேயடியாகச் சொல்லி அவர்களை மனத்தளவில் ஒடுக்கிவிடுவது சரியல்லவே?

எழுத்துப் பிழையை விடவும் கருத்துப் பிழைதானே நமது கவனத்திற்கும் கண்டிப்புக்கும் திருத்துவதற்கும் உரியது? அதே திருவிளையாடல் புராணப்படத்தில் நக்கீரன் சொல்வதாக வரும் - "சொல்லில் பிழையில்லை, இருந்தாலும் மன்னித்து விடலாம், ஆனால் கருத்தில் பிழையிருக்கிறது, அதை ஒருக்காலும் ஒப்ப முடியாது! எனும் - உரையாடல் மிகவும் சரியானது. இந்த நக்கீரத்தனம்தான் இன்று தேவை!

“இந்த எழுத்தாளரின், எழுத்தில் பல இடங்களில் க் ச் இல்லையே! என்ன தமிழ் இது?" என்பது பொருத்தமல்ல என்பதோடு, அதைப் பற்றியே கவலைப்பட்டு, அவரிடம் நல்ல கருத்துகள் நல்ல சிந்தனைகள் வளராமல் செய்துவிடுவதை நாம் ஏற்க முடியாதல்லவா? தப்போ சரியோ நல்ல சிந்தனை தமிழில் எழுதப்பட வேண்டும், எழுத்துப் பிழைகளைச்

*சரிசெய்து கொள்ளலாம். முயற்சியே தடுக்கப்பட்டால் பயிற்சியே அற்றுப்போகுமே?*

*பன்னாட்டுப் பொருளாதாரம் ஏற்படுத்திவரும் பண்பாட்டுக் குழப்பம் எனும் பெரும் இருட்டில், தமிழ் எழுத முன்வரும் இளைஞர்களின் சிறு பொறியைத் தட்டிக் கொடுத்துத்தானே பெருநெருப்பாக்க வேண்டும்?*

*தமிழ்நாட்டின் மிகப் பெரும்பாலான நகரங்களில் இருக்கும் பெரிய கடைகள் மற்றும் "பேரங்காடி"(சூப்பர்-மார்க்கெட்-மால்) இல், வாங்குவதும் விற்பதும் தமிழர். விற்கும் பெரும்பாலான பொருள்களும் தமிழ்நாட்டுப் பொருளாகவே இருந்த போதும் விற்பனைச் சீட்டை மட்டும், சுத்தமான-கலப்படமற்றஆங்கிலத்தில்தானே தருகிறார்கள்? தமிழக உணவு விடுதி, கல்நெய்க்கடை (பெட்ரோல் பங்க்), தங்குமிடம், துணிக்கடை, நகைக்கடை, பெரும் வணிக - மையம் எனப் பெருகிக் கிடக்கும் பன்னாட்டுப் பொருளியல் பண்பாட்டின் ஆங்கிலத் திணிப்பை, நமது அரசுகள் "கண்டும் காணாமலும்" இருக்கின்றன. இதில் மத்திய அரசின் இந்தித் திணிப்புக் கொடுமை வேறு இஞ்சி தின்ற குரங்காக இளிக்கும் சமூகத்தில் நாம் எவரிடம் தமிழ் வளர்ச்சி பற்றிப் பேசுவது? நம் இளைஞர்கள்தானே பெரிய நம்பிக்கை? க் ச் போடும் குழப்பமே பல்லாயிரம் தமிழ்க் குழந்தைகளை அந்நியப்படுத்தி, ஃபிரெஞ்சு, ஜெர்மன், ஜப்பான் மொழிகளை*

விருப்பப் பாடமாக்கிவிடும் எதார்த்த நிலையிலிருந்து யோசித்தால் இந்த கசப்பான உண்மை தெரியும்.

திருச்சி மாநகரின் மத்தியப் பேருந்து நிலையம் அருகில் உள்ள பேரங்காடியில் "உளுத்தங் கஞ்சி குடிக்க விரும்பினால், முதலில் பணம் கட்டவேண்டும். (இதுதான் பன்னாட்டு பொருளியல் பண்பாடு / நம் ஊர்க் கடைகளில் சாப்பிட்ட பின் பணம் தரலாம், பெருமுதலாளி நம்மை நம்ப மாட்டார் என்பதன் அடையாளமே இந்த முன்பணம்!). பணம் கட்டிய பிறகு, "Uluthankanchi-Rs.15-00 என்ற ஆங்கிலச் சிட்டையைப் பெற்றுத் தந்தால்தான் உளுத்தங்கஞ்சியே குடிக்க முடியும் என்கிற போது, ஆங்கிலவழிக் கல்வி பெருகிய இந்த நாளில், இளைஞர்கள் மிகப் பெரும்பாலோர், இணையம், செல்பேசித் தொடர்புகள் அனைத்திலும் ஆங்கிலத்திலேயே புழங்கிவரும் சூழலில், தமிழில் எழுத ஆர்வத்துடன் முன்வரும் இளைஞர்களின் பெரிய குழப்பமே இந்த க் ச் பிரச்சினைதான். எனில், க், ச் விடுபடும் (சந்தி) பிழைகள் பற்றிய தமிழ்ச் சான்றோர் பார்வையில் மாற்றம் தேவை. மாறுவது மரபு, இல்லையேல் மாற்றுவது மரபு என்பதே சரியானது.

பொருள் மாறுபடும் இடங்களில் மட்டும் க், ச் எழுத்துகளில் உரிய எழுத்தைப் போட்டுக் கொள்ளலாம். தொல்காப்பியம், நன்னூல் இலக்கணம் காட்டும் எல்லா இடங்களிலும் போட

வேண்டியதில்லை "பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையினானே" என்று, நன்னூலார் தன் கடைசி நூற்பாவில் சொன்னதை இந்த இடத்தில் பொருத்திக் கொள்வதில் தவறில்லை என்பதே என் கருத்து.

உதாரணமாக - முருகனைக் கும்பிட்டு நிற்பவன், "வேலை கொடு" என வேண்டி நிற்கும்போது "வேலைக் கேட்கிறானா, வேலையைக் கேட்கிறானா?" என்ற குழப்பம் வர வேண்டியதில்லை. சொற்களின் தனிப் பொருளை விடவும் சூழ்நிலை தொனிப் பொருள்தான் முக்கியம் அல்லவா? அப்படிப் பார்க்கும் போது, க் வந்தால் ஒரு பொருள் (வேலைக்கொடு - உன்னிடம் இருக்கும் வேலைக்கொடு) க் வராவிட்டால் வேறொரு பொருள் (எனக்கு ஒரு வேலை கொடு) என இலக்கணத்தைச் சொல்லி அந்த ஏழையை அச்சுறுத்த வேண்டியதில்லை.

இது போல, ஒற்றெழுத்துகள் தேவையில்லாத இடங்களே அதிகம்.

உன்னைக் கேட்கவில்லை - உன்னை கேட்கவில்லை
எனக்குத் தெரியாது - எனக்கு தெரியாது
தஞ்சைப் பெரிய கோவில் - தஞ்சை பெரிய கோவில்
இவற்றில் எந்தப் பொருள் மாற்றமும் இல்லை. இரண்டாம் நான்காம் வேற்றுமை உருபுகள் (ஐ கு), மற்றும் அன்மொழித்

தொகை வரும் இடங்களில் வல்லின ஒற்று மிகும் என்பது இலக்கணம். எனினும் இவை இப்போது தேவையற்றுப் போயின. எளிதாகவும் இருக்கிறதல்லவா? (எனக்கு மகள் என்பதே சரி, எனது மகள் என்பது அஃறிணையைக் குறிக்கிறது என நாம் இலக்கணம் சொன்னாலும் எனது மகள்தானே வழக்கில் உள்ளது? அஃறிணையாக அப்பனே மகளைச் சொல்வதா? என்றா கேட்பது? இவை போலும் இடங்களைக் கண்டறிந்து புதிய இலக்கணம் செய்ய வேண்டும். உருபு மயக்கத்தை விட்டு விட்டு, எழுதிப் பழகும் இளைஞர்களுக்கு எளிமைப் படுத்தித்தர வேண்டியதும் அவசியம்.

நமது தமிழ் நாளிதழ்களின் தலைப்புச் செய்திகளில் தேவையான இடங்களில் மட்டும்தான் க் ச் ட் த் ப் ற் என்னும் (வல்லினம் மிகும்) ஒற்றெழுத்துகளைப் பயன்படுத்துகிறார்கள். அவர்களைத் தமிழ் எதிரியைப் போலப் பார்க்க வேண்டியதில்லை.

பின்வரும் தலைப்புச் செய்திகளைப் பாருங்களேன் –

பொங்கல் பரிசு தொகுப்பு வினியோகம் – தினமலர் – **04-01-2021**

கொரோனாவை கட்டுப்படுத்த – தினகரன் – **04-01-2021**

இந்திய நிறுவனங்களுக்கு பிரதமர் மோடி – தினத்தந்தி – **04-01-2021**

*7வயது சிறுமியை கொலைசெய்த — இந்து தமிழ் — 30-12-2020*
*வேளாண் சட்டங்களை திரும்பப் பெறு — தீக்கதிர் — 10-12-2020*
*மனைவியை கொலை செய்தவருக்கு — புதுகை வரலாறு — 10-12-2020*
*அரியலூர் பெரம்பலார் மாவட்ட தேர்தல் — முரசொலி — 01-01-2021*
*100 பணக்கார பெண்க ளில் — தினமணி — மகளிர் மணி-23-12-2020*

இச் செய்திகளில் க் ச் இல்லை , எனினும் பொருள் மாறுபடவில்லை. எனவே, "இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன் க ச த ப மிகும் விதவாதன மன்னே " (நன்னூல் -165) எனும் நூற்பா இதற்கான விதி விலக்கைத் தருவன பயன்படுத்திக் கொள்ளலாம்.

**ஊடகம் இல்லாமல் தமிழ் வளர்ச்சி இல்லை:**

நமது தமிழ்ச் சமூக ஊடகங்களின் பாராட்டுக்குரிய தமிழ் வளர்ச்சிப் பணிகளைக் காணும்போது, நாம் தொடர்ந்து ஆதரவு தருவது அவசியம். ஊடகம் இல்லாமல் தமிழ் வளர்ச்சி இல்லை. அதற்கான இலக்கிய இலக்கணக் கருத்து வளர்ச்சிக்காக முயற்சி செய்வோரை மறக்காமல் பாராட்ட வேண்டும். எனினும் சில தமிழ் இதழ்களில், தமிழ் எழுத்துப்

பிழைகள் மலிந்திருப்பதையும் மறுக்க முடியாது. தொடர்ப் பிழைகள், பிற மொழிச் சொற்களையே தலைப்புச் செய்தியில் தருவது, தமிங்கிலத்தில் தலைப்புச் செய்திகளைத் தருவது, தமிங்கிலத்திலேயே இதழ்ப் பெயர்கள் தொடர்வது பற்றிய விமரிசனம் தனி! அது பண்பாட்டு அடிப்படையிலான விமர்சனப் பகுதி! மொழி வளர்ச்சிக்குத் தடையான இலக்கணச் சிக்கலைப் பற்றிப் பேசுவதால், தொடர்புடைய கருத்துக்காகச் சொல்ல நேர்ந்தது.

தமிழ் இளைஞர்களில் மிகப்பெரும்பாலோர் "தமிங்கில" எழுத்தில் தகவல் தந்து - பெறுவதையும், திறன்பேசி, செல்பேசித் தொடர்புகளை (Contact) ஆங்கிலத்தில் வைத்திருப்பதையும் குறைசொல்ல முடியவில்லை. அரசு, பெற்றோர், கல்வித் திட்டங்களில் இவர்களுக்கு வழிகாட்ட வில்லையே! (தமிழாசிரியர் சிலர்கூட இப்படி இருப்பதுதான் நகைமுரண்!)

தொழில் நுட்பம் அறியாமை, தமிழின் மீதான அலட்சியம் இவை மட்டுமே காரணம் என, இதை மேம்போக்காகவும் சொல்லிவிட முடியாது.

தகவல் தொழில் நுட்பம் அறிந்தவர்கள் சிலர் தமிழில் எழுத ஆர்வம் இருந்தும், எந்த இடத்தில் க் வரும் எந்த இடத்தில் ச் வரும் என்பன போலும் குழப்பத்தில் இருப்பதும் முக்கியக்

காரணம். அதோடு வெளிநாடு வாழ் தமிழ்க் குழந்தைகள் ஆர்வத்தின் காரணமாகத் தமிழ் படிக்கத் தொடங்கும்போது, உயிர் எழுத்து, மெய்யெழுத்துக் கற்ற பிறகும் கூட இந்த ஒற்றெழுத்து (சந்தி) பிழை பற்றிய அச்சமே பெரிதும் தடையாக இருப்பதாக அங்கு வாழும் தமிழ்ப் பெற்றோர் நினைக்கிறார்கள். எனவே, இந்த வல்லினம் மிகும் இடம், மிகா இடம் பற்றிய பட்டியலைப் புதுப்பிக்க வேண்டும்.

கூகுளில் "வல்லினம் மிகும் இடம், மிகா இடம்" என்று தேடினால் பெரும் பட்டியலே கிடைக்கும், தமிழறிஞர் பலரும் நமது இலக்கண நூல்களிலிருந்தும் எடுத்துத் தந்து நூல்களை வெளியிட்டு வருகிறார்கள்.

எனினும் பொருள் மாறுகிறதா என்பதற்கு முக்கியத்துவம் தர வேண்டும் என்பதே எனது கருத்து.

இல்லையெனில் சந்தி (ஒற்று) பிழை பற்றிய கவலை வேண்டாம் என்பதைப் புதிய இலக்கணமாக ஏற்க வேண்டும். இரண்டு சொற்கள் சந்திக்கும் இடத்தில் தோன்றும் எழுத்து என்பதால் சந்திப்பிழை என்கிறோம். இதற்கும் ஒரு பட்டியல் போட வேண்டும். அந்த வேலை தனி, அதற்கொரு குழு பணியாற்ற வேண்டும்!

கணினியிலும் செல்பேசியிலும் தமிழ் எழுத்துருக்களுக்கான மென்பொருள் பற்றிய அறியாமை ஒரு பக்கம் என்றால், சோம்பேறித்தனம் வேறு அதனோடு சேர்ந்து கொள்கிறது. இது பற்றி நம் நண்பர், கணினித் தமிழறிஞர் திரு நீச்சல்காரன் (எ) ராசாராம் நல்லதொரு முயற்சி எடுத்து "எழுத்துப் பிழை திருத்தி" (வாணி, நாவி) எனும் மென்பொருள்களை உருவாக்கியிருக்கிறார். (பார்க்க - http://vaani.neechalkaran.com/) எனினும் சந்திப்பிழை திருத்தி தரும் தெளிவைவிடவும் சந்தி இலக்கணம் பற்றிய பார்வை மாற்றமே கூடுதல் தெளிவைத் தரும் என்பதே எனது தெளிவு.

கணினி அறிவியல் படிக்கும் பள்ளி, கல்லூரிப் பிள்ளைகளுக்குக் கூட, கணினித் தமிழ் நம் பாடத்திட்டத்தில் இல்லை , தமிழ் மென்பொருள், தமிழ் எழுத்துருப் பயிற்சி ஏதும் தரப்படுவதில்லை என்பது பெருங்கேடு! இருந்திருந்தால் இந்த இலக்கணக் குழப்பம் தீர ஒரு முயற்சியாவது எழுந்திருக்கும். தமிழறிஞரும் கல்வி அலுவலருமான முனைவர் நா.அருள்முருகன் முன்முயற்சியில் புதுக்கோட்டையில் தொடங்கப்பட்டு க செயல்பட்டு வரும் "கணினித் தமிழ்ச் சங்கம்", இதற்கான பயிற்சிகளை ஆண்டு தோறும் கொடுத்து வருகிறது.

தமிழ்நாடு அரசின் தமிழ் இணையக் கல்விக் கழகம், மதுரை உலகத் தமிழ்ச்சங்கம், மற்றும் தேனித் தமிழ்ச்சங்கம்

போலும் சில அமைப்புகளும், தஞ்சை முனைவர் பா.ஜம்புலிங்கம், திண்டுக்கல் தனபாலன், காரைக்குடி முனைவர் மு.பழனியப்பன், சென்னை என்னாரெசுப் பெரியார், முதலான தமிழ்க்கணினி அறிஞர்களும், ஏராளமான தமிழ் வலைப்பதிவர்களும் இதனைச் செய்து வருகின்றனர் எனினும் பள்ளி, கல்லூரிப் பாடத்திட்டத்திலேயே கணினித் தமிழ் எனும் பிரிவைச் சேர்ப்பதுதான் இலக்கண அச்சமற்ற கணினித் தமிழ் வளர்ச்சிக்கு நல்ல பலனைத் தரும்.

ஆங்கிலம் எனும் ஒரு மொழியே நம் நாட்டுக்குள் வராத காலத்தில் கட்டப்பட்ட தஞ்சைப் பெரிய கோவிலில் பொறியியல் அறிவு இல்லையா? எந்திரப் பொறியியல் உள்ளிட்ட (BE-EEE, ECE, CIVIL, CSC) பாடம் அனைத்தும் ஆங்கிலத்திலேயே உள்ளன. மொழிப்பாடமும் உயர்கல்வியில் இல்லை ! இதோடு, மருத்துவம் படிக்கும் பிள்ளைகள் மருந்துக்கும் கூட தமிழ் படிக்க வேண்டியதில்லை என்பது, தமிழையும் தமிழரையும் அழிக்கும் செயல் அல்லவா?

இதுபற்றியெல்லாம் முடிவெடுக்க, அரசியல் துணிச்சல் மிக்க அரசு வேண்டும். மொழி-இலக்கண எளிமைக்கான பணிகள் சமூக அரசியல் பொருளியலுடன் தொடர்புடையது. "மௌண்ட் ரோடு" அண்ணா சாலை ஆனபிறகும் துக்ளக்

இதழ் பல்லாண்டுகளாக "மௌண்ட் ரோடு" என்றே தனது முகவரியில் எழுதி வந்தது. தந்தை பெரியார் தந்த தமிழ் எழுத்துச் சீர்திருத்தத்தை எம்.ஜி.ஆர். அரசாணை வழி நடைமுறைப் படுத்தியபோதும், பத்தாண்டுக்கும் மேலாக பழைய எழுத்துகளை தமிழ்த்திரை உலகம் விடவில்லை என்பதையும் மறந்து விட முடியாது! தமிழ் வளர்ச்சிக்கான அடிப்படைப் பணிகளை அரசுதான் செய்ய முடியும். இதைப் புரிந்து மக்களும் செயல்பட வேண்டும். தும்பை விட்டு வாலைப் பிடிக்க வேண்டாமல்லவா? தும்பைச் சரியாகப் பிடியுங்கள் தமிழர்களே!!




**"இலக்கணம் இனிது"**

*ஆசிரியர்: நா.முத்துநிலவன்*

*பாரதி புத்தகாலயம், முதல் பதிப்பு, ஜனவரி 2021*

*நூலில் இருந்து .....*

## 19. இலக்கியங்களில் பெண்ணிய அடக்குமுறை குறித்த பதிவுகள்

— முனைவர் பா.சத்யா தேவி

உடல், அரசியல் இரண்டும் இரு வேறுபட்ட தளங்கள் உடல் தோன்றியபோது அரசியல் தோன்றவில்லை. ஆனால் அரசியல் உடலை முன்னிறுத்தித் தோன்றியது எனலாம். அரசியல் என்பது என்ன? அதிகாரத்தை நிலை நிறுத்துதலை அல்லது செயல்படுத்துதலை அரசியல் எனக் கூறலாம். ஆனால் இது மட்டும் தான் அரசியலா என்றால் இல்லை. அதற்குள் பல்வேறு பட்டுணர்வுகள் அல்லது கருத்துகள் நிலவுகின்றன. அதிகாரம் செய்தலும் அரசியல் அந்த அதிகாரத்திற்கு எதிராகக் குரல் எழுப்புவதும் அரசியல்.

உடல் அரசியல் எனில் எதைக் கூறலாம்? எந்த வரையறைக்குள் அதை நிலைப்படுத்துவது என்ற பல சிந்தனைகள் உள்ளன. மனித உயிர் தனக்கான வாழ்வை வாழவும் கொண்டாடவும் முக்கிய கருவியாக இருப்பது உடல். அந்த உடல் தனிமனித நனவிலி மற்றும் விருப்பம் சார்ந்து மட்டும் இயங்கக்கூடியதா எனக் கேட்டால் இல்லை. அவ்வுடல் சமூகம் வரையறுத்த பண்பாடு அதிகாரம் அனைத்திற்கும் உட்பட்டு இருக்கக் கூடியதாகும். உடலின் இயக்கம் மனம் மற்றும் அறிவு சார்ந்து இயங்கக் கூடியது. ஒரு தனி மனிதனை

எவ்வாறு சமூக மற்றும் பொதுவெளியில் ஒரு கட்டுக்குள் இயக்க இயலுகிறது, என்ற கேள்விக்கு அரசு அதிகாரம் அல்லது சமூக பண்பாடு எனப் பதிலுரைக்கலாம்.

சமூகம், கலாச்சாரம், மதம், இனம், அரசு போன்ற அனைத்தும் அதிகாரத்தின் கருத்தியலை மட்டுமே உள்வாங்கி இயங்கக்கூடியதாகும் ஆகும். எனவே மனித உயிரும் உடலும் ஒரு அதிகாரத்தின் பாற்பட்டே இயங்க நேர்கிறது. இந்த அதிகாரம் யார் கையில் உள்ளது; அரசின் கையில் அரசு புரியக்கூடிய அரசியலில். எனவே தினம் தினம் மனிதர்கள் அரசியலைக் கடக்காமல் அல்லது அரசியல் இன்றி இயங்க இயலாது. முன்பே கூறியது போல அதிகாரம் செலுத்தக் கூடிய அரசியல் என ஒன்று இருந்தால் அதற்கு எதிராகக் குரல் கொடுப்பதும் செயல்கள் புரிவதும் மற்றொரு வகையான அரசியல்.

மனித உடல் மீது நிகழும் வன்முறை என்பது மிகப்பெரிய அத்துமீறல் ஆகும். அந்த வன்முறைக்கு எதிராகக் குரல் எழுப்புவது உடலரசியல் ஆகும். "அடி உதவுவது போல அண்ணன் தம்பி உதவ மாட்டான்" என்ற சொல்லாடல் நமது சமூகத்தில் பரவலாக இயங்கக்கூடியது. இதன்வழி அறிவது மனித உடலை வன்முறை எனும் அத்துமீறல் வழி கட்டுக்குள் கொண்டு வருதல் காலங்காலமாக நிகழக் கூடியது என்பதாகும்.

மனித உடலின் மீது நிகழும் வன்முறையானது அனைவருக்கும் ஒன்றுபோலவே உள்ளதா எனில் இல்லை ஆண் உடலில் நிகழ்தலும் பெண் உடலில் நிகழ்தலும் பல்வேறு மாற்றப்பாடுகள் உடையது. அதிலும் உட்பிரிவுகள் பல உள்ளன. பொதுவெளி, நிர்வாகம், அலுவல், குடும்பம் எனும் பல வழிகளில் பல்வேறு வகையாக நிகழும் ஒவ்வொரு மனித உயிரும் ஒவ்வொரு மாதிரியான அத்துமீறல்களை எதிர்கொள்ள நேரிடும்.

அத்துமீறல்களைப் பேசுதல் மட்டும்தான் உடலரசியலா? நிச்சயமாக இல்லை. உடலின் உழைப்பை, வலியை, வேட்கையை, கொண்டாட்டத்தைப் பேசுதலும் உடலரசியல் தான். ஆனால் இத்தகைய உடல் அரசியல் பாலின வகையில் நிச்சயமாக மாறும் தன்மையுடையது. சான்றாக ஜவுளிக்கடையில் வேலை செய்யும் இருபாலினத்தோரில் ஆணுக்குச் சற்று அதிகமாகவும் பெண்ணுக்குச் சற்று குறைவாகவும் ஊதியம் வழங்குவர். ஆனால் வேலைப்பளுவும் வேலை நேரமும் மாறுபடுவதில்லை. இந்த பெண்கள் தங்களது உழைப்பு சுரண்டலைப் பேசுகையில் அதில் வெளிப்படுவது உடலரசியல். திருப்பூரில் சிவகாசியில் தொழிற்சாலைகளில் வேலை செய்யும் பெண்களும் மேற்கூறிய உடல் அரசியலில் பேசப்பட வேண்டியவர்கள் தான். இத்தகைய உழைப்புச் சுரண்டல் ஆணுக்கு நிகழும்

போது அங்குக் கேள்வி கேட்கப்படும் அல்லது செயல்படும் உடலரசியல் வேறுவிதமானது,

மண்ணில் உழைப்பா ரெல்லாம் வரியராம்
உரிமை கேட்டால் அவர் மீது அம்பு பாய்ச்சும்
புலையர் செல்வாராம்
இதை பகலெல்லாம் தம் கண் மீது கண்டு கண்டு
அந்திக்கு பின் விண்மீனாய் கொப்பளித்த
விரிவானம் பாராய் தம்பி

என்ற பாவேந்தர் பாரதிதாசனின் பாடலில் வெளிப்படுவதும் உடலரசியல். உரிமையைக் கேட்கும் உரிமை கூட இல்லாது இருந்த நிலையும் கேட்க நேரிடும் போது உடல் துன்புறுத்தப்படுவதும்; உடல் வலியின் வழி உழைக்கும் வர்க்கத்தின் உழைப்பைச் சுரண்டுவதும் தெளிவாக வெளிப்படுகிறது. இது அதிகாரத்திற்கு எதிரான உடலரசியல். மனித உழைப்பைச்சுரண்ட உடலைக் கட்டுக்குள் கொண்டு வரவேண்டும் எவ்வாரெனில் தொடர் வலியைக்கொடுத்து ஒரு மிருகத்தைப் பழக்கப்படுத்துவது போன்று மனித உடலை வலி கொடுத்து அத்துமீறி கட்டுக்குள் வைத்துக் கொள்வது அதிகாரம் செலுத்தும் உடலரசியல். இவ்விரண்டையும் இப்பாடலில் உணரமுடிகிறது.

சமத்துவம் சமத்துவம் சமத்துவமேயெனப்
பிரெஞ்சு புரட்சியில் ஒலித்ததுவே யின்று

பெண்டிர் உலகத்திலும் ஒலிக்குதுவாம்
ஆண்களைக் காட்டிலும் அனைத்திலும் முன்னிற்கும்
அதிகாரம் வேண்டுமென்னும் அர்த்தமில்லை
சமமாக நிற்கின்றாள்
சமமாக உழைக்கின்றாள்
சவமாக கருதாமல்
சமமாக நினையீரோ?

என்ற கவிஞர் மணிமேகலையின் கவிதை உரத்துச் சொல்வது ஒன்றைத்தான் பாலின சமத்துவம்.

மனித உயிர் என்கிற ரீதியில் பலர் ஒடுக்கப்பட்டாலும் பெண் என்கிற பாலின ரீதியிலும் இங்கு அவள் ஒடுக்கப்படுகிறாள். இதன் மூலம் இரு வகையான ஒடுக்குதல் பெண் மீது நிகழ்கிறது. பொதுவாக ஆணின் உடல் உழைக்கும் கருவியாக மாற்றப்பட்ட நிலையில் பெண்ணின் உடல் கூடுதலாக, போகப்பொருளாகவும் நோக்கப்படுகிறது.

பெண் கவிஞர்கள் எழுதும் எழுத்து புலம்பல்கள் அல்லது சுய கழிவிரக்கம் என்கிற முன்முடிவுகளுடன்தான் எழுத்துலகம் நோக்குகிறது. முற்போக்கு பேசினாலோ, புதிய சிந்தனைகளை வெளிப்படுத்தினாலோ பெண்ணின் உடலரசியல் பிழையான கண்ணோட்டத்துடன் பார்க்கப்படுகிறது. எனினும் கவிஞர்கள் தனக்கான

சொல்லை மொழியைத் தயக்கமின்றி
வெளிப்படுத்துகின்றனர்.

அத்தனை எளிதில்லை - ஒரு
அலைபேசி அழைப்பை பற்றிக்கொண்டு
அன்பின் வழிநடத்தல்
அன்பின் மறுதலிப்பை அன்போடு ஏற்றுல்
பசித்த கொடிய மிருகத்தை
புன்னகைக்க வற்புறுத்தல்

பெண்ணின் உடலில் நிகழும் தேடல் அது நிகழாத போது கோபமாக மாறும் நிலையை க்ருஷாங்கினியின் கவிதை சூசகமாகச் சொல்லிச் செல்கிறது. தன்னுடைய விருப்பத்தைக் காதலைக் காமத்தை அவள் வெளியில் சொல்லக் கூடாது என்பதே சமூகம் வகுத்த நியதி அதை வெளிப்படுத்தும் பெண்ணைப் பொது வெளியில் பொது உடைமையாகக் கருதும் நிலையே உருவாகிறது. பெண்ணின் உடலரசியலை ஏற்க சமூகம் தயாராக இல்லாத நிலையில் ஒழுக்கம் கெட்டவள் என்கிற வார்த்தை அத்துமீறலைத் தொடங்குகிறது. அதன் பின்பு அது செயல்களை வெளிப்படுகிறது இறுதியில் உடம்பின் மீதான வன்முறையாகவும் மாறுகிறது.

பெண்கள் அணியும் நாகரீக உடை கூட எத்தனை எத்தனை பேரைக் கோபப்படுத்துகிறது அல்லது எரிச்சலூட்டுகிறது.

இருசக்கர வாகனத்தில் பெண்கள் செல்லும் போது ஏதாவது ஒரு ஆணின் வாகனத்தை முந்திச் சென்று விட்டால் அதைக் கூட அவர்களால் ஏற்றுக்கொள்ள இயலாது தனது வாகனத்தை இன்னும் அழுத்தமாகத் திருகி அதிக சத்தத்துடன் அப்பெண்ணின் வாகனத்தை முந்திச் செல்வது ஆணின் ஆதிக்கத்தைக் கூறும் உடலரசியல். பாலின பாகுபாடுகளை மீண்டும் மீண்டும் நிகழ்த்தும் செயல்களை இதுபோல இன்னும் கூறிக்கொண்டே போகலாம். சமூகத்தில் பெண்கள் சமமானவர்கள் போல ஒரு பாவனை தான் உள்ளது. அந்த பாவனையைப் பல ஆண்கள் நிஜம் என மீண்டும் மீண்டும் தான் நம்பிக்கொண்டு பெண்கள் மீது திணிக்க முற்படுகின்றனர். பெண்களின் பொருளாதாரமோ, பதவியோ, கல்வியோ, அறிவார்ந்த செயல்களோ தான் மதிக்கப்படுகின்றன. ஆனால் பெண் உடல் என்கிற ரீதியில் பல்வேறு வகையில் தொடர்ந்து ஒடுக்கப்படுகிறாள்.

நாட்டுப்புறப் பாடலில் ஒரு பெண் பாடும் பாடல் பெண்ணின் நிலையைக் கூறுகிறது.

ஆணாய்ப் பிறந்திருந்தால்
அப்பன் வீட்டு அரண்மனையில்
அம்பெடுப்பேன் வில்லெடுப்பேன்
ஐவருடன் பந்தடிப்பேன்
வீரவாழ்வு வாழ்ந்திருப்பேன்

மாரியம்மன்கோயிலாண்டை
மண்ணாய் பிறந்திருந்தால் - எனக்கு
மாசம் ஒரு பூசை வரும்
பெண்ணாய் பிறந்த குறை
புலம்பிக் கிடைக்கலாச்சு

மண்ணுக்கு இருக்கும் மரியாதை மதிப்பு கூட சக உயிரான பெண்களுக்கு இல்லை. ஊதியம் பெற்று இருந்தாலும் வீட்டில் பெண் தனக்கான வேலையை மறுக்க இயலாது. சமூகம் குடும்பம் என்கிற ரீதியில் ஒடுக்கப்பட்டாலும் அதிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்வதற்கான தேடலைத் தொடங்கிவிட்டனர். தனது உடல் தனது என்பதையும் உணரத்தலைப்பட்டு விட்டனர். எனினும் பாலின சமத்துவம் என்கிற ஒன்று நிகழ சில நூற்றாண்டுகள் ஆகலாம்.

முனைவர் பா.சத்யா தேவி,
உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, தியாகராசர் கல்லூரி,மதுரை
bsathya2217@gmail.com

# 20. பாரம்பரியமும் பண்பாடும்

— *ஆர்.எம்.பாபு*

*அந்தக் காலங்களில் வீட்டுக்குள் கழிவறை வைக்கவேண்டும் என்று நாம் நம் பாட்டி, தாத்தாவிடம் சொல்லி இருப்போமேயானால் அவர்கள் துடைப்பத்தை எடுத்து நம்மை அடித்துத் துரத்தி இருப்பார்கள். காரணம், அன்று வீட்டுக்குள் கழிப்பறை வைப்பது என்பது ஏற்புடையது அல்ல. ஆனால் இன்றைய காலங்களில் கழிப்பறை இல்லாமல் வீடு கட்டப்போகிறோம் என்று சொன்னால் துடைப்பத்தை எடுத்து மீண்டும் நம்மைத் துரத்த வருவார்கள்.*

*ஆக, இப்படி நாம் யோசித்துப் பார்த்தோமேயானால் எது மரபு? என்ற கேள்வி எழும்.*

### *எது மரபு?*

*மரபு என்பது நமக்கு முன்னோர்களிடமிருந்து கிடைத்த சொத்து என்று பொருள்படுகிறது. இந்தச் சொல் பல்வேறு விசயங்களையும் விளக்குவதற்குப் பயன்படுகிறது. இந்த மரபு எந்தவித மாற்றங்களும் இன்றி ஒரு தலைமுறையிடமிருந்து அடுத்த தலைமுறையினருக்குக் கொடுக்கப்படுகிறது என்றும் கூறுகிறோம். இதை நாமும் அவ்வாறே அடுத்த சந்ததியினருக்குக் கொடுப்போம் என்றும் நினைக்கிறோம்.*

இந்த மரபுதான் நம்முடைய பண்பாட்டையும், நாகரீகத்தையும் உருவாக்குகிறது. ஆனால், இவற்றை ஆராய்ந்து பார்க்கும்போது இந்த மரபுகளின் உள்ளடக்கங்கள் சில சமயங்களில் ஓரளவுக்கும் சில சமயங்களில் மிக அதிகமாகவும் மாறிக் கொண்டிருக்கும் என்று தெரிகிறது.

**மரபுகள் பழமையானவையா?**

தற்போது மரபு என்பதற்கு வேறொரு விளக்கமும் அளிக்கப்படுகிறது. கடந்த காலத்தில் வழக்கத்திலிருந்ததாக நாம் கருதிய விஷயங்களும், நம்முடைய தற்போதைய குறிக்கோள்களும் ஒன்றின்மீது ஒன்று தாக்கத்தை ஏற்படுத்துகின்றன. இதைப்பற்றி நாம் ஆழ்ந்து ஆராயும் போது புதிய கருத்துக்கள் தோன்றுகின்றன. இதனால் மரபு என்பதைப் பற்றி நமக்கு பொதுக் கருத்து உருவாகிறது. அல்லது நிகழ்காலத் தேவைகளுக்கு ஏற்ப இந்தப் பொதுக் கருத்து ஒரு புதிய கண்டுபிடிப்பாக உருவாகலாம். சில சடங்குகளையும் மரபுகளையும் மிகப் பழமையானவை என்று நினைக்கிறோம். ஆனால் ஆராய்ந்து பார்க்கையில் அவை மிக அண்மைக் காலத்தில் உருவாக்கப்பட்டவை என்றே தெரிகிறது.

**மரபு மாறக்கூடியது:**

அண்மைக் காலங்களில் வரலாற்று ஆசிரியர்கள் மரபு என்பது உருவாக்கப்பட்டது, மாறக்கூடியது என்றுதான் பார்க்கிறார்கள். ஒரு காலகட்டத்தின் பண்பாடு என்பது கண்களால் பார்க்கக் கூடிய நிகழ்த்துக் கலைகள், இலக்கியம், தத்துவம், கல்வி, கேள்விகளில் புலமை பெற்று மனித குலத்தின் பெருமைகளை மேம்படுத்துதல் போன்ற விசயங்களில் ஒரு சமுதாயம் படைத்த சாதனைகளைக் குறித்ததாகக் கருதப்பட்டது. நவீன காலத்திற்கு முந்தைய காலகட்டத்தில் மேற்கூறிய விசயங்கள் மேட்டுக்குடி மக்களின் செயல்பாடுகளோடு தொடர்புடையவையாயிருந்தன. இதனை எளிய மக்களின் பண்பாட்டிலிருந்து வேறு படுத்திக் காட்டுவதற்கு இதை உயர் கலாச்சாரம் என்றார்கள். ஆனால் மேற்கூறிய பண்பாட்டின் கூறுகள் பரந்துபட்ட சமுதாயத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் வருபவை. பண்பாடு என்று கூறும்போது சமுதாயத்தின் பல்வேறு பகுதி மக்களின் வாழ்க்கை முறை, அம்மக்களின் எண்ணங்களுடைய வெளிப்பாடுகள் ஆகியவையும் அடங்கும். பண்பாடு என்று குறிப்பிடும்போது அதில் வேட்டையாடி உணவு சேகரிக்கும் மக்கள், ஆடு மாடு மேய்க்கும் மக்கள், விவசாயிகள், நகர்ப்புற ஏழை மக்கள் போன்ற எளிய மக்களின் வாழ்க்கையும் அடங்கும்.

பண்பாடு என்பது மாறக் கூடியது. தாக்கங்களுக்கு உட்பட்டது. பரிமாற்றங்களை அனுமதிப்பது. வரலாற்றை ஆராயும் போது மாற்றங்கள் அடிக்கடி நிகழ்ந்தன என்று தெரிகிறது. மேலும் பண்பாடு என்பது உற்பத்தி சார்ந்ததென்றும் புலப்படுகிறது. வேட்டையாடி வாழும் சமுதாயத்தில் நிலவும் பண்பாடுகள், ஆடு மாடு மேய்த்து வாழும் சமுதாயத்தின் பண்பாட்டிலிருந்து வேறுபடும். விவசாயத்தை அடிப்படையாகக் கொண்ட சமுதாயத்தின் பண்பாடு முதலாளித்துவ சமுதாயத்தின் பண்பாட்டிலிருந்து மாறுபட்டதாகவே இருக்கும்.

**ஆதிக்கப் பண்பாடும் – எளிய மக்கள் பண்பாடும்:**

கடந்த காலங்களில் சமுதாயம் ஒரே மாதிரியான ஒற்றைத் தன்மையுடைய கலாச்சாரத்தைப் பின்பற்றியதில்லை. எல்லாச் சமுதாயத்திலும் இருந்ததைப் போலவே இந்தச் சமூகத்திலும் மேல் தட்டு பண்பாடுகள் ஆதிக்கம் செலுத்தின. ஆனால் இந்த மேல்தட்டுப் பண்பாடுகளைத் தாங்கி நின்றது எளிய மக்களின் பண்பாடு. இது தான் முக்கியமானதாகும்.

இந்த நிலையில் பல கேள்விகள் எழுகின்றன. “ இந்தப் பண்பாடுகள் அனைத்தும் ஒற்றுமையாக இருந்தனவா? அல்லது சாதி, மொழி, சமயம் இவற்றின் அடிப்படையில் பிரிந்து இருந்தனவா? இப்போது இந்தக் கலாச்சாரங்களை

ஒன்றிணைக்க முயலும்போது நாம் புதிய முயற்சி ஒன்றை மேற்கொள்கிறோமா?" என்பவைதான் இந்தக் கேள்விகள்.

இந்த ஒன்றுபடுத்தும் முயற்சி "வேற்றுமையில் ஒற்றுமை" என்ற முழக்கத்தோடு நின்றுவிட்டதாகத் தோன்றுகிறது. ஏனெனில், "இந்த ஒற்றுமை என்றால் என்ன? வேற்றுமை என்றால் என்ன?" என்பதெல்லாம் தெளிவுபடுத்தப்படவில்லை. இவற்றோடு கூட மேலோட்டமாகப் பார்க்கும்போது மாற்றமே இல்லாமல் தோன்றும் ஒரு விசயத்தை ஆராய்ந்து பார்த்தால் அதிலும் மாற்றங்கள் ஏற்பட்டிருப்பதைக் காணலாம். உதாரணம், சாதி – நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் சாதிய ஏற்றத்தாழ்வு வெவ்வேறு விதமாகக் காணப்படுகிறது. உயர் சாதியாகக் கருதப்படும் ஒரு சாதி எல்லா இடங்களிலும் உயர் சாதியென்று கருதப்படுவதில்லை. குறிப்பாக பஞ்சாபில் 'கத்ரி' என்ற சாதி உயர்வாகக் கருதப்படுகிறது. சில இடங்களில் பிராமணர்களும், சில இடங்களில் 'ஷத்ரியர்கள்' என்று தங்களை முன்னிலைப்படுத்திக் கொள்வோரும் உயர் சாதியாகக் கருதப்படுகின்றனர்.

**பண்பாட்டைப் புரிந்துகொள்ளல்:**

அனைத்து சமுதாயங்களிலும் ஆள்வோர் ஆளப்படுவோர் என்ற பிரிவுகள் உண்டு. இதில் அதிகாரப் பிரிவினர், அடக்கப்படுவது யார் என்பது காலத்தை ஒட்டி மாறும்.

அவ்வாறே, அவர்கள் ஆதரிக்கும் கலாச்சாரம் எது என்பதிலும் மாற்றம் ஏற்படலாம். அண்மைக் காலங்கள் வரையில் ஆளும் வர்க்கங்கள் தங்கள் பண்பாட்டுத் தடயங்களையும், ஆவணங்களையும் பாதுகாத்து வைப்பதற்கு ஏற்ற சூழல் நிலவியது. ஆனால் தங்கள் பண்பாட்டை எந்த வகையிலும் பதிவு செய்ய இயலாதவர்களைப் பற்றி ஊகத்தின் அடிப்படையில் தான் தெரிந்துகொள்ள வேண்டியுள்ளது.

தொல் பொருள் ஆய்வுகள் நமக்குச் சில தகவல்களை அளிக்கின்றன. மேல் தட்டு மக்களின் பண்பாட்டைப் புரிந்து கொண்டவர்களை ஒரு தனிப்பட்ட பகுதியினராகப் பார்க்காமல், அவர்கள் சமுதாயத்தின் ஏனைய பகுதிகளோடு எத்தகைய தொடர்பு கொண்டிருந்தார்கள், இதர பகுதியினரோடு எவ்வாறு பழகினார்கள் என்பதை ஆராய்வது அவர்களது பண்பாட்டைப் புரிந்துகொள்ள உதவும்.

சுற்றுச் சூழலில் ஏற்பட்ட மாற்றங்களும் தற்போது கருத்தில் கொள்ளப்படுகின்றன. நாடுகளின் அழிவு, தட்ப வெட்ப நிலைகளில் ஏற்பட்ட மாற்றங்கள் – இவை கடந்த காலங்களில் நிகழ்ந்திருக்கின்றன. சிந்து சமவெளி நாகரீகத்தின் நலிவிற்கு இந்த மாறுதல்கள் காரணமாக இருக்கலாம் என தற்போது கருதப்படுகிறது. தொழில் நுட்பத் துறையில் நிகழும் புதிய கண்டுபிடிப்புகள், சமூகப் பொருளாதார மாற்றங்களுக்கு

ஏற்ப மக்கள் தங்கள் வாழ்க்கையில் ஏற்படுத்திக் கொள்ளும் மாற்றங்கள், இவையும் கவனிக்கத் தகுந்தவை.

**புதுமைக் கலப்பு:**

வணிகத்தின் மூலமும், குடி பெயர்ந்து வரும் மக்களோடு ஏற்படும் தொடர்புகளாலும் பிற நாட்டை வெற்றி கொள்வதால் ஏற்படும் அரசியல் நிகழ்வுகள் இவற்றால் சமுதாய வாழ்வில் புதுமைகள் புகலாம். பிற நாட்டை வெற்றி கொள்ளும் போது புதிய அரசியல் அமைப்பு என்பது மிகத் தெளிவாக முன்னுக்கு வருகிறது. வணிகக் குடிபெயர்தலால் வலுவான தாக்கங்கள் ஏற்படுகின்றன. இவை பரந்த நிலப்பரப்பில் மிக அதிகமான மக்களிடையே பாதிப்பை ஏற்படுத்துகின்றன. ஆனால் நாம் படையெடுப்புகளுக்கே அதிக முக்கியத்துவம் அளிக்கிறோம். நம் நாட்டின் வட மேற்குப் பகுதியில் கிறிஸ்து சகாப்தத்தின் தொடக்கத்தில் கிரேக்கச் சிற்ப வடிவமைப்புகளின் தாக்கத்தால் உருவான காந்தார சிற்பக் கலையைக் குடிபெயர்தலினால் ஏற்படும் மாற்றங்களுக்கு ஓர் உதாரணமாகக் கொள்ளலாம்.

இதே காலகட்டத்தில் பௌத்த சிற்பக் கலை, மதுரா, மத்திய இந்தியா மற்றும் தெற்கே அமராவதி போன்ற இடங்களில் வளர்ந்திருந்தது. காந்தார சிற்பக் கலை வடிவங்களுக்கும் பௌத்த சிற்பக் கலை வடிவங்களுக்கும் இடையே பல வேற்றுமைகள் காணப்படுகின்றன. இந்தக் கலை

வடிவங்களைப் பற்றிக் கடந்த இரண்டு நூற்றாண்டுகளாக அறிஞர்களிடையே கடுமையான விவாதங்கள் நடைபெறுகின்றன. ஆனால் 19 ஆம் நூற்றாண்டுக் கலை வரலாற்று அறிஞர்கள் தங்கள் சம காலத்துச் சிற்பக் கலைஞர்களிடம் இதைப் பற்றி கருத்துக் கேட்கவில்லை. இந்த காந்தாரப் பகுதியில் பேசப்பட்ட மொழிகள் தனித்து விளங்கின. கிரேக்கம், சமஸ்கிருதம் இரண்டும் தனித்தனி மொழிகளாகவே விளங்கின.

அதே காந்தாரத்தில் ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னர் துருக்கியர்கள், ஆப்கானியர்கள், பாரசீகர்கள் போன்றோர் குடியேறினர். இவர்கள் மத்திய ஆசியாவிலிருந்தும் மேற்கு ஆசியாவிலிருந்தும் வந்தவர்கள். இந்த நிகழ்வுகளை நாம் படையெடுப்பு என்று கூறி விட்டுவிடுகிறோம். படையெடுப்பினால் வணிகத் தொடர்புகள் அதிகரிக்கின்றன. புலம் பெயர்ந்து வசிப்போரின் எண்ணிக்கை அதிகரிக்கிறது. துருக்கியர், ஆப்கானியர் ஆகியோரின் வருகையால் மொழி மத நம்பிக்கைகளில் தாக்கம் ஏற்பட்டது. இங்கு இஸ்லாமிய மதம் அறிமுகமானது மட்டுமின்றி புதிய சிந்தனைகள் உருவாகின. சூபிகள் என்ற பிரிவினர் எளிய மக்களிடையே பழகித் தங்கள் கருத்துகளைப் பரப்பினர். இதன் விளைவாகப் பஞ்சாபி போன்ற மொழிகள், பல புதிய சொற்கள் அறிமுகமாயின. குருநானக், வாரிஸ் ஷா போன்ற சமயப் பெரியோர்களின் கவிதைகள் பொதுவாக மக்கள் பேசும்

மொழியிலேயே இயற்றப்பட்டன. இவ்வாறு மொழி பயன்பாட்டின் பிற கூறுகளுக்கும் பரவியது.

**நீண்டகாலம் எழுதப்பட்ட அர்த்த சாஸ்திரம்:**

பல நூல்களின் காலத்தைக் கண்டறிய மொழியில் ஏற்பட்ட மாற்றங்கள் உதவுகின்றன. நீண்ட காலம் தொடர்ந்து எழுதப்பட்ட நூல்களில் ஒன்று 'அர்த்த சாஸ்திரம்'. இந்த நூலின் மொழி நடையில் ஏற்பட்ட மாற்றங்களைக் கொண்டு இந்த நூலின் வெவ்வேறு பகுதிகளும் எப்போது எழுதப்பட்டன என்று தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. ஒரு மொழிக்கு வேறு மொழிகளோடு தொடர்பு ஏற்படும்போது சில புதிய சொற்கள் கடன் வாங்கப்படும் அல்லது பரிமாற்றம் செய்யப்படும். இத்தகைய பரிமாற்றம் இந்த இரு மொழிகளைப் பேசும் மக்களிடையே நிலவிய உறவுகளையும் தெளிவுபடுத்தும். வேத கால சமஸ்கிருதத்தில் 'லாங்கல' (langala) என்ற சொல் ஏர் என்பதைக் குறிக்கிறது. அந்தச் சொல் திராவிட மொழியிலிருந்து பெறப்பட்டது என்று தெரிகிறது.

குடிபெயர்தல் மூலமாகப் பண்பாட்டில் மாற்றங்கள் ஏற்படுகின்றன. மேய்ச்சல் நிலங்களைத் தேடியும் வணிகத்தின் பொருட்டும் மக்கள் புதிய இடங்களில் குடியேறுவார்கள். வணிகம் நடைபெறுவதற்காக புதிய பாதைகள் போடப்படும். புதிய குடியிருப்புகள் தோன்றும். இதன் விளைவாகப் புதிய பண்பாட்டு வடிவங்கள் தோன்றும்.

ஹூனா, துரானி போன்ற சாதிப் பெயர்கள் இந்தப் போக்கைக் குறிக்கின்றன.

பிரிட்டிசாரின் வருகை முற்றிலும் மாறுபட்டது. இந்தியாவின் செல்வத்தை உறிஞ்சுவது தான் அவர்களுடைய நோக்கம். இருப்பினும், இந்தியாவின் கடந்தகாலத்தைப் பற்றித் தெரிந்துகொள்ள அவர்கள் ஆர்வம் காட்டினர். இவ்வாறு அவர்களுக்குக் கிடைத்த விவரங்களும் நம்முடைய பாரம்பரியத்தை உருவாக்குவதில் பங்காற்றின.

**பாரபட்சமான நோக்கு:**

செல்வ வளம் மிக்க மேல் தட்டு மக்களின் கலாச்சாரத்தைப் பறைசாற்றும் சுவடிகளும் சான்றுகளும் ஏராளமாகக் கிடைக்கின்றன என்பதை ஏற்கெனவே பார்த்தோம். எளிய மக்களுடைய பண்பாட்டைப் பற்றிய இத்தகைய அடையாளங்கள் கிடையாது. அவர்கள் மேல் தட்டு சமுதாயத்தின் செல்வத்தைப் பெருக்குவதற்கான அனைத்து உழைப்பையும் அளித்தனர். ஆனால் மேல் தட்டு பண்பாட்டில் அவர்களுக்குப் பங்கில்லை. அடித்தட்டு மக்களுடைய பண்பாடு வேறு விதமானது. அவர்களுடைய பண்பாட்டைப் புரிந்து கொள்ள மேல்தட்டு மக்கள் இவர்களை எப்படிப் பார்த்தார்கள் என்று கவனித்துத்தான் தெரிந்துகொள்ள வேண்டும்.

மேல்தட்டு மக்களின் பார்வையிலிருந்து தான் நாம் அடித்தட்டு மக்களைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொள்ள வேண்டியுள்ளது. இந்த நோக்கு பாரபட்சமற்றதாக இருக்கும் என்று சொல்ல முடியாது. ஆனால் இந்த மக்களின் திறமையும் அழகுணர்வும் மேல்தட்டினரின் பண்பாட்டை உருவாக்குவதில் பெரும் பங்காற்றுகின்றன.

பண்பாட்டை உருவாக்குவதாகக் கருதப்படும் மரபு எல்லாக் காலங்களிலும் மாறாது நிலைத்து நிற்பதல்ல. அதுவொரு பொருளாக இருந்தாலும் கருத்தாக இருந்தாலும், நிகழ்காலத்தில் இருந்ததைப் போலத்தான் இருந்திருக்கும் என்று நினைக்கிறோம். பண்பாட்டுக் கூறுகளுக்கு ஒரு பூர்வீகத்தை ஏற்படுத்துவதன் மூலம், கடந்த காலத்தை நிகழ் காலத்திற்குக் கொண்டு வருகிறோம். இவ்வாறு கடந்த காலத்திற்கும் நிகழ்காலத்திற்கும் இடையே ஒரு தொடர்ச்சியை ஏற்படுத்துகிறோம். “மாறாமல் தொடருகிறது" என்று நாம் நினைக்கும் பண்பாட்டுக் கூறுகளில் நாம் தக்கவைத்துக் கொண்டவை எவை? வேண்டாமென விலக்கியவை எவை? என்று ஆராய வேண்டும்.

**நியாயம் கற்பித்தல்:**

நம் முன்னோர் காலந் தொட்டு பழக்கத்தில் இருந்ததென்று நாம் கூறிக் கொள்வது சில விசயங்களுக்கு நியாயம் கற்பிப்பதற்கான முயற்சியாகும். இவ்வாறு கூறுவது

*சமூகத்தில் ஒரு குறிப்பிட்ட குழுவினர் உயர்ந்த நிலையில் இருந்ததைக் காட்டும் அடையாளமாக இருக்கலாம். இவ்வாறு கூறுவது அவர்கள் சமுதாய வாழ்வில் வெற்றி பெற்றதாகக் காட்டிக்கொள்ளப் பயன்படும் அல்லது ஒரு குழுவின் சமூக நிலையை மற்ற சிலர் ஏற்றுக்கொள்ளச் செய்யப் பயன்படும். வேறு சிலர் அது பற்றி கேள்வி எழுப்பலாம்.*

*இத்தகைய கேள்விகளைத் தவிர்க்கும் முயற்சியாகவும் இருக்கலாம். பண்பாட்டின் ஒரு பகுதிக்கு பூர்வீகம் இதுதான் என்று கற்பிக்க முயலும்போது அந்தப் பகுதி வேறொரு பூர்வீகத்திலிருந்து பிறந்திருக்கலாம் என்பதை மறுக்கிறோம். இது வேண்டுமென்றே செய்யப்பட்டால் அதற்கு வேறு காரணங்கள் இருக்கலாம். துவக்கத்தில் இதை ஏற்றுக் கொண்டிருப்பார்கள், பின்னர் இதனைப் பலர் ஏற்க மறுத்திருப்பார்கள். தொல் பண்பாட்டின் பல அம்சங்களில் பூர்வீகத்தை முழுமையாக அறிந்துகொள்வது மிக அவசியம். இதைச் சரியாகத் தெரிந்துகொள்ளாவிட்டால், ஒன்று நாம் பாரம்பரியத்தைத் திரிக்கிறோம் அல்லது நாமாக எதையாவது கண்டு பிடிக்கிறோம் என்று தான் கூற வேண்டும்.*

***புறச் சூழல் முக்கியம்:***

*கலைகளைப் பற்றி, அதுவும் பண்பாட்டின் ஓர் அம்சமாகக் கருதப்படுகின்ற சங்கீதம் நாட்டியம் போன்ற*

நிகழ்த்துக்கலைகள் பற்றிப் பேசும்போது அவற்றைப் பற்றிக் குறிப்பிடும் நூல்களைப் பற்றியும் அவற்றில் காணப்படும் குறிப்புகளைப் பற்றி மட்டும் குறிப்பிட்டால் போதுமானதா?. இந்தக் கலை வளர்ந்த புறச் சூழலைக் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டாமா? என்ற கேள்வி எழுகிறது. இந்தக் கலைகளைப் பொறுத்தவரையில் பெண்கள் ஒரு தொழிலைத் தேர்ந்தெடுத்தார்கள் அல்லது அவர்கள் ஒரு தொழிலுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். அந்தத் தொழில் சமுதாயக் கோட்பாடுகளுக்கு எதிரானது. இவர்கள் சமூகத்திற்கு அப்பாற்பட்ட தங்களுக்கே உரித்தான ஒரு சமூகத்தின் கருவை உருவாக்கிக் கொண்டார்கள். பௌத்த, சமணப் பெண் துறவிகளின் குழுக்கள் மேற்கூறிய தேவதாசிகளின் குழுக்களிலிருந்து மாறுபட்டவை. இவர்களும் தங்களுக்கென்ற ஒரு வாழ்வை நடத்தினர். இத்தகைய பெண்களின் வாழ்க்கை, அவர்கள் வாழ்ந்த சமூகத்தோடு எத்தகைய தொடர்பு கொண்டிருந்தார்கள் என்பவை ஆராயப்பட வேண்டியவை.

மேற்கூறிய விசயங்கள் அனைத்தும் பண்பாடு, மரபு என்பவற்றைப் பற்றி விரிவாக ஆராய வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்துகின்றன. பண்பாடு என்பது நிலைத்து நிற்பதல்ல, மாறிக் கொண்டேயிருப்பது என்பதையும் சுட்டிக் காட்டுகின்றன.

## 21. இந்தியாவில் நோய்களும் மருத்துவமும் - ஒரு வரலாற்றுப் பார்வை — நூலறிமுகம்

— ஆ.சிவசுப்பிரமணியன்

வரலாறு என்ற அறிவுத்துறையானது தொடக்கத்தில் அரசியலை மையமாகக் கொண்டே எழுதப்பட்டுவந்தது. பின்னர் சமூகத்தை மையமாகக் கொண்ட சமூக வரலாறாக வளர்ச்சியுற்றது. இதன் பின்னர் ஒரு குறிப்பிட்ட நாட்டில் வாழும் மக்களின் சமூக வாழ்வின் பல்வேறு கூறுகளையும் ஆராய்ந்து வெளிப்படுத்தும் சமூக அறிவியலாக மாற்றமடைந்தது. இவ்வகையில் மக்களின் நலவாழ்வில் முக்கியப் பங்காற்றும் மருத்துவத்தின் வரலாறானது வரலாறு என்ற சமூக அறிவியலுக்குள் ஒரு கூறாக இடம்பெற்றது. மருத்துவத்தின் வரலாறு என்னும் போது மனிதர்களைப் பிடித்துத் துன்புறுத்தும் பிணிகளையும், பிணி தீர்க்கும் மருத்துவ முறைகளையும் உள்ளடக்கியது.

பிணியும் பிணி தீர்த்தலும் மருத்துவத்துறை சார்ந்தவை என்பதில் ஐயமில்லை. ஆனால் பிணி வராது தடுப்பதிலும் வந்த பிணியைப் போக்குவதிலும் நாட்டை ஆளுவோருக்குப் பங்குண்டு. அப்பிணிக்கு ஆளான மக்களின் வாழ்க்கை நிலையில் ஏற்பட்ட மாற்றங்கள் அவர்கள் வாழும் நாட்டின் வளர்ச்சியில் தாக்கத்தை ஏற்படுத்தும் தன்மையன.

இதனால்தான் நாடு என்பதற்கு இலக்கணம் வகுக்கும் வள்ளுவர் ஒரு நாடானது 'ஓவாப் பிணி' (நீங்காத நோய்) இல்லாது இருக்க வேண்டும் என்று வரையறுத்துள்ளார் (குறள்:734). வரலாற்றுக் கல்வியில் புறக்கணிக்க இயலாத இடத்தைப் பெற்றுள்ள நாடு என்ற நிலப்பரப்பின் சிறப்பை நிலைநாட்டுவதில் நோயின்மையின் இடம் குறித்த சிறப்பான பதிவு இது.




இங்கு அறிமுகம் செய்யப்படும் 'இந்தியாவில் நோய்களும் மருத்துவமும் - ஒரு வரலாற்றுப் பார்வை' (*Disease & Medicine in India, A Historical Overview*) என்ற நூல் சமூக வரலாற்றில் நோயும் மருத்துவமும் வகித்த பங்களிப்பை இந்திய நாட்டை மையமாகக் கொண்டு அறிமுகம் செய்துள்ளது. இந்திய வரலாற்றுக் கழகமானது (*The Indian History Congress*) 2001ஆவது ஆண்டில் தனது அறுபத்தி ஒன்றாவது அமர்வை ஜனவரி 1-3 நாட்களில் கொல்கத்தாவில் நடத்தியது. அதில் இந்திய மக்களின் உடல்நலம், இந்தியாவின் மருத்துவ முன்னேற்றம் குறித்த சிறப்பு அமர்வு இடம் பெற்றது. அவ்

அமர்வில் படிக்கப்பட்ட கட்டுரைகளின் தொகுப்பே இந் நூலாகும். இச் சிறப்பமர்வில் இடம் பெற்றிருந்ததுடன் அதன் தலைவராகவும் செயல்பட்ட பேராசிரியர் தீபக் குமார் இக்கட்டுரைகளைத் தொகுத்துப் பதிப்பித்துள்ளதுடன் ஓர் ஆழமான ஆய்வு முன்னுரையையும் எழுதியுள்ளார்.

இவர் ஜாகீர் உசேன் கல்வி ஆய்வு மையத்திலும் ஜவகர்லால் நேரு பல்கலைக்கழகத்திலும் அறிவியல் வரலாறு, சமூகமும் கல்வியும் என்ற பாடங்களைக் கற்பித்து வந்துள்ளார். பல்வேறு ஆய்விதழ்களில் இவர் எழுதியுள்ள ஆய்வுக் கட்டுரைகள் வெளியாகியுள்ளன. இவை தவிர 'அறிவியலும் அரசும்' (Science and the Raj 1857-1905) என்ற நூலை எழுதியுள்ளார். 'அறிவியலும் பேரரசும்' (Science and Empire: Essays in the Indian Context) என்ற நூலைப் பதிப்பித்துள்ளார்.

ஆய்வாளர்கள் பலர் எழுதியுள்ள கட்டுரைகளின் தொகுப்பாக அமையும் நூலொன்று ஓர் ஆழமான நூலாக அமையமுடியாது என்றாலும் இந்தியாவில் பரவிய நோய்கள், அவற்றுக்கான மருத்துவம் குறித்த சில அடிப்படைச் செய்திகளை இந்நூல் வெளிப்படுத்தி நிற்கிறது. இவ்வகையில் இந்தியாவில் காணப்படும் நோய்கள், அவற்றுக்கான மருத்துவம் குறித்த வரலாற்று வரைவுக்குத் துணை நிற்கும் தகுதி இந்நூலுக்கு உண்டு. ராதா காயத்திரி, துருப்குமார் சிங் என இருவரும் பதினான்கு பக்க அளவில் இத் தலைப்பை

ஒட்டிய நூல்களின் பட்டியல் ஒன்றைத் தயாரித்துத் தந்துள்ளனர். நூலின் இறுதியில் ( பக்கம்: 276-289) இடம் பெற்றுள்ள இப் பட்டியல் இத் தலைப்பில் மேலும் ஆய்வு செய்ய விழைவோருக்குத் துணை நிற்கும் தன்மையது.

பதிப்பாசிரியரின் முன்னுரை நீங்கலாக மொத்தம் பதினெட்டு கட்டுரைகளைக் கொண்ட இந்நூலில் உள்ளடக்கத்தின் அடிப்படையில், 'நவீன இந்தியாவிற்கு முற்பட்ட காலம்', 'நவீன இந்தியா' என்ற இரு தலைப்புகளில் கட்டுரைகளை இரு பிரிவுகளாகப் பகுத்துள்ளனர். முதற் பிரிவில் எட்டு கட்டுரைகளும் இரண்டாவது பிரிவில் பத்து கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன.

**பதிப்பாசிரியரின் முன்னுரை:**

இந்நூலுக்கான ஓர் ஆழமான முன்னுரையை மிகச் சுருக்கமாக பதிப்பாசிரியர் தீபக் குமார் எழுதியுள்ளார். அவரது கருத்துப்படி அறிவியலின் வரலாறும், தொழில் நுட்பம், மருத்துவம் என்பனவும் வரலாற்றுக் கல்வியுடன் நெருக்கமான தொடர்புடையன. சமூகப் பண்பாட்டு நோக்கில் பார்த்தால் இவற்றைப் புறந்தள்ளிவிட முடியாது. காலந்தோறும் இந்திய வரலாற்றில் இவை தனிச் சிறப்பிடத்தைப் பெற்றுள்ளன. பதினொன்றாவது நூற்றாண்டில் எழுதப்பட்ட நூல் ஒன்றில் (*Said al- Andalusi: Tabaqat al-Umam*) அறிவியலை வளர்த்ததில் இந்தியா

முதலாவது நாடு என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இந்திய மருத்துவர்கள் சமயப்புனித நூல்களுக்கு நெருக்கமானவர்களாக இருந்தபோதிலும் இயற்கையின் செயல்பாட்டினை உற்றுநோக்கி அறிதலை வலியுறுத்தி வந்தனர். "இயற்கை குறித்த அறிதலும் மனித குலத்தின் மீது அன்பு செலுத்துதலும் வெவ்வேறானவை அல்ல; இரண்டும் ஒன்றே" என்று சரகசம்ஹிதா என்ற நூல் குறிப்பிடுகிறது.

நாம் வாழும் இக்காலம் அறிவியல் வளர்ச்சிபெற்ற காலம். பல வரலாற்றியலர்கள் மருத்துவ வரலாறு பக்கம் திரும்பியுள்ளனர். தொடக்கத்தில் இந்திய மருத்துவ மரபு குறித்து தத்துவ பண்பாட்டு அணுகுமுறையிலான ஆய்வுகள் வெளிவந்தன. தற்போது தற்கால இந்தியாவின் வரலாறு சார்ந்த வரலாற்றியலர்கள் இந்திய மருத்துவ வரலாறு குறித்த வரலாற்றாய்வில் ஆர்வம் காட்டுகிறார்கள். அரசியலில் மருத்துவம் மருத்துவத்தின் அரசியல் எனப் பல ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன. மானுடவியலாளர்களும் சமூகவியலாளர்களும் இத் துறையில் சில நுண் ஆய்வுகளை நிகழ்த்தியுள்ளனர். அறிவியல் தொழில் நுடபம் குறித்த சமூகவரலாற்று வரைவுக்கு எவ்வகையிலும் தாழ்ச்சியுறாத நிலையை மருத்துவம் குறித்த சமூக வரலாறு பெற்றுள்ளது.

இச்செய்திகளையடுத்து இந்தியாவில் நிலவிய ஆயுர்வேத மருத்துவம், யுனானி மருத்துவம் என்ற இரு மருத்துவ

முறைகளைக் குறிப்பிட்டுள்ளார். (ஆனால் தமிழ்நாட்டின் சித்த மருத்துவம் குறித்து எதுவும் குறிப்பிடவில்லை.) இதன் தொடர்ச்சியாக இவை ஏன் நிறுவனமாக மாறவில்லை என்ற வினாவை எழுப்பி விடை தேடுகிறார். விதிக் கொள்கையும் சாதியும் ஏற்படுத்திய எதிர்மறையான விளைவுகளை விடையாக உணர்கிறார்.

அவரது கருத்துப்படி தெற்காசிய சமூகத்தில் நிலவும் சாதிய முறையானது கருத்தியலையும் (theory), செயல் முறையையும் (practice) தனித்தனியாகப் பிரிக்கும் அழிவுப் பணியைச் செய்துள்ளது. இது உடல் உழைப்பிலிருந்து மூளை உழைப்பை வேறுபடுத்துவதாகி விட்டது. சமய உணர்வும் சாதியும் இணைந்து போயின. இடைக்கால இந்தியச் சமூகத்தில் ஆளும் வர்க்கத்தின் பண்பாட்டுத் தோல்வியாக இது ஆகிப்போனது.

முகலாயர் ஆட்சிக் காலத்தில் வாழ்ந்த அபுல் ஃபசல் என்பவர் வெளிப்படுத்திய துயரம் தோய்ந்த பின்வரும் சொற்களை அவர் மேற்கோளாகக் காட்டுகிறார்:
“மரபு என்னும் பெருங்காற்றினால் பகுத்தறிவு என்னும் விளக்கின் ஒளிமங்கி... "எப்படி” “ஏன்” என்ற கேள்விக் கதவுகள் அடைக்கப்பட்டு கேள்விகேட்டலும் ஆராய்தலும் எட்டாக்கனியாகி புறச்சமயவாதிகளாயினர்.”

இதன் தொடர்ச்சியாக, இடைக்கால இங்கிலாந்து குறித்து ராய் போர்ட்டர் என்பவர் எழுப்பிய வினாக்கள் போன்று சில வினாக்களை எழுப்பியுள்ளார்:

— நோய் போக்குதல் எவ்வாறு நிகழ்ந்தது? இதை யார் செய்தார்கள்?

— நோயாளி இதை எப்படி உணர்ந்தார்?

— மருத்துவ மானுடவியலாளர்கள் மந்திர- சமயச் சடங்கு, சடங்குகள், ஷாமன்கள்(மந்திர ஆற்றல் கொண்ட பூசாரி) ஆகியோரை ஆராய்ந்துள்ளார்கள். இவை வரலாற்று அடிப்படையில் பதிவு செய்யப் பட்டுள்ளனவா?

— கீழ்நிலையிலுள்ள மக்களின் நோய் தீர்ப்பவர் யார்?

— இத் தொழில் முறை எவ்வாறு உருவாகிறது?

இப்படிப் பல வினாக்களை தீபக் குமார் எழுப்பியுள்ளர். அவரது இவ் வினாக்கள் இத்துறையில் ஆய்வு செய்யப் புகுவோருக்கு உதவும் தன்மையன. இவ்வினாக்களை அடுத்து காலனியத்தின் நுழைவிற்கு முன் இந்தியாவில் பின்பற்றப்பட்ட நோய் போக்கும் முறைகள் குறித்தும், பயன்படுத்திய மருத்துவ நூல்கள் குறித்தும் விவரிக்கிறார். இறுதியாக, இந்தியாவில் நவீன மேற்கத்திய மருத்துவத்தின் அறிமுகம் குறித்த செய்திகளைக் குறிப்பிட்டுள்ளார். இவை வெறும் செய்திகளாக மட்டுமின்றி திறனாய்வுத் தன்மையுடன் இடம் பெற்றுள்ளன.

இம் முன்னுரையில் வேறு ஒரு முக்கிய பிரச்சினையும் விவாதிக்கப்பட்டுள்ளது. நமது பாரம்பரிய மருத்துவ முறைக்கும், காலனியம் அறிமுகம் செய்த நவீன மருத்துவ முறைக்கும் இடையிலான உறவை பதிப்பாசிரியர் சுட்டிக்காட்டி விவாதித்துள்ளார். இந்தியாவின் பாரம்பரிய மருத்துவ முறையானது ஐரோப்பிய மருத்துவ முறை அறிமுகமான பின்னர் நிலைத்து நிற்கப் போராட வேண்டிய நிலைக்கு ஆளானது. புதிய அறிவுத் துறை ஒன்றை முழுமையாக ஏற்றுக் கொள்வதானது சில நேரங்களில் பழைய அறிவுத்துறையை முற்றிலும் புறந்தள்ளுவதாக அமைவதுண்டு. இத்தகைய நெருக்கடியில் நம் பாரம்பரிய மருத்துவ முறையானது விலகி நிற்கும் நிலைக்கு ஆளானது. இருந்தபோதிலும், பெரும்பான்மையான இந்தியர்கள் நம் பாரம்பரிய மருத்துவத்தைப் புத்தாக்கம் செய்து மறுமலர்ச்சியை ஏற்படுத்தவே விரும்பினார்கள். மேற்கத்திய மருத்துவமும் இந்திய மருத்துவமும் ஒன்றிணைந்து செயல்படவேண்டிய களங்கள் இருந்தன. ஆனால் அது கண்டு கொள்ளப்படவில்லை.

மேற்கத்திய மருத்துவம் நோய்க்கான காரணத்தைக் கண்டறிய அழுத்தம் கொடுத்தது. இந்திய மருத்துவம் குணப்படுத்தலை நோக்கமாகக் கொண்டிருந்தது. நுண்ணுயிர்கள், நுண்ணுயிர் நோக்கிகள் (மைக்ரோஸ்கோப்) என்பன நோயறியும் மருத்துவக் கண்ணாடிகளாக மேலை

மருத்துவத்தில் பயன்பட்டன. ஆனால் இந்திய மருத்துவம் நோய் எதிர்ப்பாற்றலை வலியுறுத்தியது. இதன்படி நோயாளியின் உடல்நலத்தில் ஏற்படும் முன்னேற்றமானது நுண்ணுயிர்களையும் அவற்றை அழித்தலையும் விட இன்றியமையாதது.

இத்தகைய வேறுபாடுகள் இருப்பினும் இவ்விரு மருத்துவ முறைகள் குறித்த அறிவார்ந்த கலந்துரையாடல் எதையும் மேற்கத்தியமுறை மருத்துவர்கள் மேற்கொள்ளவில்லை என்று குறிப்பிடும் பதிப்பாசிரியர், தம்மை உயர்வானவர்களாக இவர்கள் கருதிக்கொண்டமையே இதற்குக் காரணம் என்ற முடிவுக்கு வருகிறார். இறுதியாக காலனியச் சார்புநிலை, தேசியச் சார்புநிலை என்ற இரண்டு பார்வைகளையும் கடந்து இரண்டு அறிவுத்துறைகளுக்கும் இடையே இணக்கத்தை ஏற்படுத்த வேண்டும் என்று அறிவுறுத்துகிறார்.

**நவீன இந்தியாவிற்கு முற்பட்ட காலம்:**

நவீன இந்தியாவிற்கு முற்பட்ட காலத்தில் நிலவிய மருத்துவ முறைகளை ஆராயும் அல்லது அறிமுகம் செய்யும் எட்டு கட்டுரைகளில் முதலாவது கட்டுரையாக சுராஜ் பான் என்பவரும், தஹியா என்பவரும் இணைந்து எழுதிய கட்டுரை இடம் பெற்றுள்ளது. இவர்களுள் சுராஜ் பான் சிறப்பான தொல்லியலாளர். குருஷேத்திரா

பல்கலைக்கழகத்தில் பண்டைய இந்திய வரலாறு மற்றும் தொல்லியலில் பேராசிரியராகப் பணியாற்றியவர். கட்டுரையின் இணையாசிரியரான தஹியா குறித்த பதிவுகள் எவையும் இடம் பெறவில்லை. இக் கட்டுரை கி.மு.2500-1900 காலத்தைச் சேர்ந்த ஹரப்பா நகரில் வாழ்ந்த மக்களின் நோய்கள், வழக்கிலிருந்த அறுவைச் சிகிச்சை முறை, மக்களின் உடல் நலம் குறித்த செய்திகளை வெளிப்படுத்துகிறது.

கட்டுரையின் தொடக்கத்தில் கட்டுரையாசிரியர்கள் முன்வைக்கும் பின்வரும் செய்திகள் அவர்களது சமூகப் பார்வையை வெளிப்படுத்தி நிற்கின்றன.
“அண்மைக்காலம் வரை உடல்நலம் என்பது நோயின்மை அல்லது உடல் வலு சார்ந்த ஒன்றாகக் கருதப்பட்டு வந்தது. ஏழ்மை அதோடு தொடர்புடைய சமூகக் காரணிகள் (கழிவகற்றல்) என்பன உடல்நலமின்மைக்கான முக்கிய காரணங்கள்" என்பதை மருத்துவ அறிவியல் படிப்படியாக உணர்ந்து கொண்டது.

உடல் நலத்திற்கான அடிப்படைத் தேவைகளாக அமையும் ஊட்டச்சத்து, தூய்மையான குடிதண்ணீர், உடல் நலம் பேணுதல், கழிவுகளை அகற்றல் எனபன கிடைத்து மன அழுத்தமும் வன்முறையும் கட்டுப்படுத்தப்பட்டால் மக்களின் உடல்நலம் குறிப்பிட்டுச் சொல்லுமளவுக்கு வளர்ச்சி பெறும்.

இச் செய்திகளின் தொடர்ச்சியாக ஹரப்பா நாகரிகத்தில் காணப்படும் மருத்துவம் தொடர்பான செய்திகளை வகைப்படுத்தி கட்டுரையாசிரியர் தந்துள்ளார். இவ்வகையில் உணவும் ஊட்டச்சத்தும், நோய்குறித்த உயிரியல் சான்றுகள், அறுவைச் சிகிச்சையும் உடல்நலமும், மக்களிடையே நிலவிய பாலியல் விகிதாச்சாரம், ஆயுட்காலம், உயர அளவு, தாக்கிய நோய்கள்குறித்து தனித்தனியே குறிப்பிட்டுள்ளார். இதற்கான தரவுகளாக அகழ் ஆய்வின்போது கிடைத்த எலும்புக்கூடுகளும் மண்டை ஓடுகளும் பயன்பட்டுள்ளன. கழிவுநீர் அகற்றுதல் தொடர்பாக அங்கு நிலவிய குறைபாடுகளையும் விவரித்துள்ளார்கள். மொத்தத்தில் அகழாய்வுச் சான்றுகள், உயிரியல் சான்றுகளின் அடிப்படையில் இச் செய்திகளை எழுதியுள்ளார்கள். அதே போழ்து இச் செய்திகள் நகரம் சார்ந்த செய்திகள் என்றும், இறந்தோரின் சமூகப் பின்புலம் (வர்க்கம், பால்) வரையறுக்கப்பட்டதாகவே உள்ளது என்றும் குறிப்பிட்டுள்ளனர். பெண்கள் உடல் அடிப்படையில் எவ்வாறு நடத்தப்பட்டனர் என்பதை ஆராயவேண்டியுள்ளது. மார்ஷல் என்பவரின் சேகரிப்பில் இருந்த பத்து மண்டை ஓடுகள் வரிசையில் முதலாவது மண்டை ஓடும் பத்தாவது மண்டை ஓடும் தாக்குதலுக்கு ஆளான பெண்களின் மண்டை ஓடுகளாக உள்ளன. கொடூரமான முறையில் பெண்கள் நடத்தப்பட்டமைக்கான சான்றாக இதைக்கொள்ளலாம்.

ஹரப்பா நகரின் பெண்கள் அங்கிருந்த ஆண்களைவிட உயரம் குறைவாகக் காணப்படுவது ஊட்டச்சத்து பால்வேறுபாட்டுடன் பகிரப்பட்டதை வெளிப்படுத்துகிறது.

ஹரப்பா நகர்களில் கழிவு நீர் வெளியேற்றியமை, உடல் நலம் பேணியமை, தூய்மையான குடிநீர், மாசில்லா சூழல் என்பன குறித்து மிகுதியான அளவுக்கு எழுதப்பட்டுள்ளன. இயற்கையின் தாக்குதல்களை எதிர்கொள்ளும் வழிமுறையாக, பெரிய அளவிலான தானியக் களஞ்சியங்களில் தானியங்களைச் சேகரித்து வைத்திருந்தார்கள். இது ஆளும் வர்க்கத்திற்கு அல்லது நகரின் மொத்த மக்களின் பயன்பாட்டிற்காக இருக்கலாம். இம் மக்களின் உடல்நலம் ஒரு கட்டுக்குள்தான் இருந்துள்ளது. மேலும் இது தொடர்பான ஆய்வுகளுக்கான சான்றுகளாக ஊட்டச்சத்து, கருவிகள், மூலிகை மருத்துவம் குறித்த தரவுகளுடன் தனிமனிதனின் உடல் நலத்தைப் பாதிக்கும் சமூக உண்மைகளையும் இணைத்து ஆராய வேண்டும் என்பது கட்டுரையாளர்களின் கருத்தாக உள்ளது.

இரண்டாவது கட்டுரை பாட்னா பல்கலைக் கழகத்தின் பண்டைய இந்திய வரலாற்றுத் துறையின் பேராசிரியர் விஜயகுமார் தாகூர் எழுதியது. இக்கட்டுரை பண்டைய இந்தியாவில் வழக்கிலிருந்த அறுவைச் சிகிச்சை முறைகள்

குறித்தும், மருத்துவ அறிவியலின் வளர்ச்சி குறித்தும் அறிமுகம் செய்கிறது.

மூன்றாவது கட்டுரை கண்பார்வை குறித்த இடைக்கால இந்தியக்(1200-1750) கோட்பாடுகளையும், மூக்குக் கண்ணாடி அறிமுகத்தையும் குறிப்பிடுகிறது. மூக்குக் கண்ணாடி அணிந்து மீர் முசாவ்வீர் என்பவர் படித்துக் கொண்டிருக்கும் பதினாறாவது நூற்றாண்டு ஓவியம் ஒன்றும் இக்கட்டுரையில் இடம்பெற்றுள்ளது. இக்கட்டுரை ஆசிரியர் இக்பால் கனிகான் அலிகார் பல்கலைக்கழகத்தில் இடைக்கால இந்திய வரலாற்றையும் தொழில் நுட்ப வரலாற்றையும் கற்பிக்கும் பேராசிரியர்.

நான்காவது கட்டுரை இடைக்கால இந்தியாவின் மருத்துவர்கள் மருத்துவத்தையே ஒரு தொழிலாகக் கொண்டவர்களாக விளங்கியதை அறிமுகம் செய்கிறது. இக் கட்டுரையாசிரியர் அலீந்தீம் ரிஜாவி அலிகார் பல்கலைக்கழகத்தின் வரலாற்றுத் துறைப் பேராசிரியர்.

ஐந்தாவது கட்டுரை 16ஆவது நூற்றாண்டு இந்தியாவில் பின்பற்றப்பட்ட மருத்துவர்களுக்கான விதிமுறைகளை அறிமுகம் செய்கிறது. கட்டுரையின் பின் இணைப்பாக நம் காலத்தில் மேற்கத்திய மருத்துவமுறையில் தேர்ச்சி பெறும் மருத்துவர்கள் எடுத்துக் கொள்ளும் ஹிப்பாகிராட்டிக்

உறுதிமொழியும் (Hippocratic Oath) இடம் பெற்றுள்ளது. இக் கட்டுரையாசிரியர் சிரீன் மூசாவி மத்தியகால இந்தியப் பொருளாதார வரலாற்றில் வல்லுனர். அலிகார் பல்கலைக்கழகத்தின் வரலாற்றுத் துறைப் பேராசிரியர்.

ஆறாவது கட்டுரை இந்தியாவின் சிறந்த வரலாற்றுப் பேராசிரியர்களில் ஒருவரான இர்பான் ஹபிப் எழுதியது. இக் கட்டுரை மொகலாய இந்தியாவில் மருத்துவத் துறையில் நிகழ்ந்த மாறுதல்களையும் கண்டுபிடிப்புகளையும் அறுவை சிகிச்சை நடைமுறைகளையும் ஆராய்கிறது.

ஏழாவது கட்டுரை நவீன இந்தியா உருவாகும் முன்பு நிகழ்ந்த அம்மை நோய்ப் பரவல் குறித்தும் அதைப் போக்குவதற்கு மேற்கொண்ட சிகிச்சை முறைகள் குறித்தும் ஆராய்கிறது. இக் கட்டுரையாசிரியர் இஸ்ரத் அலம் அலிகார் பல்கலைக்கழகத்தின் வரலாற்றுத் துறையில் பணியாற்றிவருபவர். டச்சு மொழியில் பயிற்சி உடையவர்.

எட்டாவது கட்டுரை அம்மை நோய் குறித்து பதினெட்டாவது நூற்றாண்டில் வெளியான துண்டு வெளியீடு (Tract) ஒன்றின் துணையுடன் அம்மை நோய் பரவும் காலம், நோயாளிக்கான உணவு, சிகிச்சை என்பனவற்றை ஆராய்கிறது. இக்கட்டுரையின் ஆசிரியர் ஹரிஷ் நரேந்திராஸ், தில்லி

பல்கலைக்கழகத்தின் சமூகவியல் துறையில் மருத்துவ சமூகவியலாளராகப் பணியாற்றி வருகிறார்.

இந்நூலின் முதற் பிரிவில் 'நவீன இந்தியாவிற்கு முற்பட்ட காலம்' என்ற தலைப்பில் இடம் பெற்றிருந்த எட்டு கட்டுரைகள் குறித்த அறிமுகத்தைத் தொடர்ந்து இவ்விதழில் 'நவீன இந்தியா' என்ற தலைப்பில் இடம் பெற்றுள்ள பத்து கட்டுரைகளின் சுருக்கமான அறிமுகம் இடம் பெறுகிறது.

**தொற்று நோய்கள்:**

***மலேரியா:***

இந்தியாவில் பரவிய தொற்று நோய்களில் மலேரியா, காலரா, பெரியம்மை ஆகிய நோய்கள் முக்கிய இடத்தைப் பிடித்திருந்தன. இவற்றுள் மலேரியா நோய்ப் பரவல் குறித்து முதல் இரண்டு கட்டுரைகள் குறிப்பிடுகின்றன.

முதலாவது கட்டுரையின் ஆசிரியரான இதிசாம் காசி வங்கதேசத்தின் டாக்கா பல்கலைக் கழகத்தில் வரலாற்றுப் பேராசிரியர். மலேரியா நோய்ப் பரவலில் சுற்றுச் சூழல் வகிக்கும் இடத்தை இக்கட்டுரை வெளிப்படுத்துகிறது. பத்தொன்பதாவது நூற்றாண்டின் நடுப்பகுதியில் வங்காளக் கிராமம் ஒன்றில் இந்நோய் முதலில் காணப்பட்டது. பின்னர் படிப்படியாக இன்றைய பங்களாதேஷ் மேற்கு வங்கம் உள்ளிட்ட வங்காளப் பகுதியில் பரவியது. மக்கள் இதைப்

‘புதிய காய்ச்சல்’ என்றழைக்க ஆங்கில அரசு ‘பர்துவான் காய்ச்சல்’ என்று பெயரிட்டது. இக்காய்ச்சலின் பரவலால் எண்ணிக்கையில்லாத அளவில் மக்கள் மடிந்தனர். இப்போதுங்கூட இப்பகுதி மலேரியா, டெங்கு காய்ச்சல்களின் தாக்குதலுக்கு ஆளாகும் பகுதியாக உள்ளது. மலேரியா பரவுதலுக்கு முன்பு இருந்த காரணங்கள் இப்போதும் தொடர்கின்றன. இப்பகுதியில் நிகழும் வெள்ளப் பெருக்கு முடிவுற்றதும் பல்வேறு நோய்கள் உருவாகின்றன. அவற்றுள் ஒன்றாக மலேரியா அமைகிறது. இந்நோய்ப் பரவல் குறித்துப் பல்வேறு ஆய்வுக் கட்டுரைகள் வெளிவந்துள்ளன.

இக்கட்டுரை ஆசிரியரின் கருத்துப்படி இரயில் சாலைப் போக்குவரத்துக்கள் உருவாக்கத்தில் அக்கறை காட்டிய ஆங்கில அரசு நீர் வழிப் போக்குவரத்தைப் புறக்கணித்தது. சாலைகள் இரயில் பாதைகள் அமைத்தல், புதிய குடியிருப்புகள் உருவாக்குதல் என வளர்ச்சிப் பணிகள் நடந்தபோது குழிகளும் கற்குவாரிகளும் உருவாயின. இவற்றில் தேங்கும் நீர் மலேரியாக் கொசுக்களின் உற்பத்திக்குத் துணை நின்றது. இதனால் வளர்ச்சியின் விளைவால் உருவாகும் நோயாக மலேரியா சுட்டப்பட்டது. பல்வேறு ஆறுகள் பாயும் சமவெளிப்பகுதிகளைக் கொண்ட வங்காளத்தில் முறையான வடிகால்கள் இல்லாமையும் மலேரியா நோய் பரவலுக்கான காரணங்களில் ஒன்றாகியது. தண்ணீர் தேங்காது ஓடிக்கொண்டிருக்கும் ஆறுகள் பாயும்

பகுதிகளில் உள்ள கிராமங்களை விட நீரோட்டம் இன்றி தேங்கிய நிலையில் உள்ள ஆற்றங்கரைக் கிராமங்கள் மலேரியாக் கொசுக்களின் உற்பத்தி மையமாக விளங்கின. வெள்ளத் தடுப்பிற்காகக் கட்டப்படும் தடுப்பணைகளில் தேங்கும் தண்ணீரும் மலேரியாக் கொசுக்களின் உற்பத்திக் களமாயின.

காலனிய அரசிற்கு வருவாய் ஈட்டுவதை மட்டுமே நோக்கமாகக் கொண்டு இரயில் பாதைகளும் சாலைகளும் அமைக்கப்பட்டமையால் இவற்றின் உருவாக்கம் நீர் தேங்கி நிற்பதற்குக் காரணமாக அமைவது கண்டு கொள்ளப்படவில்லை.வளர்ச்சித் திட்டங்களின் எதிர்விளைவாக மலேரியா தோன்றிப் பரவியது. ஆனால் இவ் உண்மையைக் காலனிய அரசு ஏற்றுக் கொள்ளவில்லை. மலேரியாப் பரவலுக்கு அது மக்களைக் குறை கூறியது. இந்நோயானது பாரம்பரியம் சார்ந்த ஒன்று, இனம் சார்ந்தது என்ற கருத்தை அது உருவாக்கிய ஆணையங்கள் முன்வைத்தன. பலவீனமான இனங்கள் இயற்கையின் வளர்ச்சிப் போக்கில் இறந்து போகும் என்றன. இது சமூக டார்வினியம் (Social Darwinism) சார்ந்த கருத்து வெளிப்பாடு என்று கட்டுரையாசிரியர் சரியாகவே மதிப்பிட்டுள்ளார். மலேரியா நோய் குறித்த கடந்தகால அனுபவம் சூழல் சீர்கேட்டின் அனுபவ வரலாறாக அமைந்து எதிர்காலத்திற்கான வழிகாட்டியாக அமைந்துள்ளது. இக்

*கட்டுரையின் மையச் செய்தியுடன் தொடர்புடையதாக அடுத்த கட்டுரையும் அமைந்துள்ளது.*

*பத்தொன்பதாம் நூற்றாண்டு மும்பை நகரைத் தாக்கிய மலேரியா குறித்த கட்டுரையை மும்பைப் பல்கலைக் கழகத்தின் வரலாற்றுத் துறைப் பேராசிரியர் சிம்கி சர்கார் எழுதியுள்ளார். 1838-1841 காலகட்டத்தில் மும்பை நகரின் கொலாபா துறைமுகப் பகுதியில் மலேரியா பரவியது. கொலாபா வட்டார நிலப்பரப்பின் பெரும்பகுதி கடல்நீர் பரவியிருந்த தாழ்வான இடத்தைச் சீர்திருத்தி உருவாக்கப்பட்டதாகும்.*

*1861-1866 இல் இப் பகுதியின் நிலங்களைச் சீர்திருத்தம் செய்ததானது மலேரியா அதிகரிப்புக்குக் காரணமாக அமைந்தது. 1863 தொடங்கி 1866 வரையிலான நான்காண்டு காலத்தில் மலேரியாத் தாக்குதலால் நிகழ்ந்த இறப்புகளின் சராசரி எண்ணிக்கை 12,577ஆக இருந்தது. 1865இல் இது 18,767 ஆக உயர்ந்தது. இந்நிகழ்வுகளையடுத்து துறைமுகத்தின் விரிவாக்கம் 1903 க்கும் 1907 க்கும் இடைப்பட்ட காலத்தில் நிகழ்ந்தபோது மலேரியாப் பரவல் அதிகரித்தது. 1909இல் எடுக்கப்பட்ட மக்கள் தொகைக் கணக்கெடுப்பின்போது துறைமுகத்தை நோக்கியிருந்த வீடுகளில் வசித்தவர்களில் இருபது விழுக்காட்டினரும் துறைமுகத்தை விட்டுத் தள்ளியிருந்த வீடுகளில்*

வசித்தோரில் மூன்று விழுக்காட்டினரும் மலேரியாத் தாக்குதலுக்கு ஆளாகியிருந்தது தெரியவந்தது.

காவல்பணியில் ஈடுபடுவோர் , கூலிகள், தூய்மைப்படுத்தும் தொழிலாளர்கள் ஆகியோர் மலேரியாத் தாக்குதலுக்கு ஆளானார்கள். துறைமுகத்தில் புதிதாக உருவாக்கப்படும் கப்பல் துறைக்கு (Dock) எதிரே அமைந்திருந்த தூய ஜார்ஜ் மருத்துவமனை மும்பை நகரிலேயே மலேரியா மிகுந்த இடமாக விளங்கியது. மொத்தத்தில் மும்பை நகரில் மிகுதியான மக்களை மலேரியா பலிவாங்கியது. இந்த அளவுக்கு இதன், தாக்குதல் கிராமப்புறங்களில் இல்லை.

இச் செய்திகளின் தொடர்ச்சியாக மலேரியா நோய் உருவாதல் குறித்த பழைய கோட்பாடுகள், அது பரவும் முறை, அதைத் தடுக்கும் முறை, அதன் வகைகள் மும்பை நகரின் பொருளாதாரத்தில் மலேரியா ஏற்படுத்திய தீய விளைவுகள் எனபனவும் இக்கட்டுரையில் இடம் பெற்றுள்ளன.

**காலரா:**

ஜவகர்லால் நேரு பல்கலைக் கழகத்தின் வரலாற்றுத் துறையில் முனைவர் பட்டத்திற்கான ஆய்வு மாணவராக இருந்த துருப் குமார் சிங் பத்தொன்பதாம் நூற்றாண்டில் (1817-1870) வாந்திபேதி (காலரா) நோய்ப் பரவல் குறித்த கட்டுரையை எழுதியுள்ளார்.

*இந்நோய்த்தாக்குதல் ஏற்படுத்திய உயிரிழப்பு குறித்து இங்கிலாந்தையும் இந்தியாவையும் ஒப்பிடும் புள்ளிவிவரங்களை இக்கட்டுரை ஆசிரியர் வெளிப்படுத்துவதுடன் இங்கிலாந்தில் இதன் பரவல் குறைந்து வர இந்தியாவில் அதிகரித்து வந்ததையும் சுட்டிக் காட்டியுள்ளார். காலனிய அரசின் இராணுவத்தில் குறிப்பிட்டுச் சொல்லுமளவுக்கு இந் நோய் பரவாமலிருந்துள்ளது. ஆனால் பின்னர் அங்கும் பரவத்தொடங்கியுள்ளது. இங்கிலாந்தில் இருந்த படைப்பிரிவைவிட மூன்று மடங்கு அதிகமாக இறப்பு எண்ணிக்கை இருந்ததாக 1859 இல் அமைக்கப் பட்ட ஆணையம் குறிப்பிட்டுள்ளது. முறையான கழிவகற்றலும் குடிநீர் வழங்கலும் இல்லாமையே இதற்கான காரணம் என்று அது குறிப்பிட்டது. இதன் அடிப்படையில் போர்வீரர்களுக்கென்று தனி வாழுமிடங்கள் (கன்டோன்மெண்டுகள்) உருவாக்கப்பட்டன. இருப்பினும் காலரா பாதிப்பு இந்தியப் படைவீரர்களை விட ஆங்கிலப்படை வீரர்களை அதிகம் பாதித்தது. 1867இல் வட இந்தியாவில் இருந்த ஆங்கில இராணுவ வீரர்களில் காலராவினால் இறந்தோர் எண்ணிக்கை ஆயிரத்துக்குப் பதினான்கு விழுக்காடாக இருந்தது. ஆனால் அதே இராணுவத்தில் பணியாற்றிய இந்தியர்களின் இறப்புவிகிதம் ஆயிரத்துக்கு மூன்று விழுக்காடாக இருந்தது. அது*

மட்டுமின்றி பல்வேறு நோய்த் தாக்குதலால் இறப்போரில் இந்தியப் படைவீரர்களின் எண்ணிக்கையை விட ஆங்கிலப் படைவீரர்களின் எண்ணிக்கையே அதிக அளவில் இருந்தது. இருப்பினும் காலரா நாடு என்ற பெயரை இந்தியா பெற்றது. ஐரோப்பாவிற்குச் செல்லும் இந்தியக் கப்பல்கள் தனிமைப்படுத்தி நிறுத்தி வைக்கப்பட்டன. காலனிய அரசோ நோய்த்தடுப்பிலும் இனச் சார்பு நிலைப்பாடையே எடுத்தது.

***சிபிலிஸ்:***

சபியா சாச்சி மஸ்தா என்பவர் சுரங்கங்கள் குறித்த கல்வியாளர். தான்பாத் நகரில் செயல்பட்டுவந்த கல்வி நிறுவனம் ஒன்றில் அறிவியல் தொழில் நுட்பம் குறித்த வரலாறு கற்பித்து வந்தார். இவர் எழுதியுள்ள கட்டுரை சிபிலிஸ் என்ற பால்வினை நோய் குறித்ததாகும். இந்நோயானது போரச்சுக்கீசிய வணிகர்களால் இந்தியாவில் பரவியது. இந்தியர்கள் இந்நோயை 'பரங்கி நோய்' என்றழைத்தனர். (இந்நோயால் தோன்றும் புண்களைப் பரங்கிப் புண் என்று தமிழர்கள் அழைத்துள்ளனர்.) இந்நோய் பத்தொன்பதாவது நூற்றாண்டு இந்தியாவில் பரவி ஏற்படுத்திய பாதிப்புகளை இந்நூலின் இரண்டாவது பிரிவில் இடம் பெற்றுள்ள நான்காவது கட்டுரை ஆராய்கிறது.

இந்நோயால் மிகுதியாகப் பாதிக்கப்பட்டவர்கள் ஆங்கில இராணுவத்தினர் என்று குறிப்பிடும் கட்டுரையாசிரியர்

காலனிய அரசு அதிகாரி களிடையிலான உரையாடலில் ஒரு பகுதியாக இது இருந்தது என்கிறார். இந்நோய்ப்பரவல் குறித்த அறிக்கை ஒன்று, போர்வீரர்களாக வரும் இளைஞர்கள் தம் பாலியல் வேட்கையைத் தணித்துக் கொள்வதற்கு சுய இன்பத்தில் ஈடுபடல் அல்லது பொருட் பெண்டிருடன் உறவுகொள்ளுதல் என்ற இரண்டு வழிமுறைகளே உள்ளதாகக் குறிப்பிட்டுள்ளது. மேலும் இவற்றுள் முதலாவது உடல் மற்றும் உள்ளச் சீர்குலைவுக்கும் இரண்டாவது அச்சமூட்டும் பால்வினை நோய்களுக்கும் வழிவகுக்கும் என்றும் குறிப்பிட்டுள்ளது. இந்நோய்ப்பரவல் படை வீரர்களிடம் மட்டுமின்றி உயர் இராணுவ அதிகாரிகளிடமும் இருந்துள்ளது.

இந்நோய்த்தாக்குதல் ஏற்படுத்தும் பாதிப்பு, இது குறித்த புள்ளி விவரங்கள், அறிக்கைகள் என்பனவற்றை அடிப்படையாக்க் கொண்டு இக் கட்டுரை எழுதப்பட்டுள்ளது.

**கிறித்தவத்தின் மருத்துவப் பணி:**

இதற்கு அடுத்த கட்டுரையாக அமைவது கனடா நாட்டைச் சேரந்த கிறித்தவ மறைப் பணியாளர்கள் (The Canadian Baptist Missionaries) 1870 முதல் 1952 வரை தெலுங்கு மொழி வழங்கும் பகுதியில் மேற்கொண்ட மருத்துவப் பணிகளை அறிமுகம் செய்கிறது. இக்கட்டுரையின் ஆசிரியரான ராஜ் சேகர் பாசு கொல்கத்தாவிலுள்ள ரவீந்திர பாரதி பல்கலைக்

*கழகத்தின் வரலாற்றுத் துறையில் பேராசிரியராகப் பணியாற்றியவர். தென் இந்தியாவில் கிறித்தவ மறைப்பணியாளர்களின் செயல்பாடுகள் குறித்த ஆய்வில் தனித்துவம் உடையவர்.*

*1870ஆவது ஆண்டில் விசாகப்பட்டினத்திலும் அதன் சுற்றுப் பகுதிகளிலும் இச் சபையினர் செயல்படத் தொடங்கினர். பின்னர் சில ஆண்டுகளில் கோகொனாடா என்ற பகுதியை மையமாகக் கொண்டு தம் நடவடிக்கைகளை விரிவுபடுத்தினர். மறைப்பணியாளர்களாகப் பெண்களை நியமித்து யேசுவின் நற்செய்தி ஏடுகளைக் கற்பித்ததுடன் உயர்சாதியினருக்கும் தாழ்த்தப்பட்ட சாதியினருக்கும் பள்ளிகளைத் திறந்தனர். 1890இன் தொடக்கத்தில் மருந்தகங்களையும் மருத்துவ மனைகளையும்,பெரும்பாலும் தீண்டாமைக் கொடுமைக்கு ஆட்பட்ட மக்களுக்காகத் திறந்தனர். இவற்றில் பெண் மறைப்பணியாளர்களை நியமித்தனர்.*

*இம் மருத்துவப் பணியில் அவர்கள் பல்வேறு இடையூறுகளை எதிர்கொண்டனர். 1897 இல் நிகழ்ந்த பஞ்சத்தை அடுத்து காலராவும் அம்மை நோயும் பரவின. இதனால் பாதிக்கப்பட்ட மக் களுக்கு உதவும் பணியில் ஈடுபட்ட அரசுக்குத் தம் மறைப்பணியாளர்களை அனுப்பி உதவினர். அத்துடன் தீண்டாமைக் கொடுமைக்கு ஆட்படுத்தப்*

*பட்டிருந்த மக்களுக்கு மருத்துவ உதவி வழங்கினர். உள்நாட்டுப் பகுதிகளில் மருந்தகங்களையும் மருத்துவமனைகளையும் நிறுவி அவற்றில் பணிபுரிய அனுபவம் வாய்ந்த மருத்துவப் பணியாளர்களை அனுப்பினர். 1898இல் மறைத் தளத்தின் அறிவுறுத்தலின்படி ஸ்மித் என்ற மருத்துவரும் செவிலியர் பயிற்சி பெற்றிருந்த அவரது மனைவியும் விசாகப்பட்டினத்திற்கு அருகிலுள்ள எல்லமஞ்சிலி என்ற ஊரில் சிறிய மருத்துவமனை ஒன்றை நிறுவினர். இது தொடங்கப்பட்ட சிறிது காலத்திற்குள்ளாகவே பெண் நோயாளிகளுக்கான சிறந்த மருத்துவமனை என்ற நற்பெயரை ஈட்டியது. இதன் விளைவாக சமூகத்தால் ஒதுக்கி வைக்கப்பட்ட வறுமை வாய்ப்பட்ட மக்கள் பிரிவைச் சேர்ந்த பெண்கள் கிறித்தவத்தைத் தழுவினார்கள்.*

*இவர்களின் மருத்துவப் பணியின் வளர்ச்சி நிலையாக பிதாப்புரம் என்ற ஊரில் பெதஸ்தா மருத்துவமனை என்ற பெயரில் மருத்துவமனை ஒன்று கனடா நாட்டைச் சேர்ந்த இரு பெண் மறைப்பணியாளர்களின் நிதியுதவியடன் உருவானது. 1904க்கும் 1908க்கும் இடைப்பட்ட காலத்தில் இந்தியாவிலும் கனடாவிலும் திரட்டப்பட்ட நிதியின் துணையுடன் பேறுகாலப் பிரிவு கட்டப்பட்டது. இதன் தொடர்ச்சியாக இம் மறைப் பணியாளர்கள் மேற்கொண்ட மருத்துவப் பணியின் வளர்ச்சி நிலையைக் கூறிச் செல்கிறார் இக் கட்டுரையாசிரியர்.*

கட்டுரையின் இறுதியில் தம் மருத்துவப் பணிக்கான சமூக ஒப்புதலைப் பெற இவர்கள் எவ்வளவு சிரமப்பட்டார்கள் என்பதையும் குறிப்பிட்டுள்ளார். மேற்கத்திய மருத்துவம் குறித்து பாரம்பரியமாக நிலவிவந்த வெறுப்பு, கிறித்தவ மறைப் பணியாளர்களுக்கு எதிராகப் பிராமணக் குருக்களும் தாழ்த்தப்பட்ட மக்கள் பிரிவினரின் மாந்திரிகர்களும் மேற்கொண்ட எதிர்ப்பிரச்சாரங்களுக்கு ஊடாகத்தான் இவர்கள் செயல்பட வேண்டியிருந்தது. தொற்று நோய்களுக்கு இவர்கள் அளித்த சிகிச்சையின் வெற்றி மேற்கத்திய மருத்துவத்தின் மீது பரவலாக நிலவிவந்த ஒவ்வாமையை நீக்கியுள்ளது. எல்லாவற்றிற்கும் மேலாக இவர்கள் தம்மை இந்தியர்களாகப் பாவித்து மருத்துவப் பணியை ஆன்மீகப் பணியாகவும் உலகளாவிய சகோதரத்துவமாகவும் நோக்கினர். காந்தியவாதி ஒருவர் குறிப்பிட்டது போன்று தம் பாவங்களைப் போக்க இந்தியப் பூசகர்கள் புனித நீர்நிலைகளில் தம் கரங்களைக் கழுவிக் கொண்டிருந்தபோது இவர்கள் நோயாளிகளின் காயங்களைக் கழுவிக் கொண்டிருந்தனர்.

**இந்திய விடுதலை இயக்கத்தில்:**

ஆங்கில ஆட்சிக்கெதிரான விடுதலை இயக்கத்தில் மக்களின் உடல் நலம் குறித்த சிந்தனைகள் இடம் பெற்றிருந்ததை காந்தியை முன்வைத்து அமித் மிஸ்ரா ஆராய்ந்துள்ளார்.

இவர் லக்னோ நகரில் செயல்பட்டு வரும் மருந்து ஆராய்ச்சி நிறுவனத்தின் விஞ்ஞானி.

தம் கட்டுரைக்கான சான்றுகளை மகாத்மா காந்தியின், தேர்வு நூல்களில் இருந்து திரட்டியுள்ளார். உணவூட்டம் (Nutrition), உடல் நிலை ஆக்க மேம்பாடு (Sanitation), தொற்று நோய்கள்(Infectious Diseases), எதிர்ப்பாற்றல் (Immunization), மருந்துச் சிகிச்சை, இயற்கைச் சிகிச்சை, என்ற உட்தலைப்புகளைக் கொண்டதாக இக் கட்டுரை அமைந்துள்ளது.

காந்தியின் இயற்கைச் சிகிச்சை முறையை வளரச்செய்தால் அது கிராம மேம்பாட்டுத்திட்டத்தை உள்ளடக்கியதாகும் என்ற கருத்தில் இவருக்கு உடன்பாடுள்ளது.

**பிற கட்டுரைகள்:**
கொல்கத்தா இரவீந்திர பாரதி பல்கலைக் கழகத்தின் வரலாற்றுத் துறை இணைப் பேராசிரியர் சுதா முகர்ஜி இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வங்கப் பெண்களின் உடல் நலம் குழந்தைகளின் உடல் நலம் எவ்வாறிருந்தது என்பது குறித்து எழுதியுள்ளார். பெண்கள் குழந்தைகள் உடல்நலம் பேணுவதில் ஐரோப்பியர்களின் தனியார் அமைப்புகளும் அரசு நிர்வாக அமைப்பும் வகித்த பங்களிப்பையும் ஆராய்ந்துள்ளார். இங்கிருந்த சுரங்கங்கள்,

சணல் ஆலைகள், மலைத்தோட்டங்கள் ஆகியனவற்றில் பணிபுரியும் பெண்களின் பேறுகால நலன் குறித்து அக்கறை காட்டுதல் ஓரளவுக்காவது நிகழ்ந்துள்ளது. பேறுகால இறப்பு, குழந்தை இறப்பு குறித்த புள்ளிவிவரங்களும் இக் கட்டுரையில் இடம் பெற்றுள்ளன.

கோட்டையம் மகாத்மா காந்தி பல்கலைக் கழகத்தின் வரலாற்றுத் துறையில் ஆய்வு மாணவராக இருந்த சுனிதா பி.நாயர் திருவிதாங்கூர் மாநிலத்தில் மேற்கத்திய மருத்துவமுறை பத்தொன்பதாவது நூற்றாண்டில் எவ்வாறு இருந்தது என்பது குறித்த சமூக வரலாற்றை எழுதியுள்ளார். அம்மைத் தடுப்பூசி அங்கு அறிமுகமானபோது அது கட்டாயமாக்கப்பட்டது. தடுப்பூசி போடுபவர்கள் ஒடுக்கப்பட்ட சாதியினருக்குப் போட மறுத்தனர்.

அம்மைத் தடுப்பூசி குத்திக் கொள்ள பல்வேறு காரணங்களைக் கூறி பெரும்பான்மையான மக்கள் தொடக்கத்தில் மறுத்துள்ளனர். பிராமணியத்தை இழந்து விடுவோம் என்று பிராமணர்கள் அஞ்சினர். பசு மாட்டிற்கு அம்மைக் கொப்பளம் வரச்செய்து அதிலிருந்து எடுக்கப்படும் அம்மைப் பாலை தம் உடலில் செலுத்திக் கொள்வது பசுவைப் புனித விலங்காகக் கருதும் தம் சமய நம்பிக்கைக்கு எதிரானது என்றனர். இத்தடுப்பூசி போட்டுக் கொள்வதால் பசுவின் குரல், உடல் அமைப்பு என்பன தம்மிடம்

தோன்றிவிடும் என்றும் மனிதத்தலை மாட்டின் தலையாக மாறிவிடும் என்றும் நம்பினர். கல்வியறிவு பெற்றிருந்தவர்களிட மிருந்தும் எதிர்ப்பு வந்தது. சிலர் தொழுநோய் சிபிலிஸ் போன்ற நோய்களை இத் தடுப்பூசி ஏற்படுத்தும் என்றனர்.

காலரா நோய் பரவியபோது நாட்டு வைத்தியர் ஒருவர் மருந்து தயாரித்துள்ளதாகக் குறிப்பிட்டுள்ளார். ஆங்கில மருத்துவமுறை படிப்படியாக அறிமுகமானதையும் தனியார்கள் குறிப்பாகக் கிறித்தவ அமைப்புகள் மருத்துவ மனைகளை உருவாக்கியதையும் குறிப்பிட்டுள்ளார். மற்றொரு பக்கம் கேரளத்தின் பாரம்பரிய வைத்திய முறைகளில் ஒன்றான ஆயுர்வேத வைத்திய முறை நவீனமாதலை நோக்கி நகர்ந்தது.

இந்திய தேசிய இயக்கத்தினர் உள்நாட்டு மருத்துவ முறைக்கு ஆதரவாகக் குரலெழுப்பத் தொடங்கினர். இதன் தாக்கத்தால்1907இல் அகில இந்திய ஆயுர்வேத காங்கிரஸ் என்ற அமைப்பு உருவானது. 1889இல் ஆயுர்வேத பாடசாலைகள் உருவாயின. 1895 - 96இல் இப் பள்ளிகளில் பயின்று தேர்ச்சி பெற்றவர்களுக்கு மருத்துவ மானியம் வழங்கப் படலாயிற்று. 1917-18 இல் ஆயுர்வேத மருத்துவத்திற்கென்று தனித்துறை தொடங்கப்பட்டு ஆயுர்வேத இயக்குநர் என்ற பதவியும் உருவாக்கப்பட்டது.

*இத்துறை ஆயுர்வேத பாடசாலைகளின் பாடத் திட்டத்தை நவீனப் படுத்தியது. ஆயுர்வேத மருந்தகங்களும் மருத்துவ மனைகளும் செயல்பட்டு வந்தன. காலனிய ஆட்சியும் கூட ஆயுர்வேத மருத்துவ முறையின் வளரச்சியில் அக்கறை காட்டியுள்ளது.*

*மேற்கத்திய மருத்துவ முறை குறித்த இந்தியர்களின் நிலைப்பாடு மும்பை மாநிலத்தில் 1900-20 காலகட்டத்தில் எவ்வாறிருந்தது என்பதை மும்பை பல்கலைக் கழகத்தின் வரலாற்றுத் துறைப் பேராசிரியர் மிருதுளா ராமண்ணா ஆராய்ந்து எழுதியுள்ளார்.*

*நூலின் இறுதிக் கட்டுரை ஜவகர்லால் நேரு பல்கலைக் கழகத்தில் சமூக மருத்துவம் மக்கள் நலம் குறித்த மையத்தில் பணியாற்றி வரும் மோகன் ராவ், உலக வங்கியின் உடல்நல அரசியல் குறித்து ஆராய்கிறார். இக் கட்டுரையில் இடம் பெறும் வரலாற்றுச் செய்திகளில் இருந்து பலரும் நழுவிச் செல்வதைக் கருதியதாலோ என்னவோ இக் கட்டுரைக்கு 'தவிர்க்கும் வரலாறு' (Eliding History) என்று தலைப்பிட்டுள்ளார். கட்டுரையின் இறுதியில் அவர் வெளிப்படுத்தியுள்ள கருத்துக்களின் ஒரு பகுதி வருமாறு:*

*"உலக முழுவதும் மட்டுமல்லாது நாடுகளுக்குள்ளும் 1980 முதல் ஏற்றத்தாழ்வுகள் கணிசமாக அதிகரித்துள்ளமை மிகத் தெளிவாகத் தெரிகிறது. இதனால் வறுமை அதிகரித்துள்ளது.*

இதன் காரணமாகக் காலனியம் முடிவுற்ற மூன்றாம் உலக நாடுகளிலும் மேற்கு உலக நாடுகளில் உருவான மக்கள் நல அரசுகளிலும் சுகாதார மற்றும் மருத்துவ முன்னேற்றங்கள் முறியடிக்கப்பட்டுள்ளன. உலக முழுவதும் மனிதரின் சராசரி ஆயுள் குறைந்துள்ளதுடன் குழந்தை மற்றும் சிறார் இறப்பு விகிதமும் அதிகரித்துள்ளது."

"அடித்தளமக்களுக்குத் தொழில்நுட்பத்துடன் கூடிய மருத்துவ முன்னேற்றத்தை விட வாழ்க்கைத்தர முன்னேற்றம் அதிமுக்கியத்துவம் உடையது என்ற புரிதல் அவசியம். முன்பு இந்தியாவில் பிற அம்சங்களுடனும் ஒருங்கிணைந்த முன்னேற்றத்துடனும் உடல்நலனை இணைத்துப் பார்க்கும் போக்கு இருந்தது."

"இன்றைய புதிய முயற்சிகள் உலக வங்கியின் வழிகாட்டலில் பொதுச் சுகாதாரம் குறித்த பங்கையும் கண்ணோட்டத்தையும் வெறும் தொழில் நுட்பம் சாரந்தவையாக மாற்றிவிட்டன."

"அதே சமயம், மக்களின் சுகாதார நலனைத் தீர்மானிப்பதில் இதுவரை அரசுக்கு இருந்து வந்த பங்களிப்பு இன்று பெருமளவில் குறைக்கப் பட்டுவிட்டது. வெறும் தொழில் நுட்ப உத்திகளைக் கொண்டு செயல்படும் சுகாதார மேம்பாட்டுத் திட்டங்களின் பயன் எப்போதும் நீடித்து நிற்பதில்லை. இந்தியாவில் செயல்படுத்தப்பட்ட மலேரியா

ஒழிப்புத் திட்டம் இதை நிருபித்துள்ளது. மனித நாகரீக வளர்ச்சியின் கண்ணாடிகளில் சுகாதார முன்னேற்றமும் ஒன்று. அதில் இன்று தெரிவது உயர்வாகவும் இல்லை, மின்னுவதாகவோ மிளிர்வதாகவோ இல்லை."




**நூல்:**

இந்தியாவில் நோய்களும் மருத்துவமும் - ஒரு வரலாற்றுப் பார்வை: தீபக் குமார், பதிப்பாசிரியர் (2012)

*Disease & Medicine in India, A Historical Overview. (Deepak Kumar, Editor) Tulika Books, New Delhi*

## 22. ப. சிங்காரம் எழுதிய "கடலுக்கு அப்பால்" என்ற புதினம் — மதிப்புரை

— தி.ந.ச.வெங்கடரங்கன்

கடந்துவிட்ட வேறொரு நூற்றாண்டிற்குச் சென்று அந்தச் சூழலில் வாழ வேண்டுமென்றால் அறிவியலால் காலக் கப்பலேதையும் தரமுடியாது, ஆனால் அதற்கு மாற்றாக அந்தக் காலத்தில் வாழ்ந்த திறமையான எழுத்தாளர்களின் படைப்புகளால் முடியும். அப்படியான ஒரு புதினம் தான் திரு ப.சிங்காரம் அவர்கள் 1950 இல் எழுதிய "கடலுக்கு அப்பால்".




என்ன ஒரு மகத்தான படைப்பு இது!!!

முதல் வரியிலேயே 1945 இல் தமிழர்கள், அதுவும் செட்டிமார்கள் கொடிகட்டிப் பறந்த மலேயா நாட்டின் பினாங்கு நகரத்திற்கு நம்மைப் புலம் பெயர்த்து, அங்கேயே வசிக்க வைக்கிறார் ஆசிரியர். ஆங்கிலேயர்கள் வசம் இருந்து, ஜப்பானியர்களிடம் சென்று, ஆங்கிலேயர்களிடமே திரும்பும் சூழ்நிலையில் (1941-1945) செல்கிறது கதை.

பினாங்கு நியூ லைன் வீதியில், போருக்கு முன்பு பினாங்கு தெருவிலும் "லேவாதேவி", அதாவது வட்டித் தொழில், செய்து கொண்டிருக்கும் வானாயீனா என்கிற ஆ.சி.வயி.வயிரமுத்துப் பிள்ளையவர்களின் மார்க்காவில் "அடுத்தாள்" (மேலாள் என்கிற மேனேஜருக்கு கீழே இருக்கும் ஆள், பெட்டியடிப் பையன்களுக்கு மேலே இருப்பவன்) வேலையில் இருக்கும் "செல்லையா" என்பவன் தான் கதையின் நாயகன். கதை ஆரம்பிக்கும் போது வேலையைவிட்டு நேதாஜி அவர்களின் கட்டளையை ஏற்று ஐ.என்.ஏ (I.N.A.) படையில் லெஃப்டினன்ட் ஆக இருக்கிறான். போர் நிலைமை மாற, நேதாஜி அவர்களும் திடீரென இறந்துவிட, தமிழர்கள் பட்டாளத்திலிருந்து விலகி, பொது மக்களாக மீண்டும் சிவில் வாழ்க்கைக்கு வருகிறார்கள். "கோலாமுடா" முகாமிலிருந்து திரும்ப வரும் வழியில் ஆங்கிலேயர்களிடம் பிடிபடுவோமோ அல்லது உடனிருந்த ஜப்பானியர்களால் தாக்கப்படுவோமோ அல்லது பாசிச எதிர்ப்பு சீன போராளிகளால் சுடப்பட்டு இறப்போமோ

என்று தெரியாமல், ஆனால் தைரியமாக காடுகளைக் கடந்து நகரத்திற்கு வந்து வெவ்வேறு திசைகளுக்குச் சென்று, மாறி இருந்த (மலேயா) நகரத்து வாழ்க்கைக்குள் உட்புக முயல்கிறார்கள். திரும்ப வந்த (நம்) செல்லையாவுக்கு அவனின் பழைய வேலை கிடைக்கிறதா? தான் காதலித்த முதலாளியின் மகள் "மரகதம்" கிடைத்தாளா என்பதுதான் மீதிக் கதை.

கதை பினாங்கு நகரத்தைச் சுற்றி நடந்தாலும், மலாய் மற்றும் சீன மொழி வசனங்கள் வந்தாலும் தமிழ்மணத்திற்குக் குறையேயில்லை. வாழ்க்கையில் சோகமான சூழ்நிலையில் இருக்கும் நாயகனிடம் அவனது நண்பன் "மாணிக்கம்" அறிவுரை கூறுவது சாதாரணமாக இல்லாமல் - சிலப்பதிகார வசனங்களுடன், தாயுமானவரின் கதைச்சுருக்கத்தோடு அவரின் பாடல் வரிகளோடு, திருமந்திரச் செய்யுள்களும் சேர்ந்து தங்குதடையின்றி, எந்த விதத்திலும் நமக்குச் சோர்வைச் சேர்க்காமல், மடைதிறந்த வெள்ளம் போல் வருகிறது. கதையில் போர் உண்டு, நட்பு உண்டு, பினாங்கு நகரக்குறிப்பு உண்டு, காதல் உண்டு, இறப்பு உண்டு, சோகமும் உண்டு. சொந்த மண்ணை, உறவினர்களை, மனைவியை, பெற்றெடுத்த பிள்ளைகளையெல்லாம் விட்டுவிட்டு, அயல்நாட்டில் தங்களின் உழைப்பை மட்டுமே நம்பி வந்து, அந்தக் காலத்தில் வேலை செய்த பல்லாயிரம்

தமிழ் இளைஞர்களின் வாழ்க்கையை நமக்குப் படம்பிடித்துக் காட்டுகிறது "கடலுக்கு அப்பால்".

கதையில் துரோகிகள் கிடையாது. முதலாளிகூட, தன் ஊர், தன் சாதிப் பயல்கள் என்று செல்லையா உட்பட எல்லோரையும் நல்ல முறையில் தான் நடத்துகிறார். இளைஞர்களின் பெற்றோர்களிடம் இருந்து அவர்களை அயல்நாட்டிற்கு முதலாளி(கள்) தான் தங்கள் பொறுப்பில் கூட்டிக்கொண்டு வருகிறார்கள், அந்தக் கடமை உணர்ச்சித் தெரிகிறது. இதெல்லாம் சரியாக, சட்டங்கள் இல்லாமல் நடப்பது, ஊர் மற்றும் சாதி இணைப்பால் என்று புரிந்து கொள்ள முடிகிறது. இதெல்லாம் சரி என்பதில்லை, இப்படித் தான் நடந்திருக்கிறது , அதைத் தெரிந்து கொள்வது அவசியம். இந்தச் சூழ்நிலையில் கூட உழைப்பிற்கும், நேர்மைக்கும், திறமைக்கும் அதிகமாக மதிப்பு இருந்திருக்கிறது. பெட்டியடிப் பையனாக வெளிநாட்டிற்கு வந்து, அடுத்தாளாகி, மேலாளாகி, பின் முதலாளியானவர்கள் பலர் என்று கதையில் வருகிறது. இவர்களின் அயல்நாட்டுக் காசில் தான் அப்போதைய தமிழ்நாட்டின் பல ஊர்கள் பிழைத்திருந்திருக்கிறது. என் கொள்ளுத்தாத்தாகூட முதல் உலகப் போர் போது 'மலேயா' கோட்டை வியாபாரம் செய்ய மலாயே சென்று திரும்ப வரவேயில்லை என்று கேள்வி.

*புதினத்தில் வரும் பல தெருக்களையும், இடங்களையும், கூகிள் வரைபடத்தில் தேடித் தேடிப் பார்த்தேன், பல இடங்கள் எழுபது ஆண்டுகள் கடந்தும் இன்றும் இருக்கிறது, எவ்வளவு மாறியிருக்கிறது என்று மலேசியா நண்பர்கள் தான் சொல்லவேண்டும். வெறும் 200 பக்கங்களில் நாற்பதுகளில் இருந்த பினாங்கு நகரத்துத் தமிழர்களின் வீதிகளில் நம்மையும் கூட அழைத்துக் கொண்டு நடமாடுகிறார் ஆசிரியர். அது அருள்மிகு தண்ணீர்மலையான் கோயில் ஆகட்டும், மலாய் தேசத்து உணவாகட்டும், சீன தின்பண்டம் ஆகட்டும், ஜப்பானியர்களோடு காட்டில் நடக்கும் சண்டை ஆகட்டும், நாட்டை விட்டு சொந்தப் பந்தங்களை விட்டுப் பிழைப்புக்காக வந்து இருக்கும் இடத்தில் தமிழர்களின் ஆசாபாசங்கள் ஆகட்டும், எல்லாவற்றையும் கொஞ்சக்கூடச் சுவை குறையாமல் கண்முன்னே கொண்டுவந்து விடுகிறார் திரு. சிங்காரம் அவர்கள். அவரின் அன்றைய காலத்தின் பெண் கதாப்பாத்திரங்கள் தனியாக தெரிகிறார்கள், அவர்களுக்கு ஆசை இருக்கிறது, அது நிறைவேற முடிகிறதோ இல்லையோ, அவர்கள் படித்தும் இருக்கிறார்கள். தமிழில் வெவ்வேறு காலத்திற்கு ஏற்ப நாவல்கள் பல வந்திருந்தாலும், சரித்திரச் சூழலில் ஒரு கற்பனை கதை என்பது மிகக் குறைவு, அதற்காகவே இந்த நாவல் படிக்கப்பட வேண்டிய ஒரு நூலாக ஆகிவிடுகிறது. திரு ப. சிங்காரம் அவர்களின் இரண்டாவது புனைவான "புயலிலே ஒரு தோணி" புத்தகத்தை அடுத்து*

படிக்க விரும்புகிறேன் - இந்த இரண்டு நாவல்களைத் தவிர வேறு எதுவும் அவர் எழுதவில்லை என்பது தமிழர்களின் இழப்பு.




இந்தப் புத்தகத்தை வாங்கி தவறாமல் முதல் ஏழு பக்கங்களில் வரும் திரு ப. சிங்காரம் அவர்களை, *1984* இல் திரு ந.முருகேசபாண்டியன் சந்தித்த குறிப்பைப் படித்துவிட்டு கதைக்குள் செல்லவும், அந்த சந்திப்பு குறிப்பு நம்மை வியப்பில் ஆழ்த்தி விடுகிறது. புத்தகத்தின் கடைசியில் வரும் திரு. சிங்காரம் அவர்களின் வாழ்க்கைக் குறிப்பைப் படித்தால் இவ்வளவு எளிமையாக ஒரு மனிதர் எப்படி

*வாழ்ந்திருக்கிறார் என்று ஆச்சரியமாக இருக்கிறது. 1920 இல் பிறந்த திரு சிங்காரம், நாற்பதுகளில் பல ஆண்டுகள் இந்தோனேசியாவிலும் மலேசியாவிலும் வேலைக்காகச் சென்றிருக்கிறார். அங்கே அவர் பார்த்துப் பழகிய மக்களை உள்வாங்கிய நகர வீதிகளைக் கற்பனையோடு கலந்து நமக்கு விருந்து அளித்துள்ளார். இந்தியாவிற்குத் திரும்பி வந்த சிங்காரம் அவர்கள், நாற்பது ஆண்டுகளுக்கு மேலாக தினத்தந்தி நாளிதழில் செய்தி ஆசிரியராக இருந்திருக்கிறார். இந்தியாவில் இருந்த ஐம்பது ஆண்டுகளும் தனக்கென்று ஒரு வீடுகூட இல்லாமல் ஒய்.எம்.சி.ஏ. விடுதியில் தான் இருந்திருக்கிறார்.*

*புத்தகத்தைக் கீழே வைக்காமல் ஒரே அமர்வில் படித்த நான் எழுந்தபோது கண்களிலிருந்து இரண்டொரு கண்ணீர்த் துளிகள் வந்திருந்தன!!!*

## 23. கீழடி வைகை நாகரிகம் — நூல் மதிப்புரை

— *அருள் மெர்வின்*




*நூல்:*

***கீழடி வைகை நாகரிகம் – உலக நாகரிக வரிசை – 1***

*ஆசிரியர்: முனைவர். க. சுபாஷிணி*

*பதிப்பு: 2022, பயில் பதிப்பகம்*

*நூல் கிடைக்குமிடம்:*

*https://www.commonfolks.in/books/d/kongunaattu-kalvettugal*

*குழந்தைகளுக்காகப் புத்தகங்கள் எழுத ஆரம்பிக்கப்பட்டது கடந்த இருநூறு அல்லது முந்நூறு வருடங்களுக்கு முன்பிருந்துதான் என்கிறார்கள். மதங்களை ஒட்டியே வளர்ந்த ஆசிய, இந்திய, இடைக்கால ஐரோப்பாவின் குழந்தைகளின் நிலை பரிதாபமானது. இந்த காலகட்டத்தில் பிரபலமாக இருந்த எந்த மதத்தின் புனித நூல்களையும் குழந்தைகள் கையில் கொடுத்து வாசிக்க வைக்க முடியாது. அடல்ட்ஸ் ஒன்லி விஷயங்கள் அமோகமாக உண்டு. எந்த மதமும் விதிவிலக்கல்ல. ஒரு புனித நூலை வாசித்துவிட்டு முலை என்றால் என்ன என்று என் சிறுவயதில் பெரியவர்*

ஒருவரிடம் கேட்ட போது வீட்டின் மூலையைக் காட்டிவிட்டு ப்ரிண்டிங் மிஸ்டேக் என்று ஒதுங்கிவிட்டார்.

ஆனால் இதற்கு வேறு ஒரு தியரி சொல்கிறார்கள். குழந்தைகள் பெரியவர்கள் என்று மன வளர்ச்சியைப் பிரித்துப் பார்க்க வேண்டும் என்ற சிந்தனை அந்த காலகட்டங்களில் இல்லை. பன்னிரண்டு வயதிலேயே கண்ணகிக்குக் கல்யாணம் செய்து வைத்தார்கள் (ஈர் ஆறு ஆண்டு அகவையாள்). நான்கு வயதிலேயே நிச்சயதார்த்தம் செய்த கதையெல்லாம் இடைக்கால ஐரோப்பாவில் உண்டு. குழந்தைகளுக்கான பல கதைகள் எழுத்தாக இல்லாவிட்டாலும் வாய்வழியாக இருந்தன என்கிறார்கள். அது விவாதத்திற்குரியது. என்னைப் பொறுத்தவரைக் குழந்தைகளை ஒரு பொருட்டாக மதித்த சமூகம் விதிவிலக்காக எங்காவது இருந்திருக்கலாம் கடந்த ஆயிரத்து ஐந்நூற்றிலிருந்து முந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட வரலாற்றில் (யப்பா...எவ்ளோ டிஸ்க்ளெய்மர் போட வேண்டியிருக்கிறது).

குழந்தைகளுக்காக எழுத வேண்டும், அதை எப்படி எழுத வேண்டும் என்பது மனிதர்கள் மிகவும் காலம் தாழ்த்திக் கண்டுபிடித்தது. குழந்தைகளுக்காக வயது வந்தவர்கள் எழுதுவது மிகவும் கடினமானது. லாலிபப் கேட்கும் குழந்தையின் வாயில் சிக்கன் லாலிபப்பைச் செருக முடியாது.

குழந்தைகளுக்கு எழுதுவதற்கு நாமும் குழந்தைகளாக வேண்டும். குழந்தைகள் எந்த கண்ணோட்டத்தில் வாசிப்பார்கள் என்ற புரிதல் வேண்டும். நமக்குள் இருக்கும் நம் சிறுவயது ஞாபகங்களை உணர்வுகளைக் கொண்டு எழுத வேண்டும். நேற்று நடந்ததே ஞாபகம் இல்லாத கூட்டம்தான் பெரும்பான்மையாக (உதாரணமாக, ஓட்டுப்போடப் போகும்போது) உள்ள சமூகத்தில் குழந்தைப்பருவ ஞாபகங்களுக்குள் சென்று குழந்தைகளுக்காக எழுதுவது என்பது பாரதி, கவிமணி போன்ற வெகு சிலரே கலக்கிய களம்.

அதில் கீழடி போன்ற சிக்கலான விஷயங்களைப் பற்றி குழந்தைகளுக்காக எழுதுவது இன்றைய இசையமைப்பாளர்களின் இசைக்குப் பாடல் எழுதுவதை விடக் கடினமானது. குழந்தைகளின் மனதின் இசைக்குப் பொருந்த வேண்டும். அதே சமயம் தொல்லியலையும், கீழடியில் கண்டுபிடிக்கப்பட்ட பொருட்களின் முக்கியத்துவத்தையும், அங்கே வாழ்ந்திருந்த மக்களின் எழுத்தறிவையும், கரிம காலக் கணிப்பு ஆய்வு போன்ற அறிவியல் தகவல்களையும், பிம்பிலிக்கு பிலாப்பி என்று அங்கே தோண்டக் காசு தரமாட்டேன் என்ற அரசியலையும்...குழந்தைகளின் மொழியில் எழுத வேண்டும்.

முனைவர் க. சுபாஷிணியின் குழந்தைகளுக்கான கீழடி பற்றிய இந்த புத்தகத்தை இதுவரை குழந்தைகளுக்காக உலக வரலாற்றில் எழுதப்பட்ட தொல்லியல் சம்பந்தப்பட்ட புத்தகங்களில் ஒரு மைல்கல்லாகப் பார்க்க வேண்டும். ஆள் வளர்ந்துவிட்டாலும் பள்ளிக்கூடத்தில் படித்த வரலாறுகூட மறந்து போய் இன்று ஃபேஸ்புக் பார்வேர்டுகள்தான் தங்கள் அறிவுக்கண்ணைத் திறக்கின்றன என்று பிரமித்துப் போயிருக்கும் சமூக ஊடக முதியவர்களும் வாசிக்க வேண்டும். இந்த புத்தகம் பள்ளிக்கூடங்களிலும், இந்த புத்தகத்தின் முக்கிய கதாபாத்திரமான ஔவை என்ற சிறுமி நம் வீடுகளிலும் தேவை.

## 24. ராஜராஜனின் கொடை — நூல் மதிப்புரை

— சுந்தர் பரத்வாஜ்

*Financial management for non financial managers என்ற நூலை 30 ஆண்டுகளுக்கு முன் படித்திருக்கிறேன். சிறப்பான தகவல்கள் அடங்கியது. அதிலிருந்தே வரலாற்றாசிரியராகப் படித்து வராமல் வரலாற்றின் மீது கொண்ட காதலால் வரலாற்றைத் தேடி அறிந்து நம்முடனும் பகிர்ந்துகொள்ளும் ஆர்வலர்கள், அறிஞர்கள் இவர்களது கருத்து மிகவும் என்னை ஈர்க்கும். நானும் கட்டிடம் சார்ந்த தொழில் செய்யும் ஒரு வரலாற்று ஆர்வலர். இந்த வகையில் பேராசிரியர் நா கண்ணன், கணினி முனைவர் சுபாஷினி அவர்கள் நிறுவிய தமிழ் மரபு அறக்கட்டளையின் தோற்றமும் வளர்ச்சியும் வியக்கத்தக்கது. பரந்து விரிந்து பல்வேறு அறிஞர்களையும் உள்ளடக்கி இன்றைய மற்றும் நாளைய பன்னாட்டு இளைஞர்களுக்கு நமது தமிழ் மொழியின் சிறப்பையும் தமிழ் வரலாற்று ஏற்றத்தையும் பகிர்ந்தளித்து தன்னலமில்லாத சிறந்த சமுதாய வளர்ச்சி பணியினை தொடர்ந்து செய்து கொண்டிருக்கிறார்கள்.*

*என்னைப் பொருத்தவரை ராஜராஜன் ஒரு உன்னதத்தின் உச்சியை உடனடியாக நமக்குள் எழுப்பும் தீப்பொறி.*




**"ராஜராஜனின் கொடை"**
*முனைவர் க. சுபாஷிணி*
*பதிப்பு: 2022, தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகம்*

*நூல் கிடைக்குமிடம்:*
***https://www.commonfolks.in/books/d/rajarajanin-kodai***

*டாக்டர் சுபாஷிணி எழுதிய ராஜராஜனின் கொடை நூல் அவரது கணினி பின் புலம் காரணமாக லேஅவுட் திட்டமிடல் - செயல்படுத்தல் எதிர்கால சிந்தனை போன்றவற்றுடன் மிக அருமையாக வெளிவந்திருக்கிறது. இதனை "மாற்றுரைத்து" சொக்கத்தங்கம் என வியக்கிறார் நமது பெருமதிப்பிற்குரிய தஞ்சைப் பல்கலைக்கழக பேராசிரியர் முனைவர் செல்வகுமார் அவர்கள். அப்படி என்ன எழுதி இருக்கிறார்கள் என்று பார்க்க, படிக்கத் துவங்கினால் பிரமித்துப் போகிறோம். ராஜராஜனின் கொடை அண்மைக்கால ஆய்வு அறிஞர்களின் பெரும் கொடையை*

உள்ளடக்கிய சிறப்பான முன்னெடுப்பு. இனி அந்த நூலைப் பற்றிய எனது பார்வையைப் பகிர்ந்து கொள்கிறேன்.

ராஜராஜனின் கொடை; எளிமையான தலைப்பில் தமிழ் மரபு அறக்கட்டளை நிறுவுனர் டாக்டர் சுபாஷிணியின் கருத்தாழம் கொண்ட ஆய்வுப் பேழை. செய்வன திருந்தச் செய் என்ற கொள்கைப் பிடிப்பில் தீவிரமானவராய் ஒளிர்கிறார். கணினி சார்ந்த ஆய்வுப் பட்டம் பெற்ற சுபாஷிணியின் பார்வை - விருப்பு வெறுப்பற்ற - சுத்திகரிக்கப்பட்ட - தமிழ் கூறும் நல்லுலகம் சார்ந்த சமகால வரலாற்றுப் பார்வை. பதிப்புரையிலேயே அசத்துகிறார் முனைவர் தேமொழி. அணிந்துரையில் அருமையான கருத்துக்களை உதிர்க்கிறார் தஞ்சை பல்கலைக்கழக பேராசிரியர் முனைவர் செல்வகுமார் அவர்கள்.

உலகத்தமிழ் மாநாட்டை ஒட்டி டாக்டர் எம்ஜிஆர் அவர்களால் நிறுவப்பட்ட தஞ்சை தமிழ் பல்கலைக்கழகம் தமிழக வரலாற்றிற்கு பெரும் பங்களிப்பை ஈந்துள்ளது. குறிப்பாக பேராசிரியர் முனைவர் ராஜவேல், முனைவர் ஜெயக்குமார், முனைவர் செல்வகுமார் காலஞ்சென்ற எனது அருமை நண்பர் அதியமான் ஆகியோரின் பங்களிப்பு போற்றத் தகுந்தது. அதிலும் டாக்டர் ஜெயக்குமார் அவர்களின் நாகப்பட்டினம் புத்த விகாரம் குறித்த கடல் சார்ந்த ஆய்வுத் தகவல்கள் மிகவும் சிறப்பானவை.

சிங்கப்பூரில் நடந்த தமிழக வரலாற்று ஆய்வு மாநாட்டுக் குறிப்புகள் " நாகப்பட்டினம் - சுவர்ண தீபம்" என்ற தொகுப்பாக ஆங்கிலத்தில் வெளியானதில் டாக்டர் ஜெயக்குமார் அவர்களின் சூடாமணி விகார ஆய்வுக் கருத்துகளும் அடக்கம். அனைவரும் அறிந்துகொள்ள வேண்டிய தகவல் களஞ்சியமான இத்தகைய ஆய்வு கருத்துக்கள் பலரையும் சென்று சேரவில்லையே என்ற கவலை என் போன்ற வரலாற்று ஆர்வலர்களுக்கு இருந்து வந்தது. அதனைத் துடைத்தெறிந்து கடந்த 30 ஆண்டுகளுக்குள் தமிழக வரலாறு; குறிப்பாகச் சோழ வரலாறு, அதிலும் ராஜராஜன் - ராஜேந்திரன் - குலோத்துங்கன் ஆகிய மன்னர்களின் பௌத்தம் சார்ந்த கொடைகளைத் தேர்ந்தெடுத்து அவை அடங்கிய பெரிய லெய்டன் - சிறிய லெய்டன் செப்பேடுகளை - அவை பாதுகாப்பாக வைக்கப் பட்டுள்ள நெதர்லாந்து பல்கலைக்கழகத்தின் அனுமதியுடன் ஆய்வு செய்து அருமையான புகைப்படங்களுடன் சுவைமிக்க வரலாற்றுத் தரவுகளை நமக்காகத் தொகுத்துப் பகிர்ந்துள்ளார் டாக்டர் சுபாஷிணி அவர்கள்.

பொ.ஆ. 1006ல் ஸ்ரீவிஜய வணிக குழுக்களின் புத்தமத வழிபாட்டிற்காக நாகப்பட்டினம் அருகே ஆனைமங்கலம் என்ற கிராமம் இறையிலியாக ராஜராஜனால் கொடுக்கப்பட்டுள்ளது. ஸ்ரீவிஜய அரசர்கள் அங்கு ஒரு புத்த

விகாரம் எழுப்பி வழிபட்டனர். ஸ்ரீவிஜயம் மற்றும் சீன வணிகர்கள் நாகப்பட்டினம் பின் இலங்கை எனப் பௌத்த யாத்திரை மேற்கொண்டனர். ஆயினும் ஸ்ரீவிஜய மன்னர்கள் சீனப் பேரரசரிடம் சோழ மன்னர் பரம்பரை தங்களுக்குள் அடங்கியது என்ற வகையில் திரித்துக் கூறிய தகவல்கள் மாமன்னன் ராஜேந்திர சோழனின் செவிகளை எட்டியது. எனவே 1018ல் ஸ்ரீவிஜயத்தின் மீது படை எடுத்து அதனை சோழப்பேரரசின் சிற்றரசாக ஒடுக்கினான். இதற்கான கல்வெட்டு ஆதாரம் தமிழகத்தில் கிடையாது. ஆனால் சீன வரலாற்றுப் பதிவுகளில் உள்ளது.

இவை போன்ற புதிய தரவுகளை சாஸ்திரி, பண்டாரத்தார் போன்ற அறிஞர்களுக்குப் பிறகு வரலாற்றறிஞர் மகாலிங்கம், டி என் ராமச்சந்திரன், மயிலை சீனி வேங்கடசாமி, முனைவர் ஜெயகுமார் போன்றோரின் அண்மைக்கால ஆய்வுகளைத் தொகுத்து எடுத்துச் சிறப்பாக வழங்கியுள்ளார் டாக்டர் சுபாஷிணி அவர்கள். தொடர்ந்து தமிழகம் வந்து இத்தகைய லெய்டன் செப்பேடுகள் கண்டிப்பாகத் தமிழகம் வந்து சேர வேண்டும் என்ற கோரிக்கையையும் தமிழக தொல்லியல் துறை அமைச்சரிடம் கொடுத்து அது தமிழக அரசு மானிய கோரிக்கை அரசாணையாக இடம் பெற்றுவிட்டது. தொடர்ந்து நெதர்லாந்து அரசும் காலனியாதிக்க நாடு வேறு நாட்டிலுள்ள தனது கலைச்செல்வத்தை முறையாக உறுதி செய்தால் கோரிக்கை விடுக்கும் நாட்டிற்குக் கொடுப்பதற்கான

வழிமுறைகளை ஆய்வு செய்ய ஒரு குழு அமைத்துள்ளது நமக்குக் கூடுதல் மகிழ்ச்சியை அளிக்கிறது.

பன்னாட்டு அமைப்பான தமிழ் மரபு அறக்கட்டளையின் நிறுவுனர் டாக்டர் சுபாஷிணி அவர்களின் செய்வன திருந்தச் செய் என்ற கோட்பாட்டினால் லெய்டன் செப்பேடுகள் ஒரு நாள் சென்னை வந்து சேரும் என்பதில் நமக்கு ஐயமில்லை. டாக்டர் சுபாஷிணி அவர்கள் வருடிப் பார்த்து மகிழ்ந்த அந்த செப்பேடுகளை ஆயிரமாண்டு இன்ப நினைவலைகளுடன் நாமும் வருடிப் பார்க்கும் நாள் இதோ வந்து கொண்டே இருக்கிறது. அவரது எழுத்திற்கும் செயல்பாட்டிற்கும் நமது மனமார்ந்த வாழ்த்துக்கள் சிரம் தாழ்ந்த வணக்கங்கள்.

— சுந்தர் பரத்வாஜ்
பொன்னியின் செல்வன் குழும தோற்றுநர்

## 25. திருவள்ளுவர் யார்? — நூல் மதிப்புரை

— *அருள் மெர்வின்*

நூல் :

***"திருவள்ளுவர் யார்?"***

*கட்டுக்கதைகளைக் கட்டுடைக்கும் திருவள்ளுவர்*

*ஆசிரியர்: கௌதம சன்னா*

*பதிப்பு: 2021, தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகம்*

*நூல் கிடைக்குமிடம்:*

*https://wisdomkart.in/books/thiruvalluvar-yaar/*

***திரிவள்ளுவர்:***

*திருவள்ளுவர் ஏறக்குறைய இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னால் வாழ்ந்தார். பாவப்பட்ட மனிதர். ஏறக்குறைய ஆயிரம் வருஷங்களுக்கு முன்னால் தொலைந்து போய்விட்டார். சரியாக என்று வாழ்ந்தார், எப்படி வாழ்ந்தார், என்று காணாமல் போனார் என்று தெரியாது. இன்று அவரை கோயம்பேடு பஸ்டாண்டில் தேடிக் கண்டுபிடித்து வீட்டுக்குக் கூட்டிவரச்சொன்னால் கொஞ்சம் கஷ்டம்தான். கையில்*

கிழிந்த போட்டோ கூட கிடையாது. அவர் எழுதிய பொத்தகம் மட்டும் கையில் உள்ளது. எங்கிருக்கிறார் என்று விசாரித்தால் நம் மக்கள் பல கதைகள் சொல்வார்கள். நேற்று கபாலீஸ்வரர் கோவிலில் அர்ச்சனை செய்ததைப் பார்த்தேன் என்பார்கள். சாந்தோம் வாசலில் தோமையாருடன் பார்த்தேன் என்பார்கள். சமணக் கோவிலில் அம்மணமாக உட்கார்ந்திருக்கிறார் என்பார்கள். வடபழனியில் ஒரு பாரில் நேற்று கட்டிங்க் போட்டுக்கொண்டிருந்தார் என்பார்கள்.

அந்த காலத்தில் இந்தியாவிற்கு வந்த ஓர் ஆங்கிலேயர் சொன்னது, 'இவர்களிடம் உங்கள் வரலாறு என்ன என்று கேட்டால் ஒரு கதையைச் சொல்ல ஆரம்பித்துவிடுவார்கள்'. கதை ஏதாவது ஒரு கடவுளிலிருந்து ஆரம்பிக்கும். அந்த கடவுளைக் கண்டுபிடித்தால்தான் கதையை நிரூபிக்க முடியும். இப்படி ஓர் இடியாப்பச் சிக்கலில் நம் வரலாற்றைக் கொண்டு வந்து நிறுத்தியதுதான் நம் முப்பாட்டனார் காலங்களில் வாழ்ந்த அறிவாளிகள் நமக்களித்த கொடை.

திருவள்ளுவரைத் தேடியவர்கள் பெரும்பாலும் திருக்குறள் புத்தகத்துக்குள்ளேதான் அவரைத் தேடியிருக்கிறார்கள். 'ஆதி பகவன்' என்று சொல்லிவிட்டார், அப்போ அவர்தான். 'தாமரைக்கண்ணான்' என்று சொல்லிவிட்டார், அப்போ இவர்தான். நான் எழுதிய அண்மைய பதிவு ஒன்றில் குறளி வித்தை பற்றி ஒரு வரியிட்டிருந்தேன். திருவள்ளுவர் குறளி

வித்தை செய்து கொண்டிருந்தவர், அந்த குறளி வித்தைக்காரர் எழுதியதால்தான் அதற்குக் குறள் என்று பெயர் வந்தது என்றெல்லாம் கம்பி கட்டியிருக்கிறார்கள். பொய் சொல்லவில்லை. திருவள்ளுவரை வைத்து இப்படி நகைச்சுவை செய்தவர்கள்தான் அதிகம். திரிகுறள் எழுதியவரின் கதையைத் திரித்து கத்தரிக்காயாக்கிருக்கிறார்கள்.

கௌதம சன்னாவின் ‘திருவள்ளுவர் யார்?’ திருவள்ளுவரை உருப்படியாக ஆராய்ச்சி செய்யும் ஒரு புத்தகம். திருக்குறள் புத்தகத்துக்கு வெளியே உள்ள அவரைப்பற்றிய ஆதாரங்களை சார்பு நிலை இன்றி ஆராய்ந்திருக்கும் புத்தகம். கம்பிகட்டிய கதைகளையெல்லாம் பின்னிணைப்பாகக் கொடுத்துவிட்டு பொழுது போகாவிட்டால் வாசித்து மகிழ்ந்து கொள்ளுங்கள் என்று ஒதுக்கிவிட்டு மெயின் புத்தகத்தில் உண்மையை முடிந்த அளவு உரசியிருக்கிறார். இதற்குக் கைகொடுத்திருப்பது நூறு ஆண்டுகளுக்கு முன் அயோத்திதாச பண்டிதர் நடத்திய ஆராய்ச்சி. என் போன்ற பலருக்கு இன்றும் தெரியாது என்பது தமிழர்களின் சாபம். சென்னையில் திருவள்ளுவர் பெயரிலேயே ஊரைச் சேர்த்து திருவள்ளூர் என்று ஓர் ஊர் நம் கண் முன்னே உள்ளது. பழங்கால வரலாற்றுச் சுவடுகள் அங்கே உள்ளன. மணிமேகலையில் பேசப்பட்ட பகுதி. அந்த தெளிவான சம்பந்தத்தைக்கூடக் கவனிக்காமல்

மைலாப்பூரில் அவரைக் கொண்டுவந்து நிறுத்தியிருக்கிறோம்.

நேற்று கையில் கிடைத்தது புத்தகம். இன்று வாசித்து முடித்துவிட்டேன். மிகவும் விறுவிறுப்பாகவும், நேர்த்தியாகவும், எளிமையாகவும் எழுதப்பட்டிருக்கும் ஆராய்ச்சிப் புத்தகம். நமக்குக் கிடைத்திருக்கும் ஒரு (ஒரே) பொக்கிஷம். திருவள்ளுவர் யார் என்ற புதிரை இப்போது உடைக்க விரும்பவில்லை. அதை உடைக்க இன்னும் ஆராய்ச்சிகள் வேண்டும். ஏனென்றால் அது நம் ஆட்களாலேயே அழிக்கப்பட்ட ஒரு வரலாறு. திருவள்ளுவர் காணாமல் போனதற்கு நம் முப்பாட்டனார்கள்தான் பொறுப்பு. சென்ற நூற்றாண்டில் கூட திருவள்ளுவர் பற்றி ஒரு கோவிலில் கடைசியாக இருந்த ஒரு கல்வெட்டை உடைத்துத் தூர எறிந்திருக்கிறார்கள், இன்னொரு கோவிலைக் கட்ட.

ஆயிரத்து எண்ணூறுகளின் ஆரம்பத்திலேயே ஆங்கிலேயர்கள் திருவள்ளுவருக்கு நாணயம் வெளியிட்டிருக்கிறார்கள். கொஞ்சம் அவரைக் காப்பாற்றியிருக்கிறார்கள். தாடியில்லாமல்.

# 26. கொங்குநாட்டுக் கல்வெட்டுகள் — நூல் மதிப்புரை

*— அருள் மெர்வின்*




*நூல்:*

**கொங்குநாட்டுக் கல்வெட்டுகள்**

*ஆசிரியர்: துரை. சுந்தரம்*

*பதிப்பு: 2022, தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகம்*

*நூல் கிடைக்குமிடம்:*

*https://www.commonfolks.in/books/d/kongunaattu-kalvettugal*

*எங்கள் ஊரில் ஒரு மலை உண்டு. சென்ற முறை ஊருக்குப் போயிருந்தபோது பாதி மலைதான் இருந்தது. அடுத்த முறை செல்லும் போது பெரும்பாலும் மலையே இருக்காது. இப்படித்தான் நம் தலைமுறையில் கல்வெட்டிக் கொண்டிருக்கிறோம்.*

*பழைய காலங்களில் ஏன் கற்களில் பல விஷயங்களை எழுதிவைத்தார்கள் என்பது யோசிக்க வேண்டியது. பாட்டுகளையெல்லாம் ஓலையில் எழுதிவிட்டு வரலாற்றைக் கற்களில் எழுதி வைத்திருக்கிறார்கள் நம் முன்னோர்கள். ஏனென்றால் நம் ஆட்களைப் பற்றி அவர்களுக்குத் தெரியும்.*

இடையில் இரண்டு ஓலையைச் செருகி வரலாற்றை மாற்றிவிடுவார்கள். நமக்கு இன்று கிடைக்கும் பல இலக்கியங்கள் பின்னால் வந்தவர்களால் பட்டி டிங்கரிங்க் பார்க்கப்பட்டவைதான். கல்லில் எழுதிவைத்தால் பின்னால் வருபவர்கள் கோல்மால்கள் செய்ய வாய்ப்புகள் குறைவு என்று வரலாற்றைக் கல்வெட்டுகளாகப் பதிவு செய்திருக்கிறார்கள். இருந்தும் நம் ஆட்கள் விடவில்லை.

'கொங்குநாட்டுக் கல்வெட்டுகள்' என்ற தலைப்பில் துரை சுந்தரம் அவர்களின் கல்வெட்டு பற்றிய ஆராய்ச்சிகளைத் தொகுத்து அவர் நினைவாகத் தமிழ் மரபு அறக்கட்டளை வெளியிட்டிருக்கிறது. ஆச்சரியமான மனிதர். பணி ஓய்வு பெற்ற பிறகு சன் டீவியும், விஜய் டீவியும், ஓடிடியும்தான் வாழ்க்கை என்று சோஃபா பக்கம் ஒதுங்கிவிடாமல் துரை சுந்தரம் அவர்கள் அறுபது வயதுக்குப் பிறகு கல்வெட்டு வாசிக்கக் கற்றுக்கொண்டு கொங்குநாட்டில் உள்ள கல்வெட்டுகளை ஆராய்ச்சி செய்திருக்கிறார். இன்று அவர் நம்மிடையே இல்லை.

இந்த புத்தகத்தில் கொங்குப் பகுதியில் உள்ள ஏறக்குறைய பதினேழு இடங்களில் அவர் செய்த கல்வெட்டு ஆராய்ச்சிகள் அவரால் விவரிக்கப்பட்டிருக்கிறது. நூறிலிருந்து ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட கல்வெட்டுகள். சோழர்கள், பாண்டியர்கள், நாயக்கர்கள், வணிகர்கள், நிர்வாகிகள்

என்று பலரும் கல்வெட்டியிருக்கிறார்கள். ஏகப்பட்ட விஷயங்கள். ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு புத்தகம் எழுத வேண்டும்.

ராஜராஜ சோழர் தஞ்சாவூரில் பிரகதீசுவரருக்குக் கோவில் கட்டிய அதே காலத்தில் கொங்கு நாட்டில் சேவூருக்கு அருகில் எறுளங்கோதை என்ற பெண் மொக்கணீசுவரருக்கு ஒரு கோவிலை எழுப்பியிருக்கிறார். அந்தக் கோவிலுள்ள கல்வெட்டை வாசித்ததால்தான் இப்படி ஒரு பெண் இருந்ததே தெரிகிறது. எறுளம் என்றால் ஒரு மலரின் பெயராம்.

கல்வெட்டுகளுடன் சேர்ந்து கல்வெட்டுகள் இருக்கும் (பல இடங்களில் கேட்பாரற்ற) கோவில்கள், ஊர்கள் பற்றியும் ஆராய்ந்து சொல்லியிருக்கிறார். சமண கோவில்கள் பல சைவ கோவில்களாக மாற்றப்பட்ட விஷயங்களும் கல்வெட்டுகளுடன் சேர்ந்து வருகிறது. அம்மண தீர்த்தங்கரர் ஒருவர் அமணலிங்கேசுவரர் ஆகியிருக்கிறார் தேவனாம்பாளையத்தில். ஜேஷ்டாதேவி என்ற பல்லவர் கால பெண் தெய்வத்தின் பின்பக்கத்தில் இவர்தான் ஆஞ்சநேயர் என்று அழகாகப் பதிவு செய்து வைத்திருக்கிறார்கள் ஒரு கோவிலில்.

நல்ல ஆராய்ச்சிப் புத்தகம் என்றாலும் அதன் சுவாரசியத்தை அனுபவிக்கக் கொஞ்சம் வரலாறு தெரிந்திருக்க வேண்டும்.

ஏனென்றால் இது வரலாற்றுப் புத்தகம் அல்ல. கல்வெட்டுகளில் உள்ள வரலாற்றுச் செய்திகளைச் சொல்வது. குறைந்த பட்சம் பொன்னியின் செல்வன் அளவாவது வரலாறு வாசித்திருக்க வேண்டும். 'வீரபாண்டியனின் தலைகொண்ட ஆதித்த கரிகாலன்' என்பது பொன்னியின் செல்வனில் வரும் மக்களைக் கவரும் வரிகள். வீரபாண்டியன் என்ற பாண்டிய மன்னனை ஆதித்த கரிகாலன் போரில் தோற்கடித்து அவனைத் துரத்திச் சென்று தலையை வெட்டி அந்த தலையை ஒரு மாதம் தஞ்சாவூரில் தொங்கவிட்டிருந்தான். ஆனால் இந்த வீரபாண்டியன் அதற்கு முன்னதாக ஒரு சோழனின் தலையை வெட்டி 'சோழனின் தலைகொண்ட வீரபாண்டியன்' என்ற பெயரை வாங்கியிருக்கிறான். அதை ஆனையூரில் வீரபாண்டியனே ஒரு கல்வெட்டாகவும் எழுதிவைத்திருக்கிறான். (ஆனையூர் எம்.எஸ். சுப்புலட்சுமியின் சொந்த ஊர் என்ற குறிப்பையும் அத்தோடு சொல்லிச் சொல்கிறார் துரை சுந்தரம்.) வீரபாண்டியன் என்றால் வீரபாண்டிய கட்ட பொம்மனா என்று கேட்கும் அளவுக்கு வரலாற்று அறிவு இருந்தால் இந்த புத்தகம் கிறிஸ்டோபர் நோலன் படம் பார்த்த மாதிரிதான் இருக்கும்.

இந்த புத்தகத்தைப் பற்றி எழுதிக் கொண்டே செல்லலாம். அவ்வளவு செய்திகள் உள்ளன. கை வலிப்பதால் கடைசியாக ஒன்ற மட்டும். கல்வெட்டுகளை நம் மக்கள் அபாரமாகப்

போற்றிக் காப்பாற்றியிருக்கிறார்கள். மேலே வெள்ளையடித்து வைத்திருக்கிறார்கள். அது போதாதென்று ஆயில் பெயிண்ட் கூட அடித்திருக்கிறார்கள். அதுவும் போதாதென்று உடைத்தும் போட்டிருக்கிறார்கள். பல இடங்களில் சுண்ணாம்பைச் சுரண்டி எடுத்து கல்வெட்டுகளை வாசித்திருக்கிறார் துரை சுந்தரம்.

ஆலத்தூரில் ஒரு சமணக் கோவில் கல்வெட்டுகளுடனும் புற்களுடனும் அதை மேயும் மாடுகளுடனும் பரிதாப நிலையில் இருப்பதைப் பற்றி எழுதி யாராவது இந்தக் கோவிலைக் காப்பாற்றுங்கள் என்று புலம்பியிருக்கிறார். அது இன்னும் ஐசியூவில்தான் உள்ளது என்பது நூறு பேர் பார்த்து ஆதரவளித்த இந்த யுடியூப் காணொளியிலிருந்து தெரிகிறது.
*https://youtu.be/qlAioTtCtrw*

# 27. வரலாற்றில் பொய்கள் — நூல் மதிப்புரை

— *அருள் மெர்வின்*




நூல்:
**"வரலாற்றில் பொய்கள்"**
ஆசிரியர்: தேமொழி
பதிப்பு: 2021, தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகம்

நூல் கிடைக்குமிடம்:

https://www.commonfolks.in/books/d/varalaatril-poigal

'வரலாற்றில் பிழைகள்' என்று புத்தகத்துக்குத் தலைப்பு வைக்காமல் 'வரலாற்றில் பொய்கள்' என்று ஏன்? மிகவும் யோசித்து வைக்கப்பட்ட தலைப்பு என்று தெரிகிறது. வரலாற்றில் பிழைகள் உண்டு. அந்த பிழைகளை வைத்துப் பிழைத்தவர்களும் உண்டு. பிழைகள் காலத்தால் திருத்தப்படும். அதன்பின் திருத்தப்பட்ட பிழைகள் அவற்றை வைத்துப் பிழைத்தவர்களால் பொய்களாகப் பரப்பப்படும்.

விளக்கமாக: பூமி தட்டையாக உள்ளது, அந்த தட்டைத் தாங்கிப் பிடிப்பது நான்கு யானை, யானையைத்

தாங்கிப்பிடிப்பது ஓர் ஆமை, ஆமை நீந்திச் செல்வது ஓர் ஓடை...என்று இரண்டாயிரம் வருடங்களுக்கு முன்பு யாராவது எதுகை மோனையுடன் அடுக்கியிருந்தால் அது பிழை. அதே மாதிரி இன்றும் யாராவது நம் முன்னோர்கள் ஒன்றும் முட்டாள்களல்ல என்று சொல்லி மறுபடியும் தட்டை வைத்து அடுக்கி அதற்கு வாட்சப்பீடியாவிலிருந்து ஆதாரம் கொடுத்தால் அது பொய்.

மெல்போனிலிருந்து மெட்ராஸ் வழியாக மடகாஸ்கர் வரை கடலுக்குள் சமோசா வடிவத்தில் ஒரு நிலம் மூழ்கிக் கிடக்கிறது என்று நூறு வருடங்களுக்கு முன் யாராவது கண்டம் கட்டியிருந்தால் அது பிழை. நம் வீட்டின் கட்டிலுக்கடியில் ஒளித்துவைத்திருக்கும் பானத்தைக் கூட வானத்திலிருந்து ஜூம் செய்து கண்டுபிடிக்கும் இன்றைய சேட்டிலைட் யுகத்தில் இன்னும் கடலுக்கடியில் ஒரு சமோசா கண்டம் ஒளிந்திருக்கிறது என்று யாராவது நம் மண்டையைக் கழுவிக் காயவைத்தால் அது பொய்.

ஆங்கிலத்தில் இது போலப் பல புத்தகங்கள் உண்டு. ஏனென்றால் பிழைகளை வைத்துப் பிழைத்தவர்கள், அவர்களிடமிருந்து தப்பிப் பிழைத்தவர்கள் உலகம் முழுவதும் உண்டு. வெளிநாட்டிலிருந்து வந்த மனிதர்களைக் குரங்குகள் என்று சொல்லி மிருகக்காட்சிசாலையில் அடைத்துவைத்து டிக்கட் போட்டு காசு பார்த்த சம்பவங்கள்

ஐரோப்பாவில் உண்டு. வெளிநாட்டிலிருந்து வந்த குரங்கை உளவாளி என்று சொல்லி தூக்கில் போட்ட சம்பவங்களும் உண்டு. இந்தியாவில் கூட ஐரோப்பியப் பெண்கள் தங்கள் கணவர்களுடன் முதலில் கப்பலில் வந்திறங்கிய பொழுது அவர்களுக்கெல்லாம் பின்னால் வால் உண்டு என்று நம் ஆட்கள் சிலர் நம்பியிருக்கிறார்கள்.

தமிழில் பொய்களை மையமாக வைத்து, ஆராய்ந்து இப்படி ஒரு புத்தகம் யாரும் இதற்குமுன் எழுதியிருக்கிறார்களா என்று தெரியவில்லை. எழுதியிருக்கலாம். தமிழ் மரபு அறக்கட்டளை வெளியிட்டிருக்கும் முனைவர் தேமொழியின் இந்தப் புத்தகத்தில் இந்தியா சம்பந்தப்பட்ட நான்கு பொய்கள் ஆராயப்பட்டிருக்கின்றன. அவற்றை இரண்டாக இணைத்துவிடலாம். இணைத்து ஒரே கான்செப்டுக்குள் கொண்டுவந்துவிடலாம். அதுதான் இந்த புத்தகத்தின் (ஒரு) சிறப்பு. எல்லாத்துறைகளையும் போல வரலாற்றிலும் இரண்டு வகைப் பொய்கள் உண்டு. ஒன்று இல்லாததை இருந்ததாகச் சொல்வது. இன்னொன்று இருந்ததை இல்லையென்று சொல்வது. இரண்டுமே இந்தப் புத்தகத்தில் விவரிக்கப்பட்டிருக்கும் சமாச்சாரங்களுக்குள் அடங்குவது இன்னொரு சிறப்பு.

புத்தகங்கள், பத்திரிகைகள் என்று கொஞ்சம் வாசிப்புப் பழக்கம் உள்ளவர்களுக்கு ஏற்கனவே தெரிந்த

பொய்கள்தான் இந்த நான்கும். சிந்து சமவெளியில் குதிரையைக் கண்டுபிடித்த நகைச்சுவை நிகழ்ச்சி பற்றி 2000-ஆம் ஆண்டில் ஃப்ரன்ட்லைனில் வாசித்த ஞாபகம் இன்றும் உள்ளது. என்றாலும் தேமொழியின் தமிழில் வாசிக்கும் போது சுவாரசியமாக இருந்தது. மற்றபடி வாட்சப், பேஸ்புக், யூட்யூப் மற்றும் நியூஸ் சேனல்கள் மூலம் மட்டுமே பொது அறிவை வளர்த்துக் கொள்பவர்களுக்கு இந்தப் பொய்கள் அதிர்ச்சி அளிக்கலாம்.

இந்தப் புத்தகத்தில் விவாதிக்கப்பட்டிருக்கும் நான்கு பொய்களில் இரண்டை மேலே உள்ள பத்திகளில் ஊறுகாய் போலத் தொட்டுவிட்டேன். புத்தகத்தைப் படித்து மற்றவற்றையும், விரிவாகவும் தெரிந்து கொள்ளுங்கள். படித்து முடித்துவிட்டு மறுபடியும் அந்தப் பொய்களை நீங்கள் நம்புவதைத் தொடரலாம். உலகை உருண்டையாகப் படைத்த கடவுளே வந்து சத்தியம் செய்தாலும் உலகம் தட்டை என்ற உங்கள் நம்பிக்கையை உடைக்க முடியாது என்பது போல. அறிவியலாலும், தரவுகளாலும் பெரும்பான்மை மக்களிடையே பொய்களை உடைக்க முடியுமென்றால் இன்று என் வாட்சப்பில் முட்டைகோஸ் சாப்பிட்டால் மூளை வளரும் போன்ற செய்திகள் இருக்காது. பலருக்குப் பல நாடுகளில் ஆட்சியும் இருக்காது.

ஆதலால் இந்த புத்தகத்தைப் படித்ததும் எனக்குத் தோன்றியது கம்பரின் காவிய வரிகள்: “உண்மை இல்லை, பொய் உரை இலாமையால்.” பொய்யில்லா சமூகத்தை உருவாக்க இப்படிப்பட்ட புத்தகங்கள் தேவை. பொய்யில்லா சமூகத்தில் உண்மைக்குத் தேவை இருக்காது.

கம்பர் சொன்னதைக் கொஞ்சம் மாற்றினால்: உண்மையில்லா சமூகத்தில் பொய்களுக்கான தேவை இருந்துகொண்டே இருக்கும்.

## 28. யாருடைய குற்றம்?

— *கவிஞர் நிலவை.பார்த்திபன்*



பள்ளிக்கூட வகுப்பறையில்
சல்லித்தனம் நடக்குது!
சொல்லித்தரும் வாத்தியார
சுள்ளானெல்லாம் அடக்குது!

முத்தலாக விளையும் பயிர்
முளையிலயே தெரியுது!
பெத்தவங்க அடிவயிறு
பெட்ரோலா எரியுது!

வீணைன்னு
நெனச்சதெல்லாம்
விசிலடிச்சுத் திரியிது!
தூணுன்னு
நெனச்சதெல்லாம்
துருப்பிடிச்சு உரியுது!

குத்து விளக்கெல்லாம்
கூட்டம் சேர்ந்து குடிக்குது!
கத்துத் தரும் வாத்தியார
சுத்தி கும்மி அடிக்குது!
முடி வெட்ட சொன்னதுக்கே

முறுக்கிக்கிட்டு
மொறைக்குது!
அடிபட்ட நாயப்போல
ஆத்திரத்தில் குறைக்குது!

தேர்வெழுத போகும் கையில்
பீர் பாட்டில்
நுரைக்குது!
போற பாத தெரியாம
போத கண்ண மறைக்குது!

வால் இல்லா வானரங்க
வகுப்பறைய கெடுக்குது!
மேல்நிலைப் பள்ளி
மேசைகள
மேல ஏறி ஒடைக்குது!

பாடம் வகுப்பில்
நடக்கும்போதே
பாட்டுப்பாடி ஆடுது!
தோரணையா படுத்துத்
தூங்கதோழி மடியத் தேடுது!

படிக்கச் சொன்ன வாத்தியார
அடிக்க கைய ஓங்குது!
மாணவ சமுதாயத்தோட
மானத்தையே வாங்குது!

சமுத்திரமா
நினைச்சதிப்போ
சாக்கடையா தேங்குது!
சமுதாய நலன்களுக்கு
மிகப்பெரிய தீங்கிது!

வருங்காலத்
தூண்களெல்லாம்
வளஞ்சு போயி கெடக்குது!
பெரம்பெடுத்து
திருத்தலாம்னா
சட்டம் வந்து தடுக்குது!

## 29. இமிர் கருந்தும்பி

— *ருத்ரா இ.பரமசிவன்*

**"இமிர் கருந்தும்பி"**



*குமிழப் பரந்த வெள்ளிடைத் தீஞ்சுரம்*
*குலாவ ப்பூஞ்சினை இமிர் கருந்தும்பி*
*ஆலாடு விழுதின் செம்புல மன்றில்*
*புற்றம் ஆங்கொரு குற்றம் செத்து*
*நிழற்குடை கவித்த எழிலின் ஆட் சி*
*இறையுண்ட சீர்மலி வேந்தின் அன்ன*
*தமியள் அப்பால் ஒருதனி யிருந்தாள்*
*தன்னை அங்கு தனியொளி காட்டும் என்று.*

**பொழிப்புரை :**

*குமிழ மரங்கள் உடைய அந்த வெட்ட வெளியிடையேயும் அழகிய இனிமை செறிந்த காட்டுவழியொன்றில் வளைந்து வளைந்து அந்த மரத்தின் பூங்கிளைகள் உரசும். அதன் மீது கரிய சிறு வண்டுகள் ஒலியெழுப்பும்.*

*ஆல மர விழுதுகள் ஆடும் ஒரு செம்புலத்து மேட்டில் குன்றம் போல் ஒரு புற்று உயர்ந்து நிற்கிறது. அந்த அடர்ந்த காட்டின் நிழல் ஒரு குடைபோல் கவிந்து ஒரு வெண் கொற்றக்குடையாய் அந்த அழகின் ஆட்சியை நடத்துகிறது.*

*ஆனால் அந்த அழகு கோலோச்சும் திறனுக்கும் திரை (கப்பம்) செலுத்தப்பட்டு பெறும் ஓர் அரசன் போல் அவள் (தலைவி) அங்கு வீற்றிருக்கிறாள். ஒரு தனி சிறப்புடன் அவள் அங்கு அமர்ந்திருக்கிறாள்.*

*தனது தலைவன் (தன் + ஐ =தன்னை) அங்கு வந்துவிடுவான். அவன் வந்தவுடன் அவனது முகம் பூக்கும் பேரொளி அங்கு பரவி நிற்கும் என்று அவள் மகிழ்கிறாள்.*

*— ருத்ரா இ. பரமசிவன் (சொற்கீரன்)*

## 30. திரு. ஹேமச்சந்திரன் அவர்களுக்கு அஞ்சலி

— முனைவர் க.சுபாஷிணி

*தனது சுய முயற்சியின் காரணத்தினாலும் வரலாற்றின் மீது கொண்ட ஆர்வத்தினாலும் ஒரு தனி மனிதர் ஒரு அருங்காட்சியகத்தை உருவாக்கி செயல்படுத்த முடியும் என சாதித்துக் காட்டியவர் சென்னை விருகம்பாக்கத்தில் கடல் அருங்காட்சியகத்தை உருவாக்கிய திரு. ஹேமச்சந்திரன் அவர்கள். அவர் இன்று காலமானார் என்ற அதிர்ச்சியான செய்தி கிட்டியது. அவருக்குத் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் அஞ்சலிகள்.*

*வரலாற்று அறிஞர் கடலோடி நரசையா தான் எனக்கு இவரை முதலில் அறிமுகப்படுத்தியவர்; சென்னையில் விருகம்பாக்கத்தில் இருக்கின்ற கடல் அருங்காட்சியகத்தை உருவாக்கி இந்த அருங்காட்சியகத்தைச் செயல்படுத்தி வந்தார் திரு. ஹேமச்சந்திரன் அவர்கள். அவரது அருங்காட்சியகத்திற்குத் தமிழ் மரபு அறக்கட்டளை குழுவினரோடு நந்தனம் உட்பட 3 கல்லூரிகளைச் சார்ந்த மாணவர்களையும் ஒருங்கிணைத்து ஒரு வரலாற்றுச் சுற்றுலாவை முன்னர் ஏற்பாடு செய்திருந்தோம். இந்த நிகழ்ச்சியில் அப்போதைய தமிழக அருங்காட்சியகங்களின்*

ஆணையர் டாக்டர்.சண்முகம் இஆப (தற்போது முதலமைச்சரின் தனிச் செயலர்களில் ஒருவர்) நேரில் வந்திருந்து மாணவர்களுக்கு உரையாற்றினார்.



தான் பணி ஓய்வு பெற்ற நாளிலிருந்து தொடர்ச்சியாக பல்வேறு ஆய்வுகளை மேற்கொண்டு மிகத்தீவிரமாக கவனத்துடன் பக்கிங்ஹாம் கால்வாய், கலங்கரை

விளக்கங்கள், தமிழக கடற்கரையோர எச்சங்கள், பல்வேறு வகை ஆவணங்கள் எனத் தனது சொந்த சேகரிப்பாக ஒரு அருங்காட்சியகத்தை தானே உருவாக்கியவர்.






அருங்காட்சியகத்தில் உள்ள ஆவணங்கள் வரலாற்று மாணவர்களுக்கும் வரலாற்றைத் தெரிந்துகொள்ள விரும்புபவர்களுக்கும் நிச்சயமாகப் பயன் அளிக்கக்கூடியவை.

இவரது பணிகளைப் பாராட்டி தமிழக அரசின் தொல்லியல் மற்றும் வரலாற்றுத் துறை அவரது சேகரிப்புக்களுக்கு முறையான பாதுகாப்பை வழங்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கின்றோம்

அருங்காட்சியக முகவரி:

*THE MARITIME HERITAGE MUSEUM, NO 8, ELANGO NAGAR ANNEXE, VIRUGAMBAKKAM, CHENNAI 600092.*

# தமிழ் மரபு அறக்கட்டளை நிகழ்வுகள் மற்றும் வெளியீடுகள் — செய்திகள் தொகுப்பு

— முனைவர் தேமொழி

---

***தமிழ் மரபு அறக்கட்டளை யின் இணையத்தளம்***
*https://tamilheritage.org/*

***தமிழ் மரபு அறக்கட்டளையின் நிகழ்வு-செய்தி வெளியீடுகள்***
*https://thf-news.tamilheritage.org/*

***தமிழ் மரபு அறக்கட்டளையின் யூடியூப் காணொளி அலைவரிசை***
*https://www.youtube.com/Thfi-Channel*

---

***தமிழ் மரபு அறக்கட்டளையின் காணொளி வெளியீடுகள்:***
*தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு*
*நடத்தும் இணையவழி உரைத்தொடர் நிகழ்ச்சிகள்:*

*திசைக்கூடல் – 276 [ஏப்ரல் 16, 2022]*
*உடல் உறுப்பு தானம்:*
*— முனைவர் வெங்கட்*
*https://youtu.be/cOtk55Cb-wc*

*திசைக்கூடல் – 277 [ஏப்ரல் 18, 2022]*
*அருங்காட்சியகங்களின் முக்கியத்துவம்:*
*— திரு. சி.அ. ராமன், இ.ஆ.ப.*
*https://youtu.be/boj_3amFmWc*

*திசைக்கூடல் – 278* [*ஏப்ரல் 23, 2022*]
*கொங்கு நாட்டுத் தொல்லியல் சின்னங்களும் கல்வெட்டுகளும்*
*— நூல்களின் திறனாய்வு – முனைவர் க.சுபாஷிணி*
***https://youtu.be/y8ReDY-OPCw***

*திசைக்கூடல் – 279* [*ஏப்ரல் 30, 2022*]
*காலனித்துவ காலத்தில் தென்னிந்திய மொழிகளின் வளர்ச்சியும் வரலாறும்*
*— 'கடலோடி' நரசய்யா*
***https://youtu.be/zi1O6byAwnU***

*திசைக் கூடல் – 280* [*மே 7, 2022*]
*ஃபிரஞ்சியர் காலப் புதுச்சேரி*
*— முனைவர் எம்.பி. இராமன்*
***https://youtu.be/67EivmZTM2I***

*திசைக் கூடல் – 281* [*மே 14, 2022*]
*சு.சமுத்திரம் நாவல்களில் சமகாலச் சிக்கல்கள்*
*— முனைவர். ஜ. வள்ளி*
***https://youtu.be/sx_yESluJe8***

*திசைக் கூடல் – 282* [*மே 18, 2022*]
*உலக அருங்காட்சியக நாள் (மே 18) — சிறப்பு நிகழ்சி*
*விருதுநகர் மாவட்டத் தொல்லியல் சுவடுகள்*
*— திருமதி.சே.கிருஷ்ணம்மாள்*
***https://youtu.be/I40J7lW6h5A***

*திசைக் கூடல் – 283* [*மே 21, 2022*]
*"கடாரம்"*
*— முனைவர் க.சுபாஷிணி*
*https://youtu.be/btuzwgWdI6Q*

*திசைக் கூடல் – 284* [*மே 22, 2022*]
*"'நாகர் நிலச்சுவடுகள்' – இலங்கைப் பயண அனுபவம்" நூல் திறனாய்வு*
*— திறனாய்வாளர்-திரு. செல்வம் இராமசாமி*
*https://youtu.be/0sQ5e4-H8n8*

*திசைக் கூடல் – 285* [*மே 28, 2022*]
*18ஆம் நூற்றாண்டு தமிழர்களுக்கும் ஜெர்மானியர்களுக்கும் இடையேயான கலாச்சாரப் பரிமாற்றம்*
*— டேனியல் ஜெயராஜ்*
*https://youtu.be/SHpDob4PiYI*

*திசைக் கூடல் – 286* [*ஜூன் 3, 2022*]
*கலைஞரும் தமிழும்*
*— முனைவர் சு.சண்முகசுந்தரம்*
*https://youtu.be/GrLSK7pWn9w*

*திசைக் கூடல் – 287* [*ஜூன் 04, 2022*]
*சங்க இலக்கியங்கள் உணர்த்தும் அரசின் வருவாய்*
*— முனைவர் தா. ஜெயந்தி*
*https://youtu.be/NwX20vYX1ww*

திசைக்கூடல் – 288 [ஜூன் 11, 2022]
மாற்றுப் பாலினத்தவர்களின் சமூகச் சிக்கல்கள்
— சமூக செயற்பாட்டாளர் திருமிகு ரேவதி
https://youtu.be/3yenp_6GOVQ

திசைக்கூடல் – 289 [ஜூன் 18, 2022]
சென்னை இலௌகிக சங்கம் (1878-1888) | Madras Secular Society
— பேரா. முனைவர் வீ. அரசு
https://youtu.be/7Dfq20WBBz0

திசைக்கூடல் – 290 [ஜூன் 25, 2022]
எரிமலை விழுங்கிய ரோமானிய நகரங்கள் – போம்பேயி, ஹேர்குலினம்
— முனைவர் க.சுபாஷிணி
https://youtu.be/aHKv76MMJD4

திசைக்கூடல் – 291 [ஜூன் 26, 2022]
முனைவர் க.சுபாஷிணி எழுதிய 'ராஜராஜன் கொடை' நூல் திறனாய்வு
— முனைவர் தே. சங்கர சரவணன்
https://youtu.be/wbgX_ZPSc2g

திசைக்கூடல் – 292 [ஜூலை 3, 2022]
நேற்றைய செய்தி.. இன்றைய வரலாறு !
— முனைவர் தேமொழி
https://youtu.be/2UVUc4_bZPk

**தமிழ் மரபு அறக்கட்டளையின் "திணை" – செய்திமடல்கள்:**

*"திணை" – செய்திமடல்-23: ஏப்ரல் 2022*
*https://thf-news.tamilheritage.org/wp-content/uploads/2022/06/THF-Newsletter-Thinai-Madal-23-April-2022.pdf*

*"திணை" – செய்திமடல்-24: மே 2022*
*http://thf-news.tamilheritage.org/wp-content/uploads/2022/06/THF-Newsletter-Thinai-Madal-24-May-2022-v0.2.pdf*

*"திணை" – செய்திமடல்-25: ஜூன் 2022*
*http://thf-news.tamilheritage.org/wp-content/uploads/2022/07/THF-Newsletter-Thinai-Madal-25-June-2022.pdf*

---

**தமிழ் மரபு அறக்கட்டளையின் கல்விச் சுற்றுலா:**

*ஏப்ரல் 17, 2022 — மறையூர் கேரளா தொல்லியல் சின்னங்கள் வரலாற்றுப் பயணம்*

---

**தமிழ் மரபு அறக்கட்டளையின் கல்வெட்டுப் பயிலரங்கம்:**

*ஜூன் 18, 2022 — தமிழி கல்வெட்டுக்களை எழுதவும் வாசிக்கவும் பயிலரங்கம் நடத்தப் பட்டது*

---

**தமிழ் மரபு அறக்கட்டளையின் கல்விச் சுற்றுலா:**

**மறையூர் கேரளா தொல்லியல் சின்னங்கள் வரலாற்றுப் பயணம்**

தமிழ் மரபு அறக்கட்டளையும் உடுமலை வரலாற்று ஆய்வு நடுவமும் இணைந்து ஏப்ரல் 17, 2022 அன்று ஏற்பாடு செய்திருந்த 'மறையூர் கேரளா தொல்லியல் சின்னங்கள்' வரலாற்றுப் பயணத்தில் மிக முக்கியச் சின்னம் இது. பெருங்கற்காலப் பாறை ஓவியங்கள், இது கேரளா சின்னாறு வனத்துறை பகுதியில் அமைந்துள்ளது.



இந்தப் பெருங்கற்காலப் பாறை ஓவியங்களை ஒத்த அமைப்பில் அமைந்த ஓவியங்கள் பிரான்ஸ், இந்தோனேசியக் காடுகள், ஸ்பெயின் நாட்டின் கனேரியத் தீவுகள் எனப் பல பகுதிகளில் உள்ளன என்பதைப் பற்றி கேள்விப்பட்டிருப்போம். தமிழ் நாட்டிலும் இத்தகைய ஓவியங்கள் சிலவற்றைத் தமிழ் மரபு அறக்கட்டளை ஏற்கனவே பதிவு செய்து வெளியிட்டு உள்ளோம்.

மிகத் தெளிவான வகையில் அமைந்திருக்கும் விலங்குகளின் ஓவியங்கள் இங்கே பாறைகளின்மேல் கீறப்பட்டுள்ளன. இந்திய வரலாற்றுச் சின்னங்களில் முக்கியத்துவம் பெறுகின்ற வரலாற்றுச் சின்னங்களில் இதுவும் ஒன்று. ஆனால் தகுந்த பாதுகாப்பு இங்கே இல்லை என்பதே எங்களோடு விளக்கமளிக்க வந்திருந்த வனத்துறை அதிகாரியின் ஆதங்கமாக இருந்தது.










இந்தோனேசியாவின் சுலவேசி தீவில் கண்டுபிடிக்கப்பட்ட காட்டுப்பன்றி பாறை ஓவியம் இன்றைக்கு 45 ஆயிரம் ஆண்டுகள் பழமையானது என்று ஆய்வாளர்களால் கூறப்படுகிறது. இதைத்தவிர ஸ்பெயின் நாட்டில் கண்டறியப்பட்ட பாறை

ஓவியங்கள் பிரான்சில் கண்டறியப்பட்ட பாறை ஓவியங்கள் ஆகியவை காலத்தால் பழமையானவை என்று கருதப்படுகின்றன. இங்கு கேரளாவின் ஆலம்பட்டி பகுதியில் அமைந்திருக்கும் இந்தக் காட்டுப்பகுதியில் உள்ள இப்பாறை ஓவியம் நிச்சயமாகக் காலக் கணக்கெடுப்பு ஆய்வுக்குட்படுத்தப்பட்டால் இதன் தொன்மை அறியப்படும்.




ஆயினும் இது வரை இதன் காலக் கணக்கெடுப்பு நடத்தப்படவில்லை என்று எங்களுடன் பயணித்து வந்த வனத்துறை அதிகாரி குறிப்பிட்டார். இதன் அமைப்பைக் காணும் போது ஏறக்குறைய 40,000 ஆண்டுகள் பழமையான பாறை ஓவியமாகக் கூட இருக்கலாம் என்றே எண்ணத் தோன்றுகிறது.

முனைவர் க. சுபாஷிணி,
தலைவர் - தமிழ் மரபு அறக்கட்டளை
ஏப்ரல் 17, 20

***தமிழ் மரபு அறக்கட்டளையின்  கல்வெட்டுப் பயிலரங்கம்:***

***தமிழி எழுத்து மற்றும் வாசிப்புப் பயிலரங்கம் – ஜூன் 2022***

1. பள்ளி செய்வித்தான்
2. கடிகை [கோ] வின் மகன்
3. பெருங்கூற்றன்

*இன்றிலிருந்து சுமார் 2500 ஆண்டுகள் பழமையானதாகக் கணிக்கப்படும் எழுத்து வரிவடிவமான தமிழியில் அன்று பாறைகளில் செய்திகள் கீறிப் பதிந்து வைக்கப்பட்டன. அப்படிப்பட்ட தொல் தமிழ் எழுத்தான தமிழியில் எழுதப்பட்ட கல்வெட்டுகள் தமிழகம் முழுவதும் பல்வேறு இடங்களில் கிடைக்கின்றன. இவற்றைப் பொதுமக்களான நாமும் வாசிக்க முடியுமா என்றால், தகுந்த பயிற்சியின் வழியாக நிச்சயம் வாசிக்க முடியும்.*

தமிழ் மரபு அறக்கட்டளை

பன்னாட்டு அமைப்பு

நடத்தும் இணைய வழி

# தமிழி கல்வெட்டு எழுத்து & வாசிப்புப் பயிலரங்கம்

JUNE

18

சனி

இனி... நீங்களே தமிழி கல்வெட்டு எழுத்துகளை வாசித்து அறியமுடியும்...

உங்கள் வருகையைப் பதிவு செய்துவிட்டீர்களா?

பயிற்சிக் கட்டணம்

INR 500*

EURO 10

USD 10

*இந்திய / இலங்கை மாணவர்கள் சலுகைக் கட்டணம் ₹200

**Payment details:** Tamil Heritage Foundation International

Punjab National Bank, Nungambakkam Branch, Chennai

**Account No: 1196050014474**

**IFSC: PUNB0119620**

Outside India:

Tamil Heritage Foundation International

e.V.Act No: **DE38 6035 0130 0001 1038 10**

*Swift-BIC:* **BBKRDE6BXXX**

Bank Address: **Kreissparkasse Boeblingen**

Registration link:

https://forms.gle/9CSLnvognfSUMLLcA

சான்றிதழ் வழங்கப்படும்

zoom

**CONTACT : 9487 220301**

இதனைக் கருத்தில் கொண்டுதான் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு, கடிகை இணைய வழி பல்கலைக்கழகப் பிரிவின் கீழ் 2022 ஆண்டு ஜூன் மாதம் 18-ஆம் தேதி ஜூம் வழியாகத் தமிழி எழுத்து மற்றும் வாசிப்பு பயிலரங்கம் ஒன்றை ஏற்பாடு செய்து இருந்தோம். இந்த பயிலரங்கில் மொத்தம் 78 பங்கேற்பாளர்கள் பல்வேறு நாடுகளிலிருந்து கலந்து கொண்டு பயன் அடைந்தார்கள். இதில் 32 மாணவர்கள், 46 பேராசிரியர்கள் மற்றும் தன்னார்வலர்கள் பங்கேற்றார்கள். பயிற்சிக் கட்டணமாக ரூபாய் 500க்கு பதிலாக மாணவர்களுக்கானப் பயிற்சி 200 ரூபாய் சலுகை கட்டணத்தில் வழங்கப் பட்டது. மேலும் பத்து மாணவர்களுக்கு இலவசமாகவும் பயிற்சி அளிக்கப்பட்டது.

**பரம்பன் கோகூர் கிழார் மகன் வியக்கன்**
**கோபன் கணதேவன் தொட சுனை**

பயிலரங்கத்தில் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் தலைவர் முனைவர் சுபாஷிணி, மற்றும் குந்தவை மகளிர் கல்லூரி உதவி பேராசிரியர் முனைவர் சிவராமகிருஷ்ணன் ஆகியோர்

பாடங்கள் நடத்தினர். ஜூம் செயலிலுள்ள எழுது பலகை கொண்டு ஒவ்வொரு தமிழி எழுத்துக்களாக முனைவர் சுபாஷிணி அறிமுகப்படுத்தினர். உயிர் எழுத்து, மெய் எழுத்து, உயிர்மெய் எழுத்து என்று வரிசையாக நடத்தியது மட்டும் இல்லாமல், பங்கேற்பாளர்களை அவர்களது குறிப்பு ஏட்டில் எழுதிப் பழகவும் ஊக்கமளித்தார். இந்தப் பாடத்தின் இறுதியில் தமிழி மொழியால் வாக்கியங்களும் அமைத்து பங்கேற்பாளர்களை வாசிக்கச் செய்யும் பயிற்சியும் அளிக்கப்பட்டது.

பேரா. சிவராமகிருஷ்ணன் அவர்கள் தமிழி கல்வெட்டு வாசிப்புப் பயிற்சி என்ற தலைப்பில் சிறப்புரையாற்றினார். எழுத்துகளின் தோற்றத்தில் பெண்களின் பங்களிப்பு முக்கியமானது என்பதை உலகம் எங்கும் உள்ள பல்வேறு சிற்ப சான்றுகளுடன் நிறுவினார். தொல்லியல் ஆய்வுகளில் கண்டெடுக்கப்பட்ட பானை ஓடுகளில் உள்ள தமிழி எழுத்துகள் காண்பித்து அவற்றை வாசிக்கவும் செய்தார். அவர்களுடைய உரையின் இறுதியாக தமிழி எழுத்துகளின் வளர்ச்சி வட்டெழுத்துக்கள் என்பதைக் குறிப்பிட்டு, இந்த வட்டெழுத்தின் பரிணாம வளர்ச்சிக்குச் சோழர்கள் அளித்த பங்களிப்பை விளக்கினார். நிகழ்ச்சியின் இறுதியாக நடந்த கலந்துரையாடலில் பங்கேற்பாளர்கள் உற்சாகமாக தங்களின் கேள்விகளைக் கேட்டுத் தெளிவு பெற்றார்கள்.

இந்த பயிலரங்கத்தை திரு. எழுமாத்தூர் கார்த்திக் நெறியாள்கை செய்து வைத்து செவ்வனே நிகழ்ச்சியை நடத்தினார். நிகழ்ச்சியின் இறுதியாக, கடிகை இணைய வழி பல்கலைக்கழகத்தின் பொறுப்பாளர், முனைவர் மு. பாமா அனைவருக்கும் நன்றியுரை கூறினார். பயிலரங்கத்திற்குரிய அறிவிப்பு பதாகையை

எழுத்தோவியர் நாணா என்ற நண்பர் திரு. நாராயணன் செய்து தந்தார்கள். நிகழ்ச்சியின் ஏற்பாடுகளை மரபு பயணக் குழு பொறுப்பாளர் திரு. மணிவண்ணன் மற்றும் கடிகை இணைய வழி பல்கலைக்கழகத்தின் பொறுப்பாளர், முனைவர் மு. பாமா செய்தார்கள்.

நிகழ்ச்சியில் பங்கேற்ற அனைவருக்கும் மின்-சான்றிதழ் அவர்களுடைய மின்னஞ்சல் முகவரி அனுப்பி வைக்கப்பட்டது. கூகுள் படிவம் வழியாகப் பெறப்பட்ட பின்னூட்டம் மூலம் நாம் அறிவது, தமிழி எழுத்துகள் மற்றும் கல்வெட்டுகள் பற்றிய தகவல்கள் பலரையும் சென்று அடைந்துள்ளது. தமிழி கல்வெட்டுகளை வாசிக்க மற்றும் பாதுகாக்க, வரலாற்றைப் பாதுகாக்கப் பல தன்னார்வலர்களை இந்தப் பயிலரங்கம் தயார் செய்துள்ளது. நம் தமிழ் மரபு வளரும் என உறுதியாக நம்புகிறோம்!

அடுத்த பயிலரங்கம் வரும் அக்டோபர் மாதம் 29ம் நடத்தத் திட்டமிடப்பட்டுள்ளது. வாய்ப்புள்ளோர் கலந்து கொள்ளுமாறு தமிழ் மரபு அறக்கட்டளையின் சார்பாகக் கேட்டுக்கொள்கிறோம்.

முனைவர் மு. பாமா,
பொறுப்பாளர்,
கடிகை இணைய வழி பல்கலைக்கழகம்

